# இன்றும் இனியும்..





கங்கை
புத்தக
நிலையம்

அ.ச. ஞானசம்பந்தன்

# இன்றும் இனியும்

பேராசிரியர்

**அ.ச. ஞானசம்பந்தன்**



**கங்கை புத்தக நிலையம்**

13, தீனதயாளு தெரு,

தி. நகர், சென்னை – 600 017.

முதற் பதிப்பு : அக்டோபர், 1994



## ஆசிரியரின் நூல்கள்

1. கம்பன் கலை
2. இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும்
3. இலக்கியக் கலை
4. அகமும் புறமும்
5. தேசிய இலக்கியம்

6. கம்பன் புதிய பார்வை
7. தத்துவமும் பக்தியும்
8. மந்திரங்கள் என்றால் என்ன
9. மகளிர் வளர்த்த தமிழ்
10. இன்றும் இனியும்
11. குறள் கண்ட வாழ்வு
12. புதிய கோணம்
13. தெள்ளாற்று நந்தி
14. திரு. வி. க.

15. பெரிய புராணம் – ஓர் ஆய்வு.

**விலை ரூ.40.00**

Laser Typeset at : LKM Computer Prints, Madras – 17

: Printed by: ELANGOVAN PRINTERS, Madras--14

# முன்னுரை

‘இன்றும் இனியும்’ என்ற இந்த நூல் கட்டுரைகளின் தொகுப்பேயாகும். பல்வேறு இதழ்களில் வெளியான கட்டுரைகளும் ஒரு வானொலிப் பேச்சும் இத் தொகுப்பில் இடம் பெறுகின்றன.

‘இன்றும் இனியும்’ என்ற தலைப்புடன் வெளிவரும் பகுதி சற்றுப் புதுமையானது. அது கட்டுரையாக எழுதப்பெறவில்லை. பூ.சா.கோ. கலைக் கல்லூரி மாணவர் புதிய முறையில் தமிழ் விழாவைக் கொண்டாட நினைத்தனர். ‘சங்ககாலம்’, ‘இடைக் காலம்’, ‘இன்றும் இனியும்’ என்ற மூன்று தலைப்பு களில் ஒவ்வொன்றிலும் இருபது வினாக்களை எழுப்பி மூவர்க்கு அனுப்பினர். அதில் மூன்றாவது தலைப்பை எனக்கு வழங்கினர்.

எழுத்திற்கும் பேச்சிற்கும் அப்படியே ஒலிப்பதிவு செய்து எழுதியதாகலின் நடையில் ஓரளவு மாறுபாடு இருக்கத்தான் செய்யும்.

என்றாலும், பல ஆண்டுகளின் முன்னர் இந் நூலாசிரியன் இதில் எழுப்பப்பெற்ற வினாக்கட்கு எத்தகைய விடை தந்தான் என்று அறிவதற்கு இது வாய்ப்பளிக்கும். பெரும்பான்மையான அளவில் இன்றும் இதில் மாறுபாடு நினைப்பதற்கு ஒன்று மில்லை எனினும் ஒரு சில இடங்களில் இன்றைய நிலையில் என் கருத்தில் ஓரளவு மாறுபாடு ஏற்பட்டுள்ளது. எனினும் அப் புதுமாற்றத்தை இதில் ஏற்றவில்லை.

இதனை நல்லமுறையில் அச்சிட்டு வெளியிட்ட கங்கை புத்தக நிலையத்தார்க்கு என் நன்றி உரியதாகும்.

**ஆசிரியன்**

# பொருளடக்கம்

# அறிமுகம்

**(பேராசிரியர் ம.ரா.போ. குருசாமி அவர்கள்)**

மனோன்மணீய ஆசிரியர் சுந்தரனார் தமிழ் மொழியைச் சீரிளமைத் திறம் வாய்ந்தது என்று கூறியதோடு, எல்லையறு பரம்பொருள்போல் இருப்பதாகவும் உவமை கூறினார். நேற்றுத் தோன்றி இன்று நலிந்து, நாளை மறையும் பொருளைப் பரம் பொருளோடு இணைதுணையாக்கி உவமை சொல்ல முடியாது. முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளாய்ப் பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியதாய் அமைவதே பரம்பொருள் இலக்கணம். உயிரூட்டம் உள்ள எந்த மொழியும் இதே பண்பினைக்கொண்டு இலங்கும். சார்வினுக்கெல்லாம் தகத் தக மாறும்; ஆயின், சென்ற காலத்து வேர் பாய்ச்சிய தொடர்ச்சி இருக்கும். சீரிளமைத் திறம் வாய்ந்த செந்தமிழ் மொழி தொன்மைப் பழமையில் வேர் பாய்ச்சியது; இற்றைச் சமுதாய நிகழ்வுகளிலே கிளைத்துச் செழிப்பது; நாளை வாழ்வின் நம்பிக்கையாய்ப் பூத்துக் காய்த்து முதிர்ந்து கனிந்த வித்தை(க்) கொடுப்பது. தளிர் இலையாகும்; இலை சருகாகும்; சருகு உதிரும்; உதிர்ந்த இடத்தில் புதுத் தளிர் குலுங்கும். எனவே, தொல் வரலாற்றுப் புதை பொருளாராய்ச்சியில்தான் தமிழைத் தேட வேண்டும் என்ற அவல நிலை தமிழ் மொழிக்கு இல்லை. பரம்பொருளோடு சரிநிகராகக் கால தத்துவத்தைத் தன்மயமாக்கிய தன்மையுடையது தமிழ்மொழி.

பேராசிரியர் அ.ச.ஞா. வின் இந்தக் கட்டுரைத் தொகுப்பைப் படித்தபோது, முதலில் எழுந்த வினா

இதுதான். பெரும்பாலும் கடந்த காலத்தின் அருட்கொடையாகிய இலக்கியக் கட்டுரைகளைக் கொண்ட இந்த நூலுக்கு "இன்றும் இனியும்" என்று ஏன் பெயரிட வேண்டும்? நேற்றைய சிந்தனையின் விளைவு இன்றைய இக்கியம்; இன்றைய அனுபவத்தின் பயன் நாளைய நோக்கு. இந்த மூன்று காலத்தையும் பிரிக்க முடியாது. ஆனால், இலக்கியம் என்ற வுடனேயே கடந்த காலப் பிண ஆய்வோடு இணைத்துக் காணுகின்ற தவறான போக்கினைப் பல இடங்களிலே காணுகின்றோம். அந்தத் தவற்றின் கொடுமுடியினைக் காட்டவே போலும் பெரும்பாலும் பண்டை இலக்கிய விளக்கமாகவுள்ள இக் கட்டுரைத் தொகுப்புக்கு இப்பெயர் அமைத்தார் என்று எண்ணத் தோன்றுகின்றது.

மகாகவி தாகூரின் நாடகத் தொகுப்புகளில் ஒரு நூலுக்கு (Sacrifice) (தியாக பலி) என்று பெயர். அதே தலைப்புள்ள நாடகத்தை அந்த நூலின் முதலில் அமைக்கவில்லை. தியாகத்தின் பல்வேறு வளர்ச்சி முறையில் விளங்குவது அந்த நாடக நூல். தியாக தத்துவம் வரவர வளர்ந்து கடைசி நாடகத்தில் தியாகத்தின் உச்சத்தைக் காட்டுவார் தாகூர். அதே போலப் பேராசிரியர் அ.ச.ஞா.வும் இந்த நூலுக்குப் பெயரிட்டுள்ளார். கடந்த காலமெல்லாம் இன்றைக்கும் நாளைக்கும் பயன்பட வேண்டும். வேறு வகையில் சொன்னால், உரமாகிவிட்ட இறந்த காலம் புறத்தே புலப்படாது வேர் பாய்ந்துள்ள கடந்த காலம் புதையுண்டிருக்கும். ஆனால், அந்த வேரின் ஊட்டம் பெற்றுத்தான் நிகழ்கால வளமும் எதிர்கால நம்பிக்கையும் சிறக்கும். எண்ண எண்ண முடிவற்றுப்

பரவுகின்ற ஆழ்ந்த கருத்துடையது நூலின் இனிய பெயர்.

இனி, நூலின் அகப்பொருள் காண்போம்:

தொன்றுதொட்டு இன்றுவரை தமிழன்னை திருநடையிட்ட நெறியின் செறிவும் சிறப்பும் தெரிய வேண்டுமா? தமிழ் இலக்கிய வளர்ச்சியின் இயல்பு தெரியவேண்டுமா? எவ்வெப்போது வளர்ச்சியின் தொய்வும் திட்பமும் காணப்பட்டன என்று அறிய வேண்டுமா? என்று பிறந்தவள் என்றுணராத இயல்பினளாகிய தமிழ் மகளின் எதிர்காலத் தேவைகளென்ன? — இத்தகைய வினாக்கட்குத் திட்ப நுட்பமான திறனாய்வு வன்மையோடு விடைகளைத் தருவன நான்கு கட்டுரைகள் (6, 7, 10, 16). கடந்த காலம் பற்றியும் நிகழ்கால நிலவரத்தைப்பற்றியும் ஓரளவே அறிந்து, எதிர்காலம்பற்றிய நம்பிக்கையோடிருப்பவர் கள் இன்றைய இளைஞர்கள். கடந்தகால நிகழ்காலங் களைப் பற்றிப் புரிந்துகொண்டு, எதிர்காலத் திட்ட மிடுவதற்கு அறிஞர் அ.ச.ஞா. போன்றவர்களை அவர்கள் நாடுவது இயற்கை. கோவையிலுள்ள பூ.சா.கோ. கலைக்கல்லூரி, பூ.சா.கோ. பொறியியற் கல்லூரி ஆகிய கல்வி நிலைய மாணாக்கர்கள் எழுப்பிய வினாக்களுக்கு அ.ச.ஞா. அளித்த விடைகளால் உருவாகியது இந்நூலின் 16-ஆம் கட்டுரை.

பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்து, தமிழக வரலாற்று ஆராய்ச்சியாளர்க்கும் இலக்கியத் திறனாய்வாளர்க்கும் பெருங் கருவூலமாகக் கையாளப்படுவது. அந்தப் பத்துப் பாடல்களையும் அதன் பதிகத்தையும் அடிப்படையாகக்கொண்டு பல பேராசிரியர்கள்

பெருங்கோட்டை எழுப்பியதுண்டு. ஆனால், அத்துணைப் பெருங்கோட்டைக்கும் அடிப்படையாக வுள்ள கடைகாலே இங்கே ஆட்டங் காணுகின்றது (14). கடைகாலே அதிரும்போது, அதன்மேலெழுந்த கோட்டையைப் பற்றி என்ன சொல்ல; இலக்கியத் திறனாய்வின் நக்கீரராகவுள்ள பேராசிரியர் அ.ச.ஞா. அவர்கள் வரலாற்று ஆராய்ச்சியிலும் தம் திறன் நாட்டும் தகுதிப் பாட்டினை இக் கட்டுரையில் காணலாம். 'ஐந்தாம்பத்துப் பாடல்களிலும் இங்ஙனம் பல அழகுகளைக் காண்டல் கூடும்'.

(இவ் அங்கதத் தீர்ப்பின் 'உம்' என்பதன் உண்மையை முடிவு செய்ய ப. 158ல் உள்ள பட்டியல் உதவும்.)

"உலகில் ஒரு மூலையில், தமிழ்நாட்டில், என்றோ ஒருநாள் தோன்றிய ஒரு நூலை, உலகப் பொதுமறை என்று கூறல் பொருந்துமா? இவ்வாறு கூறுவது உண்மை வழக்கா? அன்றி, உபசார வழக்கா?" என்று வினா எழுப்பி, 'காய்தல் உவத்தல் இன்றி ஆழ்ந்து சிந்தித்து' முடிவு காண்பது ஒரு கட்டுரை (11).

இலக்கியத்தின் நற்பண்புகளையும், அதனைப் பயிலவும் சுவைக்கவும் வேண்டிய முறைகளையும், "பொய்யாய நாகரிகத்தே புக்கழுந்தி நாடோறும் உய்வழியின்றி வருந்துந் தமிழர்க்கு என்றுங் கலங்கரை விளக்காய் நின்று உதவுவது" ஆகிய புறநானூற்றின் வாயிலாகப் புலப்படுத்துவது ஒரு கட்டுரை (15).

அறிவுவழிப் புகழ் எது? உணர்வுவழிப் புகழ் எது? இவற்றில் எது சிறந்தது? இந்த வினாக்களுக்கு விடை தருவது ஒரு கட்டுரை (5) பட்டிமண்டபப் பாங்குக்கு

*எடுப்பாக அமைந்துள்ள இக் கட்டுரை பழந்தமிழர் நாகரிகம் பண்பாடுகள் பற்றிய ஒரு மதிப்பீடு.*

*“இளமை அழகு முதலியவற்றோடு கூடித் தனித்து வாழாமல் தலைவன் என்ற கொழு கொம்பைப் பற்றியே” வாழும் பெண்மை, பிற உயிர்கள் வருந்தும் போதெல்லாம் தாமும் கரைந்துருகும் தாய்மையாகிய பெண்மை — இவ்விரு தன்மைகளிலும் மேம்பட்டு நிற்கும் வள்ளலாரை அறிமுகப்படுத்துவது ஒரு கட்டுரை (4).*

*மறைமலையடிகள் காலத்திலெழுந்தோங்கி, இன்றுங்கூட அடிக்கடி கிளப்பிவிடப்படுகின்ற ‘தனித்தமிழ்’ சிக்கல்பற்றிய ஆய்வுரை தருவது ஒரு கட்டுரை (8).*

*“சக்தி வடிவான இவ்வுலகை, மக்களின் சிறு மனத்துக்கு உள்ளவாறு விளக்குவான் வேண்டி இயற்கையன்னையே அவ்வப்போதுள்ள இன்றியமை யாமைக்கேற்றபடி” அனுப்புகின்ற வீரர்களின் சிறப்பியல்புகளை விளக்குவது ஒரு கட்டுரை (3). “தமக்கென வாழாப் பிறர்க்குரியாளரெல்லாம் வீரரே” என்ற இலக்கணத்தோடு தொடங்கும் இக் கட்டுரை, அத்தகைய வீரர் பெருமானாகிய திரு.வி.க.வின் மணிவிழா மலர்க் காணிக்கை.*

*தற்காலத் தமிழறிஞரிடையே பெருங் கருத்து வேறுபாட்டுப் புயலை எழுப்பிய பேரறிஞர் வையாபுரிப் பிள்ளைபற்றிய மதிப்பீடாக விளங்குவது ஒரு கட்டுரை (12).*

*“மிகப் பழையதாய புறநானூற்றில் காணப் பெறும் பல மரபுகள் மிகப் புதியனவாய்க்*

கவிமணியவர்களின் பாடல்களிலும் காணப்பெறு கின்றன. இவ்வாறு மரபை விடாமல் காக்கும் சிறப்புத் தமிழ்க் கவிதைக்கு உண்டு" என்று விளக்கத்தோடு கவிமணியின் கவிதை வாயிலாகக் கையறுநிலை ஆராய்ச்சி தருவது ஒரு கட்டுரை (13).

ஏட்டுக்கல்வி, கேள்விக்கல்வி, அகவுணர்வுக் கல்வி எனக் கல்வியின் படிகளைப் பகுத்துக் காட்டி, முதல் இரண்டு நிலை வேண்டாமலே அகவுணர்வுக் கல்வி பெறும் ஓதாதுணர்ந்த பெரியோர்கள் உண்டு என்பதையும் காட்டுவது ஒரு கட்டுரை. "இராம கிருஷ்ண பரமஹம்சர் போன்ற பெரியவர்களுக்கு மட்டும் இவ்வழி" உரியது; நம்மைப் போன்ற சாதாரண மக்களுக்கு உரிய கல்வி எது? இதனைத் தெளிவுறுத்து வது இக் கட்டுரை (9).

"கவிதையில் இடம் பெற வேண்டிய சொற்கள் மிகச் சிறந்த பொருட்செறிவுடன் விளங்கவேண்டும். அடுத்து, பொருட் செறிவுடைய சொற்களாயினும் சிறந்த முறையில் அவை அடுக்கப் பெறுதல் வேண்டும்" என்று தீர்ந்த முடிவினை இரு சிறு பாடற் பகுதிகளால் விளக்குவது ஒரு சிறு கட்டுரை (2).

அணிகளின் தாயகம் உவமை. பொருள் விளக்கத்திற்குக் கைகொடுக்கும் உவமை. சில சமயங் களில் உருவகமாகி உதவும். சில வேளைகளில் அப்படியும் புலவனின் உணர்வைத் திறம்பட வடித்துக் கொடுக்கச் சொற்கள் தவறிவிடுவதுண்டு; அப்போது கலைஞன் எப்படிச் சமாளிக்கிறான்? இதை முன் விளக்கமாகக்கொண்டு உவமைத் தத்துவத்தைத் தெளிவுறுத்துவது ஒரு கட்டுரை (1). உயர்ந்ததன் மேற்றே ளுங்காலை என்ற தொல்காப்பிய விதியை மீறியும்

உவமைகளைக் கையாளுவதுண்டு. காரணத்தோடு செய்யும் இம்மாறுபாட்டை இக் கட்டுரையின் பிற்பகுதி நன்கு விளக்குகின்றது.

ஈற்றில் உள்ள கட்டுரை இவர்தம் 'எண்ணத்தின் ஆற்றல்' மனத்தை ஒருமுகப் படுத்தினால், தூய எண்ணங்களை, அதில் நிரப்பினால் பெறும் பயன்கள் பல என்பார்.

செயற்கரிய செய்வார் பெரியோர் என்றது இத்தகு எண்ணங்களின் ஆற்றலைத் தம்முள் வளர்த்து வையத்தை வாழவைக்கும் சான்றோரையே குறிக்கும் என்பது தேற்றம்.

கட்டுரைகள் எல்லாவற்றையும் படித்து முடித்த பின் தோன்றும் கருத்து: என்றோ தோன்றிய தமிழ் இலக்கியத்தின் முக்காலப் பரப்பையும் அறிவொடு முரணாத உயர்வொடு பொருந்திக் கண்டு களித்தோம்; களிப்பொடு தெளிவும் பெற்றோம்.

"சென்ற காலத்தில் பழுதிலாத் திறமும் இனி எதிர் காலத்தின் சிறப்பும் இன்றெழுந்தருளப் பெற்ற பேறு" எனச் சேக்கிழார் திருஞானசம்பந்தரைக் குறிப்பிடுகின்றார். திரு. ஞானசம்பந்தர் உருவாக்கிய இந்த நூலின் கருப்பொருளுக்கும் அந்தச் சேக்கிழார் அறிமுகம் பொருந்தும்.

# 1

## உவமை நயம்

உவமை என்பது பேசத்தெரிந்த குழந்தை முதல் மாபெரும் கவிஞன் ஈறாக அனைவரும் பயன்படுத்து கின்ற ஒன்றாகும். 'அறிந்ததைக்கொண்டு அறியாததை விளக்கல்' என்பது உவமைக்குச் சொல்லப்படும் இலக்கணம். பற்பல சமயங்களில் அறிந்ததையே நன்கு விளக்கக்கூட உவமை, உருவகம் என்பவை பயன் படுகின்றன. மனிதனுடைய அறிவு விரிவதற்கேற்ப உவமையைக் கையாளுகின்ற திறமும் வளர்ச்சி யடைகின்றது. ஆதியில், உவமை தோன்றக் காரணமாக இருந்தது மேலே குறிப்பிட்ட இலக்கணமாகும். என்றாலும், காலம் செல்லச்செல்ல அறிவுத் திறத்தையும், அனுபவத்தின் ஆழத்தையும் வெளியிடும் கருவியாக உவமை அமைந்துவிட்டது. இதனால்தான் போலும் மொழி இலக்கணம் கூறவந்த தொல்காப்பியனார், 'உவம இயல்' என்ற ஒரு தனி இயலையே எழுதிச் சென்றார். நூற்றுக்கணக்கான உவம உருபுகள் தமிழ்மொழியில் நிறைந்து கிடப்பதற்கும் இதுவே காரணமாகும். பல்வேறு சந்தர்ப்பங்களில், பல்வேறு காரணங்களால் பல்வேறு உவமைகள் செய்யவேண்டிய தேவை ஏற்படுவதால்

இத்துணை அளவுக்கு உவம உருபுகள் தேவைப்பட்டன போலும்.

சங்க இலக்கியம் தொடங்கிக் கவிச்சக்கரவர்த்தி பாரதி ஈறாகவுள்ள நூற்றுக்கணக்கான தமிழ் இலக்கியங்களில், தமிழ்க் கவிதைகளில் உவமை பல்வேறு வடிவங்களில் காட்சியளிக்கின்றது. வினை, பயன், மெய், உரு என்ற நான்கும் பற்றி உவமை தோன்றும் என்று தொல்காப்பியனார் குறிப்பிட்டார். இந்த நான்கின் அடிப்படையில் இன்றைக்கு உவமை நாற்பதாக விரிந்து உள்ளது என்றுகூடக் கூறலாம். மேலே கூறிய நான்கு வகை உபமானங்களையும் அவற்றோடு தொடர்புடைய உருவகங்களையும் கம்பநாடன் பெரிதும் பயன்படுத்துகின்றான். எல்லாக் கவிஞர்களுமே உவமை, உருவகம் ஆகியவற்றைப் பயன்படுத்துகிறார்கள் என்றால் இதன் தனிப்பட்ட சிறப்பு யாதாக இருத்தல்கூடும் என்று சிந்திக்கத் தோன்றுகிறது அல்லவா? உண்மையைக் கூறுமிடத்து ஒரு புலவனுடைய சிறப்பை அறிவதற்கு அவன் கையாளும் உவமை ஒன்றே போதுமானது எனலாம். அன்றாடம் நூற்றுக்கணக்கான பொருள்களை நம் போன்றவர்கள் காண்கின்றோம். ஆனால், இப் பொருள்களினிடையே காணப்பெறும் ஒப்புமை நம் அறிவில் படுவதில்லை; பட்டாலும் அவற்றின் உண்மை விளங்குவதில்லை. இன்னும் பல சமயங்களில் புறத்தே காணப்படும் ஒப்புமை மனத்திற் படுகிறதே தவிர, ஆழ்ந்துள்ள ஒப்புமை நம் கவனத்தை ஈர்ப்பதில்லை. தொடர்பற்ற பொருள்களினிடையே கூடச் சிறந்த கவிஞன் ஒப்புமையைக் காண்கின்றான்; நம்மையும் காணுமாறு செய்கின்றான். நாம் கண்டுங் காணாத பொருள்களை விளக்க உதவுவதுடன்,

அடிக்கடி காணும் பொருள்களின் தனிச்சிறப்பை விளங்கிக்கொள்ளவும் உவமையைப் புலவன் கையாள்கிறான். ஆகவேதான், அவனுடைய புலமைச் சிறப்பு இதன்மூலம் வெளிப்படுகிறது என்று சொல்கிறோம்.

தருமம் என்ற ஒன்றைப்பற்றி நாம் கேள்விப் பட்டிருக்கிறோம். என்றாலும், நுண்ணிய கருத்துப் பொருளாகிய அதைப்பற்றி நன்கு மனத்தில் வாங்கிக் கொள்ளுவதும் அதனை விளங்கிக் கொள்வதும் கடினமாகும். சந்திரனை நாம் அனைவரும் கண்டுள்ளோம். நிர்மலமான ஆகாயத்தில் முழுச் சந்திரன் புறப்படும்பொழுது நம்முடைய கவனத்தைப் பற்றி ஈர்க்கின்றது. என்றாலும், இருளைக் கிழித்துக் கொண்டு புறப்படுகின்ற இந்தச் சந்திரன், நம் வாழ்வில் பலமுறை கண்ட இச் சந்திரன், நம்முடைய கற்பனையில் மட்டும் காட்சி அளிக்கின்ற தருமத்துடன் தொடர்பு கொள்ளுமாறு கவிஞன் செய்கிறான். 'தருமத்தின் வதனம் என்னப் பொலிந்தது தனி வெண் திங்கள்' என்று கம்பநாடன் கூறும் பொழுது, இதுவரையில் நம்முடைய கற்பனையில், அக மனத்தில் மட்டுமே அறியப்பெற்ற தருமம், திடீரென்று முழுவடிவும் ஒளியும் பெற்று நம் கண் எதிரே காட்சி அளிக்கின்றது. இத்தகைய ஒரு பயனை - அதாவது கருத்தில் மட்டும் அறிந்த ஒன்றைக் கட்புலனுக்கும் எளிதாகக் கொண்டு வந்த புதுமையை கவிஞன் உவமையால் செய்துவிடுகிறான். 'சிரித்த பங்கயம் ஒத்த செங்கண் இராமன்' என்று கவிஞன் குறிப்பிடும் பொழுது தாமரைக்கு இல்லாத ஒரு சிறப்பை அதாவது சிரிக்கின்ற இயல்பை அத் தாமரையினிடம் ஏற்றி, அதனை நம்முடைய உள்ளத்திற் புகுத்திய பிறகு

சக்கரவர்த்தித் திருக் குமாரனின் கண்களை நாம் காணுமாறு செய்கிறான். 'பங்கயக் கண்கள்' அல்லது கமலம் போன்ற கண்கள் என்று கூறினால், அக் கமலம், விரிதல், மலர்தல், கூம்புதல், வாடுதல் ஆகிய பல நிலைகளுக்கும் உட்பட்டதன்றோ? எனவே, இராமபிரானுடைய கண்கள் எந்த நிலையிலுள்ள தாமரையை ஒத்து இருந்தன என்று ஐயப்படுபவர்களுக்கு அவர்கள் ஐயப்பாட்டைப் போக்குபவன் போலச் 'சிரித்த பங்கயம்' என்று கவிஞன் கூறுகிறான். இந்தச் சொற்களை கூறிய உடனேயே புதிதாக மலர்ச்சி அடைந்த தாமரை நம் கண்முன் காட்சி அளிக்கின்றது. எனவே, இராமனுடைய கண்களின் மலர்ந்த, மகிழ்ச்சியுடன் கூடிய நிலை நினைவுக்கு வருகிறது.

சிற்சில சந்தர்ப்பங்களில் இவ்வளவு சிறப்புடைய உவமையும் இதனோடு தொடர்புடைய உருவகமும் கவிஞனின் மனத்தில் எண்ணிய கருத்தை முழுவதும் வெளிப்படுத்த முடியாமற்போவதும் உண்டு. அத்தகைய சந்தர்ப்பங்களில், மொழிக்கு இயற்கையாக உள்ள, கருத்தை வெளிப்படுத்த முடியாத குறை பாட்டை எண்ணிக் கவிஞனே வருந்துகின்றான். அவனால் செய்யத்தக்கது ஒன்றுமில்லை என்று கண்டபொழுது கையை விரிப்பது தவிர, அவன் செய்யத் தக்கது ஒன்றும் இல்லை. கவிச்சக்கரவர்த்தி கம்பநாடன் கூட இதற்கு இலக்காகிவிடுகின்றான். இலக்குவனாம் தம்பியோடும், மிதிலைப் பொன் னாகிய சானகியோடும் இராமன் காட்டில் நடந்து செல்கின்ற காட்சியை வருணிக்கத் தொடங்கு கின்றான் கவிஞன். மாலை நேர வெயில் இராமனுடைய நீல மேனியில் பட்டுத் தெறிக்கின்ற

அழகைச் சொல்ல வந்த கவிஞன், அந்த அழகைக் கற்பனையில் கண்டு அதனுடன் அமையாமல் தான் கண்ட காட்சிக்கு வடிவு கொடுக்கவும் விரும்புகிறான். **'மையோ, மரகதமோ, மறிகடலோ மழை முகிலோ'** என்று தொடங்கிய கவிஞன், இத்தனை சொற்களைப் பயன்படுத்தியுங்கூட அந்த அழகை முழுமையும் தான் கூறமுடியவில்லை என்ற உண்மையை உணர்கின்றான். வேறு எத்தனை சொற்களைப் பயன்படுத்தினும் அந்த அழகை முழுவதும் வருணிக்க முடியாது. அதாவது சொல்லால் வருணிக்க முடியாது என்ற பேருண்மையை உணர்கின்ற கவிஞன், **"ஐயோ! இவன் வடிவு என்பதோர் அழியா அழகு உடையான்!"*** என்று கூறுமுகத்தான் தன்னுடைய ஆற்றாமையைத் தெரிவிக்கின்றான். இரக்கக் குறிப்பை உணர்த்தும் **'ஐயோ'** என்ற சொல் நான்காவது அடியின் முதலில் பயன்படுத்துவதன் மூலமாக மூன்றாவது அடி முழுவதிலும் பயன்படுத்திய உருவகத்திற்கு ஒப்புமை இல்லாத ஒரு தனிச்சிறப்பைக் கவிஞன் நல்கி விடுகின்றான்.

"உயர்ந்ததன் மேற்றே உள்ளும் காலை" என்பது தொல்காப்பியம். அதாவது, ஒப்புமை சொல்ல வேண்டிய காலத்தில் உயர்ந்த பொருள்களோடு ஒன்றை உவமிக்க வேண்டுமே தவிரத் தாழ்ந்த பொருள்களோடு உவமித்தல் ஆகாது என்பதே இதன் கருத்தாகும். ஒருவனுடைய சிறந்த வல்லமைக்கு உவமை கூறவேண்டுமானால், யானையைப் போன்ற வல்லமையுடையவன் என்று கூற வேண்டுமே தவிர, எருமை அல்லது பன்றி போன்ற வல்லமையுடையவன்

* கம்பராமாயணம் – 1926

என்று கூறுதல் ஆகாது. வல்லமை என்பதை மட்டும் எடுத்துக்கொண்டால் பன்றி, எருமை என்ற இரண்டும் உவமைக்குத் தகுந்த பொருள்களாயினும், அவை தாழ்ந்த விலங்குகளாதலின் உவமைக்கு ஏற்றவை அல்ல. இதையும் மீறி எங்காவது ஓரிடத்தில் கவிஞன் தாழ்ந்த உவமையைக் கையாளுவானேயாகில் அதற்கு ஒரு தனிக் கருத்து இருத்தல் வேண்டும். அதுவும் கம்பன், சேக்கிழார் போன்ற கவிச்சக்கரவர்த்திகள் இத்தாழ்ந்த உவமையைப் பயன்படுத்துவார்களே யானால் நிச்சயமாக அதில் ஓர் உட்கருத்து அடங்கி இருக்கும். எனவே, கவிதையைப் படிக்கின்றவர்கள் இக் கருத்தை உணர்ந்து, சிந்திக்க முற்படவேண்டும். கண்ணப்பர் என்று கூறப்பெறும் திண்ணனார், நாணன் என்ற வேடனுடன் காளத்தி மலைமேல் ஏறினார். அங்குக் குடுமித் தேவரைக் (காளத்தி மலை மேலுள்ள இறைவனின் பெயர்) கண்டு அவரை அணைத்துக்கொண்டு மயங்கி நின்று இறங்கி வரவும் மனமில்லாது மலையிலேயே நெடும்பொழுது தங்கி விட்டார். இறுதியில் நாணன் உடன் இருப்பதை அறவே மறந்து, மலையில் இருந்து கீழே இறங்கி வருகிறார். திண்ணனாருடன் வேட்டைக்குச் சென்ற காடன் என்ற மற்றொரு வேடன், திண்ணனார் காலம் தாழ்ந்து வந்ததைக் கண்டு சினந்து, "என் செய்தாய் திண்ணா நீ?" என்று கேட்கின்றான். ஆனால், அவன் கேட்ட கேள்வியைக் காதிற்கூடத் திண்ணனார் வாங்கிக் கொள்ளவில்லை. இதனிடையில் திண்ணனாருடன் மலை ஏறிச் சென்றிருந்த நாணன், காடனுக்கு விடை கூறுபவனாகிக் கீழ்கண்டவாறு பேசுகின்றான்.

அங்(கு) இவன் மலையில் தேவர் தம்மைக்கண்(டு)
அணைத்துக் கொண்டு
வங்கினைப் பற்றிப் போதா வல்லுடும்(பு)
என்ன நீங்கான்

(பெரிய புராணம்)

என்று பேசுகின்றான்.

அதாவது "மலையின்மேல் உள்ள குடுமித் தேவரை அணைத்துப் பிடித்துக்கொண்டு மரப் பொந்தை பற்றிக்கொண்டு விடாத உடும்பைப்போல் விடமாட்டேன் என்று தங்கிவிட்டான்" என்று கூறுகிறான். திண்ணனார் இறைவனைப் பற்றிக் கொண்டு விடமாட்டேன் என்று இருந்த ஒப்பற்ற செயலை இந்த உவமையினால்தானா விளக்க வேண்டும் என்று நாமே வியப்படைகிறோம்! பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடுகின்ற சேக்கிழார் இந்த உவமையை எவ்வாறு கையாண்டார் என்றும் வியக்கிறோம். ஒரு சிறிது சிந்தித்துப் பார்த்தால் உண்மை புலப்படும். இவ்வேடுவர் இருவரும் கல்வி வாசனையோ பிற பண்போ சிறிதும் இல்லாதவர்கள். எனவே, நாணன் கூற்றாக வருகின்ற உவமை இதைவிட உயர்ந்ததாக இருந்திருப்பின் அது சேக்கிழாருடைய கவித்திறனுக்கு ஏற்றதாகாது. உண்மையைக் கூற வேண்டுமானால் இம்மாதிரி இடங்களில் பாத்தி ரத்தின் பண்பை விளக்குகின்ற உவமையாக அமைய வேண்டுமே தவிர உயர்ந்ததாக மட்டும் அந்த உவமை இருத்தல் தகாது. இந்த உவமையைக் கூறுவதாலேயே சேக்கிழாருடைய கவிதைச் சிறப்பு நன்கு வெளிப் படுகிறது. கல்வி அறிவு இல்லாத வேடன் ஒருவன், தான் அன்றாடம் காண்கின்ற உடும்பை உவமப் பொருளாகக் கூறுவதுதான் பொருத்தமே தவிர வேறு

எத்தகைய உயர்ந்த உவமையையும் கையாளுதல் ஆகாது.

இதற்கு மாறாகக் கவிச்சக்கரவர்த்தி கம்பநாடன் மிக உயர்ந்த பாத்திரமான இலக்குவன் கூற்றில் இத்தகைய தாழ்ந்த ஓர் உவமையைக் கையாளு கின்றான். இந்த இடத்தில் பேசுகிறவன் கல்வி கேள்வி களில் மிக்கவனாம் இராமபிரானின் தம்பியாகிய இலக்குவன் ஆவான். என்றாலும், தமையனுக்குக் கிடைக்கவேண்டிய முடியைச் சிற்றன்னை ஏமாற்றிப் பறித்துவிட்டாள் என்ற எல்லையற்ற கோபம் காரணமாக, "மூட்டாத காலக் கடைத்தீ" என மூண்டு எழுந்து நின்று பேசுகின்றான். அவனுடைய கோபம், மேல் உலகத்தையும் சுட்டெரிக்கக்கூடியதாய் மூண்டு நின்ற நிலையை, இராகவனே கண்டு மனம் வருந்தி, இலக்குவன் கொண்ட கோபம் தவறானது என்று பேசுகின்றான். முறை தவறித் தோன்றுகின்ற இத்தகைய சீற்றம், இலக்குவன் போன்ற பண்புடைய ஒருவனுக்குத் தோன்றக்கூடாது என்ற உண்மையை, இராகவன், "உளையா அறம் வற்றிட, ஊழ் வழுவுற்ற சீற்றம், விளையாத நிலத்து, உனக்கு எங்ஙண் விளைந்தது?" என்று கேட்கும் வினாவிலேயே அடுக்குகிறான். இத்துணை அளவு கோபத்தில் கொதித்து எழுந்த இலக்குவன், பேசுகின்ற பேச்சுகள் மிகத் தாழ்ந்த மனநிலையில் உள்ள ஒருவன் பேசுகின்ற பேச்சுக்களாகவே அமைந்து விட்டன என்பதையும், கமலக்கண்ணன், "வாய் தந்தன பேசுதியோ, மறை தந்த நாவால்" — அதாவது, வேதத்தை ஓயாது பாராயணம் செய்கின்ற திருவாயால் வழங்கத் தகாத வார்த்தைகளை நீ பேசலாமா என்ற கருத்துப்படக் கேட்கின்றான். இராமனின் இக் கூற்றுகளால்

இலக்குவனுடைய மனோநிலை கோபம் காரணமாக எவ்வளவு தாழ்ந்த நிலைக்குச் சென்றுவிட்டது என்பதை நமக்கு நன்கு விளக்குகின்றன. இத்தகைய சீற்றத்துடன், இத்தகைய ஒரு பண்பிழந்த மனோ நிலையில் இலக்குவன் ஓர் உவமை கூற நேர்ந்தால், அவன் கல்வி, அறிவு, பண்பாடு ஆகியவற்றிற்கு ஏற்ற உவமை கூறுவான் என்று எதிர்பார்ப்பதும் தவறு. அப்படியே அவன் கூற்றாக உயர்ந்த ஓர் உவமையைக் கவிஞன் கூறியிருப்பின் கம்பன் கவிஞனாக ஆகலாமே தவிர கவிச்சக்கரவர்த்தியாய் ஆக முடியாது. கவிச்சக்கரவர்த்தி கம்பனா இத் தவற்றைச் செய்வான்? எனவே, மிகமிக விழிப்புடன் இலக்குவன் கூற்றாகக் கீழ்க்கண்ட உவமையைக் கவிஞன் தருகின்றான்.

இராமனுக்குக் கிடைக்கவேண்டிய முடியைப் பரதனுக்குக் கைகேயியே பெற்று வைத்தது எதைப் போல இருக்கிறதென்றால், சிங்கக் குட்டிக்கு எனத் தயாரித்து வைத்த இன்சுவையோடுகூடிய புலாலை அற்பத்தனம் பொருந்திய சொறி நாய் ஒன்றுக்கு இடுவது போலாகும் என்ற கருத்தில் இலக்குவன் பேசுகின்றான்.

**சிங்கக் குருளைக்கு இடுதீம் சுவை ஊனை, நாயின்**
**வெங்கண் சிறுகுட் டனை ஊட்ட விரும்பி னாளே!**

**(கம்பன் – 1718)**

என்ற இலக்குவன் கூற்று ஆய்தற்குரியது.

“அறத்தின் அணி” என்று விஸ்வாமித்திரனாலும், “ஆயிரம் இராமர்கட்கும் மேம்பட்டவன்” என்று இராமன் தாயாகிய கோசலையாலும் புகழப்பெற்ற பரதனை “தள்ளரிய பெருநீதித் தனி ஆறு புக மண்டும் வெள்ளம்” என்றும் புகழப்பெற்ற பரதனை

"வெங்கண் நாயின் சிறு குட்டன்" என்று இலக்குவன் பேசுகின்றான் என்றால் அது மன்னிக்க முடியாத பெரும் பிழையாகும். ஆனால், வேண்டுமென்றேதான் கவிச்சக்கரவர்த்தி இந்த உவமையை இலக்குவன் கூற்றாகக் கையாளுகின்றான். இது தவிர, வேறு எந்த உவமையையும் இலக்குவன் கையாண்டு இருப்பினும் அவனுடைய தாழ்ந்துவிட்ட மனநிலையை அவ்வுவமை எடுத்துக் காட்டாது. இவ்வாறு இலக்குவன் கூறும் உவமையின் மூலமாகவே அவன் மனநிலையை எடுத்துக் காட்டுவதை விட்டுவிட்டுக் கவிஞன் நூறு பாடல்கள் மூலம் இலக்குவன் மனநிலையை எடுத்துக்கூறி இருப்பினும் இப் பயன் விளையாது. மேலாகப் பார்ப்பவர்கள் உவமை என்று நினைத்து விட்டுவிட, ஆழ்ந்து சிந்திப்பவர்கள் இலக்குவன் மனநிலையை அப்படியே படம்போல் காண வழி வகுத்துவிட்டான் கவிஞன். எனவே இந்த அற்புதமான உவமையைக் கையாள்வதன்மூலம் கவிச்சக்கரவர்த்தி இலக்குவனுடைய தாழ்ந்துவிட்ட மனோநிலையைக் காட்ட முடிந்ததுடன், தன்னுடைய கவித் திறத்தையும் உலகிற்குக் காட்டி விடுகின்றான். உவமை ஒன்றால்மட்டும் புலமையை அளந்துவிட முடியும் என்பதற்கு இது ஒன்றே நல்ல எடுத்துக் காட்டாகும்.

2

# சிறந்த கவிதை

சிறந்த கவிதை எது என்பதைக் கூறவந்த மேனாட்டுத் திறனாய்வாளர் 'மாத்யூ அர்னால்ட்' என்பார், 'சிறந்த சொற்களை, சிறந்த முறையில் அடுக்கப் பெற்றதே சிறந்த கவிதை'யாகும் என்றார். அவ்வாறானால், சிறந்த கவிதைக்கு இரண்டு இலக்கணங்கள் தேவைப்படுகின்றன. முதலாவது, கவிதையில் பெய்யப்பெற்றுள்ள சொற்கள் சிறந்த சொற்களாக அமையவேண்டும். சொற்களுள், சிறந்தவை சிறப்பில்லாதவை என்று இருவகை உண்டா என்று வினவலாம். உண்மையாகவே, இருவகை உண்டு. நிறைந்த பொருள் ஆழம் பெற்று விளங்குகின்ற சொற்களை சிறந்தவை என்றும், பொருள். செறி வில்லாமல் ஒரேயொரு பொருளை மட்டும் தாங்கி நிற்கும் சொற்கள் சிறப்பு இல்லாதவை என்றும் கூறப்பெறும். கவிதையில் இடம்பெற வேண்டிய சொற்கள் மிகச் சிறந்த பொருள் செறிவுடன் விளங்க வேண்டும். அடுத்து, பொருள் செறிவுடைய சொற்களா யினும் சிறந்த முறையில் அவை அடுக்கப்பெற வேண்டும். 'இலங்கை சென்று பலவிடங்களிலும் தேடி, இறுதியாக, சீதையைக் கண்டேன்' என்று கூற வருகிறான் சொல்லின் செல்வனாகிய அனுமன்.

ஆனால், சீதையைப் பற்றிப் பெருந்துயர் எய்தி நிற்கும் இராமன் முன்னா, நீண்டதொரு சொற்பொழிவு செய்து, இறுதியாக, 'சீதையைக் கண்டேன்' என்று கூறுவது சாதாரணமாகச் சொற்களை அடுக்கும் முறையாகும். ஆனால், சிறந்த முறையில் இதை அடுக்க வேண்டுமானால், **'கண்டனன் கற்பினுக்கு அணியைக் கண்களால்'*** என்று கூறுவதே சிறந்த முறையாகும். இலக்கண முறைப்படி பார்த்தால், 'கற்பினுக்கு அணியைக் கண்களால் கண்டனன்' என்றே கூறி இருக்க வேண்டும். இம் முறையை விட்டுவிட்டு, 'கண்டனன்' என்ற சொல்லை முதன் முதலில் பெய்வதே சிறந்த முறையில் சொற்களை அடுக்குவது ஆகும். எனவே, கவிதை சிறந்த சொற்களைச் சிறந்த முறையில் அடுக்குவதால் பெறப்பெறுகின்ற ஒன்றாகும்.

கோதைப் பிராட்டியாரின் பாடல்களுள்,

> தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய
> தூபம்கமழத் துயில்அணைமேல் கண்வளரும்
> மாமன் மகளே மணிக்கதவம் தாள்திறவாய்
>
> (திருப்பாவை)

என்ற பாடல் ஒன்றாகும். இப் பாடலுள் தலைவி உறங்குகின்ற வீட்டின் பெருமை முதல் அடியில் பேசப் பெறுகிறது. வீடோ ஒளிபொருந்திய மணிமாடம். அந்த வீட்டிலும் சுற்றும் விளக்கு எரிகின்றதாம்; நல்ல நறுமணம் வீசும் வாசனைப் புகையும் மணம்வீசி நிற்கின்றது. ஏற்கெனவே ஒளி பொருந்திய மாடத்துக்கு மேலும் ஒளியூட்டுவதற்காகச் 'சுற்றும் விளக்கெரிய' என்று கூறுகிறார் ஆசிரியர். அனைவரும் உறங்குகின்ற

* கம்பராமாயணம் – 6031

விடியற்கால நேரத்தில் மாளிகையின் அறைகளி னுள்ளே விளக்கு இருக்கலாம். ஆனால், அதைக் கூறாமல் 'சுற்றும் விளக்கெரிய' என்று ஆசிரியர் பாடுவதில் ஏதோ ஓர் உண்மை இருத்தல் வேண்டும். வெறும் மரபுபற்றி இங்ஙனம் பாடிவிட்டார் என்று நினைத்தால் கவிதையை நன்கு உணராதவர்களாக ஆகிவிடுவோம். எனவே, சற்று நின்று சிந்திக்க வேண்டும்.

அனைவரும் உறங்குகின்ற வீட்டை வருணிக்க வந்த ஆசிரியர், 'சுற்றும் விளக்கு எரிகின்ற வீடு' என்று கூறவந்த காரணம் யாது? பின்னர்க் கூறப்போகின்ற கருத்தை வலியுறுத்துவதற்காகவே இதனை விரிவு படுத்திப் பேசுகின்றார் என்ற உண்மையை அறிதல் வேண்டும். அதாவது, தலைவி இறைவனுடைய புகழைப் பாடிக்கொண்டிருக்க வேண்டிய நேரத்தில் இன்னும் உறங்குகின்றாள்; எனவே, அவளுடைய மனத்தில் இருள் மண்டிக் கிடக்கின்றது என்ற கருத்தை வலியுறுத்த வருகின்றார் ஆசிரியர். ஆகவேதான், வீட்டைச் சுற்றி விளக்கு எரிந்தாலும், அந்த விளக்குகள் புற இருளைக் கடிகின்றனவே தவிர, தலைவியினுடைய அகத்திலுள்ள இருளைப் போக்கவில்லையே என்ற கருத்தைப் பேசுகின்றார். புற இருளைப் போக்குகின்ற விளக்கை நன்கு வலியுறுத்துவதற்காகச் 'சுற்றும் விளக்கெரிய' என்று பாடுகின்றார். விளக்கு எரிகின்ற செயலை, அதுவும் வீட்டைச் சுற்றி எரிகின்ற செயலை நம்முடைய கற்பனையில் கொண்டு வந்தவுடன், துயில் அணைமேல் பள்ளிகொள்ளும் தலைவியின் மன இருள் பளிச்சென்று நம்முடைய கருத்தில் காட்சி அளிக்கின்றது.

இனி, துயில் 'அணைமேல்' தலைவி கண்வளர் கின்றாள் என்கிறார். அதுவும் ஒரு கருத்தை உட் கொண்டே நிற்கிறது. துயிலணை எவ்வளவு மென்மை உடையதாக இருக்கிறது. புறத்தே வலிய துணியால் மூடப்பெற்றிருப்பினும் அகத்தே மெல்லிய பஞ்சன்றோ புதைந்து கிடக்கின்றது. அப்பஞ்சு தன்மாட்டுத் தலைசாய்த்தார்க்குத் தன்னுடைய இனிய மெல்லிய ஊற்றுணர்ச்சியால் இன்பம் பயக்கின்றது. என்றாலும் என்ன? அத்தகைய தலையணையில் தலைவைத்துக் கண்வளரும் தலைவியின் உள்ளத்தின் மென்மைத் தன்மை சிறிதும் இல்லையே. இறைவனை நினைந்து உருகாத மனம் கல்லினும் கடியதன்றோ? 'வல்நெஞ்சப் பேதையர்போல்' என்றே மணிவாசகரும் கூறுவதைக் காணவேண்டும். எனவே, வீட்டையும் தலையணை யையும் வருணிக்கின்ற முறையில், தலைவியின் அக இருளையும் மனத்திண்மையையும் ஒப்புயர்வற்ற முறையில் இப்பாடல் விளக்கிநிற்கக் காண்கிறோம். இம்முறையைக் கைவிட்டு, வேறு எம் முறையில் தலைவியின் நிலையை, அவளுடைய இருண்ட உள்ளத்தை ஆசிரியர் கூறியிருந்தாலும் அது சிறந்த கவிதையாக ஆகாது. ஆகவேதான், இப் பாடலில் திறனாய்வாளரின் முழு இலக்கணமும் நன்கு அமையக் காண்கிறோம்.

3

# வீரர் வழிபாடு

தமக்கென வாழாப் பிறர்க்குரியாளரெல்லாம் வீரரே! தம் வாழ்நாள் முழுமையும் அவ்வாறே வாழ்ந்து, நாட்டுப் பணியும் மக்கட் பணியுமே தமது கடன் எனப் பணியாற்றிய ஒரு வீரர் குறித்து கட்டுரை வரைவது மிகவும் பொருத்தமுடையதே.

முதலாவது வீரர் யார்? வீரம் என்பது யாது? எனப் பார்ப்போம். மக்கள் யாவரும் இறைவனால் படைக்கப்பட்டவரேயாவர். ஆனால், உயிர் வளர்ச்சி முறையில் (Evolution) வரும் ஒவ்வொருயிரும் அதன் பழைய பிறவிகளுக்கு ஏற்ப இப் பிறவியில் மனோநிலை பெற்றிருக்கும். யாவர்க்கும் பொதுவான உயிர்க் குணங்கள் இருப்பது தவிர, ஒவ்வோர் உயிர்க்கும் சிறப்பாகச் சில குணங்கள் இருக்கும். சிறப்பியல்புகள் காரணமாக அவரவர் பெருமை சிறுமை வெளிப்படும். இதனால் பிறருக்கு நன்மை விளைவிக்கக்கூடிய சிறப்பியல்பு பெற்றோரே பெரியார் எனப்படுவர் என அறிகிறோம். இவர்களது துணைகொண்டே இவ்வுலகம் நடைபெறுகிறது. இவ்வுலகின் சரிதம் அறிய வேண்டின், இவர் சரிதம் காணலே போதுமானது. இவர்களே மக்கள் இனத்தின் தலைவர்கள். உலகைச் சீர்படுத்தி அதற்கு வரம்பிட்டு மனித சமூகம்

அதன்வழி நடைபெறுமாறு செய்வோர் இவ் வீரரே. உலகின்கண் இன்று காணப்படும் செயற்கருஞ் செயல்கள், முடிந்தனவும் நடக்கின்றனவும் நடைபெறப் போகின்றனவும் ஆன அனைத்தும் இவ் வீரரது கனவிற்றோன்றி நனவில் வெளிப்பட்டனவேயாம். இவ் வீரர்களைப்பற்றிக் காணும் காலம் வீண் காலமாகாது; படிப்பார்க்கு உறுதுணையாய் நிற்கும்.

இவ்வகை வீரர்கள் கருவில் திருவுடையராய்த் தோன்றுகின்றனரேயன்றிப் பிறரால் ஆக்கப்படுவ தில்லை. அவர்கள் யாண்டுத் தோன்றினும், எப்பொழுது தோன்றினும் உலகம் அவர்களை நன்கு அறிந்து கொள்கிறது; அவர்களை வெளிக்குக் கொணர்ந்து அவர்கள் சொற்படி நடக்க முற்படுகிறது; அவர்களைப் போற்றி அவர்கள் பின் செல்கிறது. எத்துணை முன்னேற்றம் ஏற்படினும் இத்தகைய வீரர்களைப் புறக்கணித்தல் இயலாத காரியம். நாகரிகம் என்ற அழுக்கு மிகுதியும் ஏறாத மிகப் பழங் காலத்தில், மனித சமூகம் திறந்த மனத்தோடு இயற்கையின் உண்மைத் தன்மையை, அவள் காட்டிய வண்ணம் அறிந்து கொள்ளும் சக்தியுடையதாக இருந்தது. ஆழ்ந்ததும், தூய்மையானதும், ஏற்றுக் கொள்ளும் சக்தியும் உடைய அப்பழங்கால மனிதனுடைய மனம், இயற்கையின் சக்திகளைக் கேவலம் ஒரு பெயரிட்டு அழைத்துவிட்டு அதனோடு திருப்தி அடையவில்லை. அதற்கு மாறாக, இயற்கை யின் பெருமையிலும் சக்தியிலும் ஈடுபட்டு நின்றது; அதற்கொரு பெயரிட்டழைக்கும் சக்தியற்றிருந்தது. மனிதனுக்கு இயற்கை அன்னை, மாயோன் மேயகாடுறை உலகாகவும், சேயோன் மேய மைவரை உலகாகவும், தீம்புனல் உலகாகவும், பெருமண

லுலகாகவும் அவனது மனம் எவ்வளவு விரிந்து செல்லினும் அவ்வளவுக்கும் இடந்தரும் சக்தி வடிவாகவும், என்றும் அவனுக்குப் புத்துணர்ச்சிகளை ஊட்டும் சித்துப் பொருளாகவும் இருந்தாள். இன்றும்தான் என்ன? எத்துணைப் பெயர்கள் வைத்தும் இயற்கையின் வடிவங் கண்டார் யார்? இன்னும் அவள் கற்பனை கடந்த சோதியாகத் தானே உள்ளாள்! ஆயின், இன்றைய மனிதன் பழக்க வழக்கங்களால், போலி நாகரிகம் என்று கூறப்படும் இருப்புக் கூட்டில் அடைபட்டு, அதற்கு அப்பாற் காணும் தன்மையை இழந்து நிற்கின்றான். என்றைக் காவது அறிவியல் நூல் (Science), இயற்கையின் தன்மையும் வன்மையும் இத்துணைதான் என்று கூறியது உண்டோ? அவ்வாறு கூறுமாயின் அது அறிவியல் நூல் ஆமோ? அறிவியல் துறையில் உண்மை காணமாட்டாதார் அன்றோ, இயற்கையின் முடிவை விஞ்ஞானம் கூறிற்று என்று கூறுவர்? இத்தகைய இயற்கை அன்னை காலம் என்ற பெருவெளி வழியே செல்கின்றாள். காலம்! சற்று நின்று ஆராய்வோ மாயின் எல்லையற்றதாய், ஓய்வற்றதாய் சென்று கொண்டிருக்கும். அக்காலம், எல்லையற்ற வேகத்தில் புரண்டு செல்கையில் இவ்வண்டம் அதன்மீதன்றோ மிதந்து செல்கின்றது. இவ்வாறு செல்கின்ற அண்டத்தின்கண் உள்ள உலகம் எங்கே? அதன் ஒரு சிறு வடிவாம் தேசம் எங்கே? அதன் அங்கை என உள்ள நாடு எங்கே? ஊர் எங்கே? அவ்வூரிலுள்ள சிறு மனிதன் எங்கே? இவனா எல்லையற்ற இயற்கையின் வன்மையை ஆராய்பவன்? சக்தியற்ற மனிதனா இதன் தன்மையை ஆராய்ந்து முடிவு காட்டுபவன்? சக்தி; சக்தி; யாண்டும் சக்தி வடிவே துலங்குகின்றது.

இத்தகைய சக்தி வடிவான இவ்வுலகை, மக்களின் சிறு மனத்துக்கு உள்ளவாறு விளக்குவான் வேண்டி இயற்கை அன்னையே அவ்வப்போதுள்ள இன்றியமையாமைக்கேற்றபடி வீரர்களை உலகிற்கு அனுப்புகின்றாள். அவர்கள் வந்த பிறகே உலகம் இயற்கையையும் அதன் படைப்பையும் உள்ளவாறு கண்டு மகிழ்கின்றது. இவ் வீரர்களால் மனிதனது அகக்கண் திறக்கப்பட்டபொழுது மனிதன் இயற்கையின் சக்தியைக் காண்கின்றான். ஒரு புல்லின் வழியாகக்கூட, எல்லையற்ற பரம்பொருளின் வடிவைப் பலகணியின் வழியாகக் காணுவதுபோலக் காண முடிகிறது. யாரொருவன் தானாக இப் பொருள்களின் இயற்கை அழகைக் காணவும், அவ் அழகின் மூலம் அதனை இயற்றிய பரம்பொருளின் தன்மையை உணரவும் செய்கின்றானோ, அவனைக் கவிஞன் என்றும், கலைஞன் என்றும், சுருங்கக் கூறுமிடத்துக் கருவில் திருவுடையவனென்றும் உலகம் கூறுகின்றது. எனவே, இறைவனுடைய படைப்பைக் கண்டு, இறைவனுடைய தன்மையை உணரக் கூடுமாயின் அப் படைப்புகள் பெருமையுடையன அன்றோ? அவ்வுயர்ந்த படைப்புகளுள் இம் மானுட சரீரமும், இப் பொறி புலன்களும், இவ்வுயிரும் சிறப்புடையன அன்றோ? அதனாலேதான் போலும் நோவாலிஸ்' (Novalis) என்ற பெரியார் "உலகிலேயே ஒரு கோவில்தான் உள்ளது; அது மனித சரீரம்தான்! அதனைவிடத் தூய்மையுடையது வேறொன்றுமில்லை மனிதர்களுக்கு வணக்கம் செலுத்துவது உடலோடு அமைந்த இறைவனுக்கு வணக்கம் செலுத்துவதாகும்; மனித உடலைத் தொழும்பொழுது இறைவனையே தொடுகின்றோம்" என்று கூறினார். எனவே,

இறைவன் படைப்பினுள் எல்லாம் மிக மேன்மை பொருந்தியதாக உள்ள மனிதனை வணங்குவது மிகவும் ஏற்றது. அதிலும், மனித இனத்துள் உயர்ந்தவராகிய வீரரை வழிபடுவது யாவரும் செய்யத் தக்கது.

போலி நாகரிகம் தோன்றாத பழங்காலத்தில் இத்தகைய உண்மை வீரர்களைப் பெரிதும் மக்கள் வழிபட்டனர். சங்க காலத்தில் பெரும் புலவர்களை அரசர்கள் வழிபட்டமைக்கும், பிற்காலத்தில் ஞான சம்பந்தர் போன்ற சமயகுரவர்களை மக்கள் போற்றிய தற்கும் இதுவே காரணம். இப் பேருண்மையை அறிய இயலாதார் இத்தகைய வீரர்களைக் காலச் சுழலில் தோன்றிய சாதாரண மக்களென்றும், காலக் கூறுபாட்டால் அவர்கள் சில செயல்களைச் செய்துங் கூறியுஞ் சென்றனரென்றும், அதனால் அவர்களைப் போற்றலும் வழிபடலும் அவசியமின்று என்றுங் கூறுவர். ஆனால், காலம் என்றைக்கும் உளதென்றும், காலம் எத்துணை விரும்பி அழைக்கினும் இறைவ னருளின்றி இவ் வீரர் வெளிப்படார் என்றும், இன்றைய நிலையில் இத்தகைய வீரர் ஒருவர் வேண்டு மென்று நாம் எத்துணை விரும்பினும் அவ னருளின்மையால் அவ் வீரர்கள் தோன்றவில்லை யென்றும் கூறி அவர்கள் போதத்தைத் தள்ளி விடுக.

இனிப் பொதுவாக உலகினும் சிறப்பாகத் தமிழ் நாட்டினும் வீரர் தோன்றினமைக்குச் சில சான்றுகள் காண்போம். வீரர் என்றவுடன் கேவலம் மிருக பலமுடையாரைக் குறிப்பதாக மட்டும் நினைத்தல் கூடாது என்று முன்னமேயே கூறினோம். சாதாரண மக்கள் நிலைக்கு மேற்பட்டு நிற்பவரெல்லாம் வீரரே;

பிற மக்களுக்கு இயற்கையின் உண்மையையும் அவன் படைப்பின் தன்மையையும் எடுத்துக்கூறி மக்கள் நன்கு வாழ வழி வகுப்போரெல்லாம் வீரரே. எனவே, உண்மைக் கவிஞனும், புலவனும், தீர்க்க தரிசிகளாகிய சித்தர்களும், உடல் மனவலிமையுடையாரும் வீரர்களாவர் என அறிகிறோம். இவ் வீரர்கள் வாயால் மக்கட்கு உபதேசித்தோ, அன்றித் தங்கள் வாழ்க்கையில் வாழ்ந்து காட்டியோ பிறருக்கு அறிவுச் சுடர் கொளுத்துகின்றனர்.

முதலாவதாகக் கூறிய கவிஞனையும் புலவனையும் எடுத்துக் கொள்வோம். மக்களினத்திற்கு அறிவு கொளுத்துதலும் இயற்கையின் தோற்றங்களி லீடுபட்டுத் தன்னை மறந்து, அவ்வியற்கையின் தலைவனின் தன்மையை உன்னி, அதனான் மனத்துள் தோன்றுகின்ற இன்ப ஊற்றை, மொழி என்று சொல்லும் கருவி மூலம் பாடலாக வெளிப்படுத்து பவனே கவிஞனாகிய வீரன். இயற்கையின் தோற்றம் ஒவ்வொன்றும் அவனைத் தன்னை மறக்கச் செய்கின்றது. ஏனையோர் தினங்கண்டும் காணாதது போல் உள்ள அதே பொருள்கள் இவ் வீரன் மனத்தில் நினைத்தற்கரிய எண்ணங்களைக் கிளப்புகின்றன. அவன் இயற்கையூடே பிறந்து, வாழ்ந்து, நினைத்து, மகிழ்ந்து முடிகின்றான். அதனாலேதான் அத்தகைய கிளர்ச்சி அவனுக்கு உண்டாகிறது. அத்தகைய சந்தர்ப்பம் பிறருக்கெல்லாம் வாய்க்கினும் அவர்கள் அதைப் பயன்படுத்திக் கொள்வதில்லை. இயற்கையின் இறைத்தன்மை யாவரும் கண்டுகளிக்குமாறு கிடக்கிறது. அதனை உணருவோர் சைவ சித்தாந்தத் தெள்ளமுது அருந்தினோரை ஒப்பச் சிலரேயாவர். அவரே வீரர். உதாரணமாகச் செஞ்ஞாயிறு தினந்

தோறும் நீலத் திரைக்கடல் விளிம்பில் தோன்றத்தான் செய்கிறது. உலகந்தோன்றியக்காற்றொட்டு இதனைக் கண்ட மக்கள் எண்ணற்றவர். ஆனால் அவர்கள் எல்லோருடைய மனத்திலும் அது ஏதேனும் கிளர்ச்சியை உண்டாக்கிற்றோ! யாதொன்றும் இல்லை. ஆனால், நக்கீரன் என்ற கவிஞன் அதனை நோக்குகிறான். "உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு" என நினைக்கின்றான். உடனே அவனுக்குத் தோன்றும் அடுத்த எண்ணம் என்ன? இவ்வியற்கையை எதன் விரிவாக அக் கவிஞன் நினைக்கின்றான்? "கைபுனைந் தியற்றாக் கவின் பெரு வனப்பாகிய" முருகாக, இளமை அழகு கடவுட்டன்மை முதலியவெல்லாம் ஒருங்கு திரண்ட முருகாக அன்றோ காண்கிறான்! கண்டதோடு நின்றானா? இல்லையே. அப் பொருளின் தன்மையைப் பலபடியாக எடுத்துப் பேசுகிறான். அம்மட்டோ! அதனிடம் நமக்குள்ள தொடர்பை விளக்குகிறான். அம் முருகனிடம் செல்லின் "இன்னே பெறுதிநீ முன்னிய வினையே" எனப் பிறருக்கு இன்பத்துக்குரிய வழியை எடுத்தோதுகிறான். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' எனப் பறைசாற்றுகிறான். தமது எண்ணங்கள் முருகனிடம் செல்வார்க்கெல்லாம் முடியுமோ என நினைப்பவரை நோக்கி "இருள்நிற முன்னீர் வளைஇய உலகத்து, ஒரு நீ ஆகத் தோன்ற விழுமிய பெறலரும் பரிசில் நல்குமதி" என ஐயமறுக்கின்றான். இத்தகைய உயர்நிலையில் நின்று தனது வீரத் தன்மையும் உண்மைத் தன்மையும் தோன்ற, பாடல்களைப் பொழியும் புலவனே வீரனாவான். அவன் பாடிச் சென்று இன்றைக்கு 2000 ஆண்டுகள் செல்லினும், இன்றும் உலகம் அவனை,

அவனது விழுமிய கருத்தை, அவனது ஐயமற்ற இயற்கை வழிபாட்டைப் போற்றத் தான் செய்கிறது. இவ் வீரக் கவிஞனை உலகம் வீர வழிபாடு செய்யத்தான் செய்யும். அவன் வாழ்ந்த காலத்திலும் சங்கப் புலவர் கூடி 'இன்றமிழ்க் கீரன்' என வழிபாடு செய்தனர். பாண்டியன், ஏன்? இறைவனுங்கூட அவனது சொற்களுக்கு மதிப்பும் மரியாதையும் தந்தனன்.

'மனிதன் நிலையினின்று தாழாமையும், தெய்வத் தால் தாழ்வு நேர்ந்துழி உயிர் வாழாமையுமன்றோ மானம்' எனப் பழந்தமிழன் நினைத்தான்? பெருஞ் சித்திரனார் என்ற பழந்தமிழ்ப் புலவனைச் சற்று நோக்குவோம்; வறுமைக் கடற்கு எல்லை தேர்ந்த புலவன் வீட்டு வறுமையை "மருங்கிற் கொண்ட பல்குறு மாக்கள், பிசைந்துதின வாடிய முலையள், பெரிதழிந்து, குப்பைக் கீரை கொய்கண் ணகைத்த முற்றா இளந்தளிர் கொய்துகொண் டுப்பின்று, நீருலையாக ஏற்றி" என்றும், "இல்லுணாத் துறத்தலின், இன்மறந்துறையும் புல்லுளைக் குடுமிப் புதல்வன் பன்மாண் பாலில் வறுமுலை சுவைத்தனன் பெறாஅன், கூழுஞ் சோறும் கடைஇ யூழின் உள்ளில் வறுங் கலந் திறந்தழக் கண்டு, மறப்புலி உரைத்தும் மதியங் காட்டியும் நொந்தனளாகி" எனவும் அவனே பாடுகிறான். இவனது வறுமையை மேலை நாட்டு வீரப் புலவனாகிய டாக்டர் ஜான்சன் (Dr. Johnson) என்பவனது வறுமையோடுதான் ஒப்பிட முடியும். என்றாலும் என்ன? வறுமையுள் ஆழினும் வீரன் வீரன் தானே! இவனது செயலைச் சற்று நோக்குவோம். வெளிமான் என்ற அரசனைச் சென்று இப் புலவர் பாடினாராக, அவன் துஞ்சுவான், தம்பியைத் தா

என்ன, அவன் புலவனது அருமை அறியாது சிறிது கொடுத்தான். வீரக் கவிஞனது மனந் தாளுமோ? "கற்றூண் பிளந்திறுவ தல்லால் பெரும் பாரம் தாங்கில் தளர்ந்து வளையுமோதான்'' என்றபடி, அவனது பரிசிலை மறுத்துச் சென்றான் புலவன். அம்மட்டோடு நின்றனனோ! குமணவள்ளலைச் சென்று பாடி ஒரு யானை பெற்று அதனைக் கொணர்ந்து வெளிமானுடைய ஊரில் அவனது கடி மரத்தில் கட்டினான். அவனிடஞ் சென்று, அரசனே! இரவலர் புரவலை நீயுமல்லை; புரவலர் இரவலர்க்கு இல்லையு மல்லர்; இரவலர் உண்மையும் இரவலர்க்கு ஈவோர் உண்மையும் காண்; இனி, நின்னூர்க்கடி மரம் வருந்தத் தந்து யாம் பிணித்த நெடுநல் யானை எம் பரிசில்; கடுமான் தோன்றல் செல்வல் யானே'' எனக் கூறித் தனது பரிசில் யானையை வெளிமானுக்குத் தந்து சென்றனன்! ஆ! போலி நாகரிகத்தில் மூழ்கி இதுவே வீடு எனத் தருக்கித் திரியும் தமிழ் நாடே! சற்று நின்று ஆராய்வாயாக! எது வீரம்? எது செய்தும் உயிர் வாழலாம் என நினைக்கும் தற்கால மனப்பான்மை வீரமா? இப் பழந் தமிழ்ப் புல்வனின் மன உறுதி வீரமா?

இனி, வீரர்கள் தீர்க்கதரிசிகளாக இருக்கக் கூடுமெனக் கூறினோமல்லவா? இவ்வகை வீரர்கட்கும் கவி வீரர்கட்கும் வேற்றுமை மிகுதியாக இல்லை. இருவரும் இனி ஏனைய வீரவகையினரும் ஒருவகை யினரே! ஒரே தீயினின்று பற்றப்பட்ட சிறு தீச்சுடர்களே. மின்சாரம் ஒன்றேயாயினும் விளக்குகள் பல நிறமுடையனவாய்த் தோன்றுமாப் போல, இவ் வீரரும் அவ்வப்பொழுதுக் கேற்பப் பல பெயர் தாங்கிப் பல நெறியில் வாணாளைச் செலுத்துவர்.

யாவரும் விரும்பத்தகுந்த அரச செல்வத்தைத் தானே துறந்து கடுந்தவ மியற்றிய புத்த தேவனது வீரம் எங்கே? அதுவும் இன்பந் துய்க்கும் இளமைப்பருவத்தே, கட்டழகு கழலாத காலத்தே, இட்ட செல்வத்தை விட்டுப் பிரிதலும், அதனால் 'மாறனை வெல்லும் வீரன்' எனப் பெயர் பெறுதலும் எளிதோ? இஃதொன்றோ? தீநெறிக் கடும்பகை கடிதலும், துறக்கம் வேண்டாத் தொன்மையும், கண் பிறர்க்கு அளிக்கும் தன்மையும் யாவர்க்கும் எளிதிற் கிட்டும் வீரமோ? இத்தகைய வீரமுடைய வீரனை உலகம் வழிபாடு செய்து அவனது சொற்களைப் பொன்னே போல் போற்றி அவனது சமயத்தில் சேராது என்ன செய்யும்? உலகத்து உள்ள துன்பங்கட்கு எல்லாம் ஆணிவேரானது ஆசை. அவ்வாணி வேரை அறுத்து எரியிடின் வீடுபேறு அடைவது திண்ணம் என்ற பேருண்மையை, துக்கம், துக்க உற்பத்தி, நிவாரண மார்க்கம், நிவாரணம் என அஞ்சாது எடுத்துக் கூறிய வீரன் யார்? அவ் வீரன் திருவடிகளை வணங்குத லல்லது வாழ்த்தல் நம் நாவிற்கு அடங்குமோ?

இவ் வீரர்கள் கருவில் திருவுடையார் என முன்னமே குறிப்பிட்டோமன்றோ! எனவே, இவர்க்கு வயது, அனுபவம் முதலிய கருவிகள் வேண்டுவ தில்லை. இவைகளை அவர்கள் தேடாது, அவைகள் அவர்களைத் தேடிச் சென்றடைகின்றன. எக் காரணத்தால் புத்த தேவனது பொன்னுரைகள் இவ்வளவு விரைவில் மக்கள் உள்ளத்தே சென்று பதிந்தன? அக் கருத்துகள் மிகப் புதியன எனக் கொள்வதற்குமில்லை. எனினும் கூறுவான் தன்மை நோக்கி அவை வன்மை பெறுகின்றன. அம்பு ஒன்றே யாயினும், எய்வானது திறத்தால் அது வேகம்

பெறுதலை ஒப்ப, வீர உரைகளும் கூறுவோனது உண்மைக் குணம், சத்தியம் முதலானவற்றையொட்டி உரம் பெறுகின்றன. 'Sincerity' என்ற ஆங்கிலப் பதத்தை யொட்டி ஆன்மபூர்வம் என்ற சொல்லை ஆளுவோமானால், கூறுபவன் ஆன்மபூர்வ உண்மையை யொட்டி வார்த்தைகள் வன்மையடைகின்றன எனக் கூறலாம். இத்துணைப் பெரிய உலகில் போலி வீரர்கள் தோன்றுவதும் இயல்பே. இனி அவர்களுடைய மொழிகளும் இத்தன்மையுடையனவோ என வினவு வார்க்கு, அவரது போலி உள்ளத்திற்றோன்றிய மொழிகளும் போலியாய் வன்மை இழப்பன எனக் கூறுவோமாக. ஒரு வீரன் அறிவு முதலானவற்றிற் குறைந்தவனாகக் கூட இருக்கலாம். எனினும் ஆன்ம பூர்வ உண்மை உடையவனாயிருத்தல் வேண்டும். அஃதொன்றே வீரர்க்குப் பெரிதும் வேண்டப்படுகிறது. அஃதின்றேல் பிறவெல்லா மிருந்தும் பயனில்லையாம். கண்ணப்பர் சரிதங் காண்பார்க்குத் தெற்றென விளங்கும் பேருண்மை இதுவன்றோ! உலகிய லறிவாலும் சாத்திரக் குப்பையாலும் குறைந்து விளங்கிய திண்ணனார்க்கு பிறர்பால் காணவியலாத ஆன்மபூர்வமான அன்பு இறைவனிடமிருந்தமை யாலேயே ஆறு நாட்களில் அவர் ஆட்கொள்ளப் பட்டார். எனவே, வேண்டப்படுவது அன்பேயாம். போலி வீரன் அவன் காலத்து ஒரு வேளை ஏனைய வன்மைகளால் தன் மொழிகளை மெய்ப்போர்வை போர்த்து அமரச் செய்யலாம். ஆனால், அவனுக்குப் பிறகு, காலம் என்னும் திரை ஓயாது அதன்மேல் மோதுதலாலும், ஏனைய மக்களது ஆராய்ச்சி என்னும் உப்பங்காற்றாலும், பிற உண்மை வீரர்களுடைய மொழிகள் என்னும் பெரும் புயலாலும் தாக்குண்டு,

போலி வீரர் எழுப்பிய மாடங்கள் கால்கோள் வலிமையற்று கொன்னே வீழ்ந்துபடும். எனவே, எவர் எழுப்பிய மாடங்கள் இன்றும் நின்று நிலவு கின்றனவோ அவருடைய மொழிகளில் ஆன்மபூர்வம் துளும்பக் காணலாம். இன்னா செய்தாரை ஒறுக்கும் முறையில், சிலுவையில் வைத்தறையுங் காலத்தினுங் கூட "இறைவனே இவர்கள் அறியாது செய்யும் பிழையைப் பொறுத்தருள்க" எனக் கூறியவர் உண்மை வீரம் உடையார் என்பது, இன்றைக்கு உலகில் எத்துணை மக்கள் அவர் மதந் தழுவியுள்ளார்கள் என்பதாலே விளங்கும்.

இனி, மன, உடல் வலிமையுடையாரும் வீரராய்ப் போற்றப்பட்டமைக்குப் பல உதாரணங்கள் புறம் முதலிய நூல்களில் பரக்கக் காணலாம். இவ் வீரத்தின் பயனாக, தான் என்ற முனைப்பற்றவர் பலர். சிறுத் தொண்டர், தான் பெற்ற ஒரே மைந்தனைத் தனது கொள்கையை நிலைநிறுத்துதற் பொருட்டாகக் கறி செய்ததும், இயற்பகை நாயனார் தனது மனைவியைக் கிழ அடியாருக்கு அளித்ததும் ஒப்பற்ற மனோ வலிமையை விளக்குகின்றன. இத்தகைய வீரச் செயலைச் செய்தமையாலேயே அவரை உலக இயலுக்கும் புறம்பானவர் என்ற பொருளில் **'இயற் பகையார்'** என்ற பெயரை இட்டனர். இனி அடியார் அவரை விளிக்கு முறையிலும் "செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஓலம்" என்று அழைக்கின்றார். வீரரை வழிபடு முறையில், உடல் பொருள் ஆவி அனைத்தை யும் அவர்பால் தந்து, தான் என்ற முனைப்பற்று வழிபடலே முறையாம். தான் கொண்ட கொள்கையை நிலை நிறுத்துவான்வேண்டி எதனையும் ஈய வல்லவனே வீரனாவான். அது வீர உணர்ச்சியின்

அடிப்படையாம். எனவே, அம் முறையில் இயற்பகையாரது செய்கையை ஆராய்ந்து பார்ப்பின், தான் செய்த வீர வழிபாட்டின் நிமித்தம் அவர் அவ்வாறு செய்தாரென்பது விளங்கும். எனவே, அச் செய்கையில் தமது புல்லிய அறிவைச் செலுத்தி ஆராய்ச்சி செய்து, இது தகாத செயல் எனக் கூறுவான் புகுதல் அறிவுடையார்க் கழகன்று. சர் பிலிம் சிட்னி என்ற வீரன், தனக்குரிய பருகுநீரைப் பிறனுக்குத் தந்து தனது இன்னுயிரை நீத்ததும், சிபி என்ற மன்னர்பிரான் புறாவொன்றின் பொருட்டாகத் துலை புக்கதும், பிம்பிசார மன்னனிடம் ஆட்டிற்குப் பதிலாகத் தனது தலையையே வெட்டலாம் எனப் புத்தர்பிரான் கூறியதும், பிறர் பொருட்டாக இயேசுபிரான் சிலுவையில் மாண்டதும், இலெனின் இரஷியாவின் பொருட்டாகத் தான் உயிர் நீத்ததும் வீரமற்ற பேடியர் செய்கை என இப் பகுத்தறிவாளர் அறிவையிழந்து கூறப்புகுவரேல், இயற்பகையாகிய வீரனின் செயலையும் இழிவு படுத்திக் கூறலாம். வீரர் வழிபாடு, அடிமை அறிவை மிகுதிப்படுத்தும் எனக் கூறும் இவரது மடமை என்னே! அவ்வாறு சொல்லித் தருக்கித் திரியும் அவரே, ஒரு வகையில் தத்தம் தலைவரை வீர வழிபாடு செய்வதை மறக்கின்றனர் போலும்!

உடல், மன வீரமும் அதனாற் செய்யப்படும் செயல்களும் போற்றற்குரியனவே. தனது வலிமையால் பகைவரோடு பொருது இறந்த வீரனுக்கு நடுகல் நட்டு அவனைப் பராவுகின்ற பண்டைய வழக்கம் எத்துணை அருங்கருத்தை உள்ளடக்கி நிற்கின்றது. அவ் வீரனது பருவுடல் மறையினும் அவனது வீர உணர்ச்சி, சூக்கும உடலுடன் ஆண்டுத் தங்கித் தன்னை

வழிபடுவார்க்கு நன்மை பயக்கின்றது. அதனாலன்றோ வீரக் கண்ணகிக்குச் செங்குட்டுவன் கோயில் எடுப்பித்தான். இளங்கோவடிகள் 'நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்' என ஒரு காவியக் கோயில் எடுத்தார். அக் காலத்திலேயே மணிமேகலை முதலிய பெரியார்களுங்கூட இவ் வீரத்தாயை வழிபட்டதாக அறிகின்றோம்.

இதுகாறும் கூறியவற்றான் வீரர் வழிபாட்டின் தன்மையையும் பெருமையையும் ஒருவாறு உணரு கிறோம். ஆதலால், சமயப் பூசல் நிறைந்த இற்றை ஞான்று சமரச சன்மார்க்க நெறியின் இன்றியமை யாமையைக் கூறி அறைகூவி யழைக்கும் சமயத் தலைவரும், பெண்ணடிமையை மிதித்துப் பேதைமைப் பேயை மண்டையிலடித்து ஒடுக்கிய சிம்மமும், புத்தம் புதிய கலைகள் தமிழில் வருமாறு எழுதிய புலவர் சிகாமணியும், தொழிலாளர் இன்னல் களைவேன் என அறைகூவி வந்து தொழிலாளர் சங்கங்கண்டு அவர் துயர் களைந்த வீரரும், 'தன் கடன் பணி செய்து கிடப்பதே' என்றுணர்ந்து பணியாற்றும் தொண்டரும் ஆகிய **திரு.வி.க. அவர்கள் போன்ற வீரர்களைத் தமிழ்நாடு போற்றுமாக!** அதனாலேற்படும் பெரும் பயன்களை அடையுமாக!

4

# பெண்மை விரும்பினார்

சென்ற நூற்றாண்டில் நம் நாட்டில் தோன்றி, இந் நாடும் உலகமும் நலம் பெறத் 'திருவருட்பா' என்ற நூலை அருளிச் செய்த இராமலிங்க அடிகளாரின் திருவுருவத்தை நம்மில் பலரும் கண்டிருக்கின்றோம். முக்காடிட்டு, கைகளைக் கட்டி நிற்கும் அத் திருவுருவம் முதன் முதலாகப் பார்ப்பதற்குப் பெண் வடிவோ என்ற ஐயத்தைத் தோற்றுவிக்கும். நித்திய பிரமசரியம் காத்த ஆண்மை நிறைந்த வீரர் ஒருவருடைய உருவம் பெண்மைக் கோலம் பூண்டு, கண்டவர்கள் பெண்ணோ என்று ஐயுற வேண்டிய நிலையில் அமைந்திருப்பது ஏன்? ஓரளவு சிந்தித்துப் பார்த்தால், ஆண்மையில் தலைசிறந்து நின்ற அடியார்கள் அனைவரும் ஏறத்தாழ இதே நிலையை அடைந்திருப்பார்கள் போலும் என்று நினைக்கத் தோன்றுகிறது. ஆழ்வார்கள், நாயன்மார்கள் முதலிய பெருமக்களுடைய உருவத்தை நாமோ, அன்றி அத் திருவுருவங்களைச் சமைத்த சிற்பிகளோ நேரில் கண்டதில்லை. ஆதலால், அவற்றைக் கொண்டு ஒரு முடிவுக்கும் வரலாகாது. ஆனால், நேரில் கண்டு படம் வரையப்பட்ட சிறப்புடையவர் வள்ளலார். எனவே, அவருடைய வடிவத்தையும் இராமகிருஷ்ண பரம

ஹம்சர் போன்றவர்களின் வடிவத்தையும் எடுத்துப் பார்ப்போமானால், இவர்கள் அனைவரும் ஓரளவு பெண்மை வடிவத்தைத் தாங்கி நிற்பதை அறிய முடியும். புலனடக்கம் என்ற ஒன்றை முழுவதும் கைவரப் பெற்று, ஐய உணர்வை ஒழித்து, மெய்யுணர்வு கைவரப் பெற்று நின்ற இவர்கள் வீரர்கள் அல்லரோ? இப் பெரு வீரர்கள் ஓரளவு பெண்மை வடிவைத் தாங்கினர் என்றால், இதில் ஏதோ ஒரு புதுமை இருத்தல் வேண்டும். இதுபற்றிக் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

மூன்று வயதிலேயே பாடத் தொடங்கிய ஞான சம்பந்தப் பெருமான் ஆண் மகனாக இருப்பினும் 'என் உள்ளம் கவர் கள்வன்... பெம்மான் இவன் அன்றே' என்று பாடுகிறார். எனவே, மூன்று வயது ஆண் மகன் தம் 'உள்ளம் கவர் கள்வன்' ஒருவன் இருக்கிறான் என்று பாடினாரானால், இதில் ஏதோ புதுமை உளது எனக் கருதலாம். ஒருவேளை, மிக இளம் பிராயம் உடையவராதலால், ஆண் பெண் வேறுபாடின்றிச் சிறிதும் கவலைப்படாமல் பாடினாரோ! அவ்வா றாயின், மிக முதிர்ந்த பருவத்தினராகிய திருநாவுக்கரசு பெருமானாரும், 'வஞ்சித்து என் வளை கவர்ந்தான் வாரானே ஆயிடினும்...' என்று ஏன் பாட வேண்டும்? எனவே, மிக இளம் பிராயத்தினராகிய திருஞான சம்பந்தரும், மிக முதிர்ந்த பருவத்தினராகிய நாவுக் கரசரும் தம்மைப் பெண்ணாகவே உருவகித்துக் கொண்டு, தம்முடைய தெய்வக் காதலைப் பாடுவார்களேயானால், நாம் மேலே கூறியபடி இதனுள் ஒரு சிறப்பு இருக்கிறது என்ற கருத்து இன்னும் வலியுறுகின்றது.

இவர்கள் இருவர் மட்டோ இவ்வாறு பாடினர்? என்றுமே மணமகனாகக் கோலம் பூண்டு இரு மனைவியரை மணந்தவராகிய சுந்தரரும் இதற்கு விலக்காகாமல் உள்ளாரெனின், இதன் அடிப்படை யாது? சைவ சமய குரவர்களாகிய இவர்கள் மட்டுமல்லாமல், வைணவராகிய நம்மாழ்வாரும் தம்மை நாயகியாக உருவகம் செய்துகொண்டு பாடியதைக் கேட்கிறோம். இவற்றிலிருந்து தெற்றென விளங்கும் ஒரு கருத்துக் கூர்ந்து பார்ப்போருக்குப் புலனாகாமல் போகாது. புறக்கண் கொண்டு நம் போன்றவர்கள் பிறருடைய புற வடிவத்தை ஆராய்ந்து ஆண் என்றும், பெண் என்றும் வேறுபடுத்திக் காண்கின்றோம். ஆனால், ஆண்மை பெண்மை என்ற தன்மைகள் கேவலம் புற உடலைக் கொண்டு மட்டும் அமைவது இல்லைபோலும். பெண்ணாக உடம்பு பெற்று வாழ்கின்றவர்களுள் சிலர் பெண்மைக் குணம் ஒரு சிறிதும் இன்றி, ஆண்களுக்குரிய அதிலும் முரட்டு ஆண்களுக்குரிய தன்மையைப் பெற்று விளங்கக் காண்கின்றோம். அதேபோல் ஆண் உடம்பு பெற்றோர்களுள் சிலர் பெண்மைக்குரிய தன்மை விளங்கப்பெற்று வாழ்வதைக் காண்கிறோம். எனவே, ஒருவரை ஆண் என்றும், ஒருவரைப் பெண் என்றும் அழைப்பதற்கு அவர்களுடைய புற உடல் நிலை மட்டும் காரணம் அன்று போலும் எனச் சிந்திக்க வேண்டியிருக்கிறது. விளக்கமாகக் கூறவேண்டுமே யானால், புற வடிவால், உடல் தன்மையால் ஆண் என்றும் பெண் என்றும் பகுத்துக் கூறுவது ஓரளவு சரி எனினும் முற்றிலும் சரி என்று கூறவியலாது. ஆண்மைக் குணத்துடன் ஆண் வடிவம் பெற்றோரை ஆண் என்றும் பெண்மைக் குணத்துடன் பெண் வடிவு

பெற்றோரைப் பெண் என்றுங் கூறுதலே சரியானது. ஆண் ஓரளவு பெண் வடிவு பெற்றாலும் மாறிப் பெற்றாலும் அவர்களை 'அலிகள்' என்று கூறுகிறோம். ஆனால், வடிவால் மாற்றமடையாமல் ஆண் பெண் தன்மை இல்லாதவர்களைக் குறிப்பிட நம்மிடம் சரியான சொல் இல்லை.

அவ்வாறாயின், ஆண்மை பெண்மை என்று கூறுகின்ற பண்புகளின் அடிப்படை வேறுபாடு யாது? யான் என்னும் அகங்காரத்தின் அடிப்படையில் தோன்றுவது ஆண்மை என்று ஓரளவு சுருங்கக் கூறலாம். பிறர் வாழத் தன்னையே அர்ப்பணித்துக் கொள்ளுகின்ற தன்மையைப் பெண்மை என்று கூறலாம். பெண்மையிலுள்ள தனிச் சிறப்பு யாதெனில், தன்னலம் என்ற ஒன்றைக் குடும்பம் என்று ஒன்றுக்காக அல்லது பிறருக்காக முற்றிலும் அழித்துக்கொண்டு வாழ்வதே ஆகும். இதனால்தான் கைம்மாறு கருதாமல் உயிர்களுக்கு அருள் புரியும் இறைவனை, தாம் எத்தனை பிழை செய்தாலும் அவற்றையெல்லாம் பொறுத்துக்கொண்டு தம்மை ஆட்கொள்ளுகின்ற இறைவனை, தாய் என்று பெரியவர்கள் அழைக்கின் றார்கள். 'மூ ஏழ் உலகுக்கும் தாயே!' என்றும், 'பால் நினைந்தூட்டும் தாய்' என்றும் பேசுகிறார்கள். இறைவனையே தலைவனாகக் கொண்டு, தம்மைத் தலைவியாக நினைந்து திருக்கோவையார் போன்ற ஒரு பிரபந்தம் பாடுகின்ற மணிவாசகர் போன்ற பெரியவர்கள்கூட இறைவனுடைய ஒருசில குணநலன் களைச் சிந்திக்கும் போது, அவன் தலைவன், புருஷோத்தமன் என்பவற்றையெல்லாம் மறந்து, அவனைத் தாயே என்றும், தாயுமானவன் என்றும் கருதிக் கசிந்து உருகுகின்றார்கள். எனவே, புரு

ஷோத்தமனாகிய இறைவனையும்கூடத் தாய் என்று நினைத்துப் போற்ற வேண்டிய சூழ்நிலை ஏன் உண்டாகிறது? உயிர்கள் பிழை செய்யினும் அவர்களுடைய பிழையைப் பொறுத்து, அருள் சுரக்கின்ற காரணத்தினாலேதான் இறைவனைத் தாய் என்று போற்றுகின்றார்கள். அதேபோல இந்த உலகிடைத் தன்னலம் என்ற ஒன்றை அறவே அழித்து, பிற உயிர்கள் நன்கு வாழவேண்டுமென்ற பெரும் கருணையினாலே உந்தப்பெற்று, அதற்காக எத்தகைய தியாகத்தையும் செய்யத் துணிந்த பெரியவர்களைத் தாய்த் தன்மை பெற்றவர்கள் என்று கூறுகிறோம். நம் போன்றவர்கள் தொடர்பு உடையவர்களிடத்தில் மட்டுமே அன்பு பாராட்டுகிறோம். ஆனால், இயேசு கிறிஸ்து, வள்ளலார், திருஞானசம்பந்தர், நம்மாழ்வார், இராமகிருஷ்ணர் போன்ற பெரியவர்கள், தொடர்புடையவர் இல்லாதவர் என்ற வேறுபாடு இன்றி, அனைவரிடத்தும் அன்புக்கு மேற்பட்டதாகிய அருளை, கருணையை வாரி வழங்கினார்கள். ஆகையினாலேதான், கருணையே வடிவான இவர்கள் அகங்காரம் என்ற ஒன்றை அறவே ஒழித்து, பிறர் வாழத் தம்மைத் தியாகம் செய்கின்ற பேரருளாளர்களாகவும், பெண்மைத் தன்மை பூண்டு ஒழுகினவர்களாகவும் விளங்கக் காண்கிறோம்.

பெண்மையை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். இளமை, அழகு முதலியவற்றோடு கூடிய முதற் பகுதிப் பெண்மை, தனித்து வாழாமல் தலைவன் என்ற ஒரு கொழுகொம்பைப் பற்றியே வாழ முடியும். பெண்மைத் தன்மை பெற்றவர்களாகிய இப் பெருமக்கள் இறைவன் என்ற புருஷோத்தமனைத் தம் தலைவனாகக் கருதி அவன்மாட்டுத் தெய்வக் காதல்

கொண்டு வாழ்ந்ததாகத் தெரிகின்றது. உண்மைக் காதலில் தான் என்ற முனைப்பு முற்றிலும் அடங்கி விடுகிறது. அவன், தான் இடைப்பட்ட காதல் உணர்வு என்ற மூன்றாக இருக்கும்வரை அது தலையாய காதலன்று. மூன்றும் ஒன்றாகும்பொழுது அனுபவம் ஒன்று மட்டுமே எஞ்சுகிறது. அகங்கார மமகாரம் அற்ற நிலையில்தான் உண்மைக் காதல் அனுபவம் தோன்றும் என்பதையே வள்ளுவரும் 'மலரினும் மெல்லிது காமம்' என்று கூறினார். அகங்காரத்தை அழித்த இப் பெரியார்கள் இறையனுபவம் என்ற காதலில் மூழ்கியவர்கள். அக்காதல் முற்றிய நிலையில் உலகியல் பெண்கள் அக, புற வாழ்க்கையில் மேற்கொள்ளுகின்ற அனைத்தும் இவர்களையும் அறியாமல் இவர்களை வந்தடைந்தனவோ என்றும் நினைக்கத் தோன்றுகிறது. இனி பெண்மையின் இரண்டாவது பகுதி தாய்மையாகும். தாய்மையின் தனிச்சிறப்பு, பிற உயிர்கள் வருந்தும்போதெல்லாம் தானும் கரைந்து உருகுவதாகும். எவ்வாறாயினும் பிறர் துயர் துடைக்க முற்படும் அன்பே தாய்மையாகும். இன்னும் கூறப்போனால், மிக இயற்கையாக நடைபெறுகின்ற நிகழ்ச்சிகளுக்குக் கூடத் தாய் மனம் துயர்ப்படுகிறது. சாதாரண உலகியல் தாய்மார்களே இவ்வாறு உள்ளனர் எனின், தாய்மைத் தன்மை பெற்ற இப் பெரியார்களைப் பற்றிக் கூற வேண்டா. முன்பின் பழக்கமில்லாத வணிகப் பெண் ஒருத்தி கணவனை இழந்து கவலையுறக் கண்ட திருஞானசம்பந்தர், மக்கள் பிறப்பதும் இறப்பதும் இவ்வுலகில் அன்றாடம் நிகழுகின்ற ஒன்றுதான் என்பதை நன்கு அறிந்திருந்தும்கூட, தாய்மைத் தன்மை தம்மிடம் மிக்கு இருந்த காரணத்தால் உடனே கோயிலுக்குச் சென்று,

இறைவனைப் பாடி அவள் துயர் போக்கப் பாடுபடுகின்றார். இயேசுநாதர், இராமலிங்கர், இராமகிருஷ்ணர் போன்றவர்கள் இவ்வாறு பிறர் படுகின்ற துயரத்தைக் கண்டு அதனைப் போக்க அரும் பாடுபட்டு இருக்கின்றார்கள்.

வள்ளலார் இன்னும் இத் தன்மையில் மிக மிக உயர்ந்து சென்றுவிட்டதை அறிகின்றோம். பெண்மைக் குரிய இரண்டு தன்மைகளிலும் வள்ளலார் மேம்பட்டு நிற்கின்றார். தியாகேசனைத் தமது காதலனாகக் கொண்டு அக் காதலிலே திளைத்து மூழ்கித் தாம் பெற்ற இன்ப அனுபவங்களை ஆயிரக்கணக்கான பாடல்களாக வடிக்கின்றார். அக் காதலிலே தோன்று கின்ற இந்த அனுபவம் வளர வளர, புறத்தேயும் சில அடையாளங்கள் தோன்றும் போலும். தம்மை ஒரு பெண்ணாகவே பாவித்து இறைவனிடம் கொண்ட காதலால் ஓயாது அதையே நினைத்து மகிழ்ந்தும் வருந்தியும் வாழ்ந்ததால், தற்கருத்தேற்றம் (auto suggestion) என்பதற்கு இவர்கள் முழு இலக்கு ஆகின்றனர். ஓயாது ஒன்றைப் பற்றிச் சிந்திப்பதனால், அதே நினைவாக இருப்பதால், தான் என்ற ஒன்றை அவ்வனுபவத்துள் கரைத்து விடுவதால் தானே அதுவாகி விடுகிறது. மனோதத்துவ நூலார் கூறும் இக்கருத்தைச் சைவ சித்தாந்தவாதிகள் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே 'யாதொன்று நினைக்கத் தான் அதுவாதல்' என்று சொல்லிச் சென்றிருக்கிறார் கள். இக் கொள்கையின்படி இறைவனையே தலைவனாகக் கொண்டு, தம்மைத் தலைவி என்றே நினைந்து தலைவியாக வாழ்ந்தவர்கள் இப் பெரியார்கள். இவ்வனுபவ முதிர்ச்சியால் பெண் தன்மை மீதூர்தல் நடைபெறக்கூடியது தான். ஆகவே,

வள்ளலார் பெண் தன்மையைப் போற்றி வளர்த்த காரணத்தால் ஓரளவு பெண்ணாகவே ஆயினார் என்றால் அதில் வியப்பு ஒன்றும் இல்லை.

பெண்ணினைப்பற்றிப் பேச வந்த தொல்காப்பிய உரை ஆசிரியராகிய பேராசிரியர் தாய்மைபற்றிக் கூறும்போது, 'மைந்தருக்கு நோய் இல்வழியும் நோய் உளதாங்கொல் என்று அஞ்சுகின்ற அச்சம்' என்று பேசுகிறார். எனவே, அச்சம் என்பது மகளிருக்கு உரிய இயல்பான ஒன்றாகும். இங்கு அச்சம் என்று பேசுவது தன்னைப்பற்றி ஏற்படுகின்ற கோழைத்தனமான பயமன்று. பிற உயிர்கள் அடைகின்ற துன்பத்தை நினைந்து அவ் வுயிர்கட்குத் துன்பம் ஏற்படாமலிருக்க வேண்டுமே என்று தோன்றுகின்ற அச்சமாகும். ஒருவேளை அவற்றிற்குத்துன்பம் நேரிட்டால் அதனைப் போக்க முடியவில்லையே என்று தோன்றுகின்ற வருத்தத்தின்பாற்பட்ட அச்சமுமாகும். இத்தகைய தாய்மையில் பிறக்கும் அச்சத்தை அடிகளார் முழுவதுமாகப் பெற்றிருந்தார் என்பதைக் கீழ்வரும் பாடல்கள் நன்குணர்த்தும்.

வாடிய பயிரைக் கண்டபோது எல்லாம்
வாடினேன்; பசியினால் இளைத்தே
வீடுதோறிரந்தும் பசியறாது அயர்ந்த
வெற்றரைக் கண்டுஉளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின் றோர்என்
நேர்உறக் கண்டுஉளம் துடித்தேன் என்றும்

காட்டுயர் அணைமேல் இருக்கவும் பயந்தேன்
காலின்மேல் கால்வைக்கவும் பயந்தேன்
பாட்டுஅயல் கேட்கப் பாடவும் பயந்தேன்
பஞ்சணை படுக்கவும் பயந்தேன்

நாட்டிய உயர்ந்த திண்ணைமேல் இருந்து
நன்குறக் களித்துக்கால் கீழே
நீட்டவும் பயந்தேன் ... என்றும்

கையுற வீசி நடப்பதை நாணிக்
கைகளைக் கட்டியே நடந்தேன்
மெய்யுறக் காட்ட வெருவிவெண் துகிலால்
மெய்யெலாம் ஐயகோ மறைத்தேன்
வையமேல் பிறர்தம் கோலமும் நடையும்
வண்ணமும் கண்ணிலே சிறிதும்
பையநான் ஊன்றிப் பார்த்ததே இல்லை
பார்ப்பனேல் பயம்மிகப் படைப்பேன் என்றும்

பாடிச் செல்கிறார். இரண்டாவதாகவும் மூன்றாவதாகவும் காட்டப்பெற்றுள்ள பாடலைப் படித்தவுடன் ஒரு பெண் தன்னைப்பற்றிக் கூறுவது போலவே தோன்றும்.

இத் தமிழ்நாட்டுப் பண்பு குறையாத பெண் ஒருத்தியைப் படம் பிடிப்பது போன்றுள்ளன இப் பாடல்கள். இத்துணைத் தூரம் அடிகளாரின் மனம் தாய்மைப் பண்பில் பக்குவப்பட்டுவிட்டமையின், அவர் புறவடிவம் ஓரளவு பெண் தன்மையை ஏற்றுக் கொள்வதாயிற்று. இத் தன்மை மீதூர்ந்தமையின் உடம்பை வெளியே காட்ட அஞ்சி வெள்ளுடையால் மூடிக்கொண்டேன் என்று அவர் பாடுவது முற்றிலும் பொருத்தமேயாகும்.

ஆணவத்தை அறவே ஒழித்துச் சிவானுபவத்தில் ஒன்றி நின்ற அவர் பெண்மையை விரும்பி ஏற்றுக் கொள்பவராக ஆகிவிட்டார். புருஷோத்தமனாகிய இறைவனிடம் ஏற்பட்ட தெய்வக் காதலை, அகங் காரத்தைச் சுட்டு எரித்த பெண்ணாக மாறியே

முற்றிலும் அனுபவிக்க முடியும். அவ்வனுபவத்தால் அடிகளார் பெற்ற பயன் பெண் தன்மையாகும்; நாம் பெற்ற பயன் திருவருட்பா என்ற அருளனுபவப் பாடல்களாகும்.

# 5

## புகழ் வேட்டை

'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும்' இந் நல்லுலகத்தைப் பண்டுதொட்டு ஆண்டவர் மூவேந்தர் எனப்படுவர். சேர சோழ பாண்டியர் என்று கூறப்பெறும் இவர்களைப் பற்றிப் பண்டை இலக்கியங்கள் பரக்கப் பேசுகின்றன. இம் மூவரும் சேர்ந்து ஆட்சி புரிந்த இடத்தின் பரப்புத்தான் யாது என்று நினைக்கிறீர்கள்? வடக்கே வேங்கடமலை (தற்பொழுது திருப்பதி என்று கூறும் மலையே); தெற்கே கன்னியாகுமரி; மேற்கும் கிழக்கும் கடல்கள். வடக்கி லிருந்து தெற்கே ஏறக்குறைய 500 மைல்கள். கிழக்கி லிருந்து மேற்கே அகன்ற இடத்தில் 400 மைல், குறுகிய இடத்தில் சில அடிகள் (குமரி முனையில்); இந்த அளவு குறுகிய நிலத்தை ஆட்சி செய்தவர் மூவர். 'மண் திணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர், முரசு முழங்கு தானைமூவர்' (புறம், 35) என்ற புறப்பாடல் இதற்குச் சான்று. இந்த அளவுடைய நாட்டை மூவர் ஆட்சி செய்தாலும், இவர்கள் ஒவ்வொருவரும் தத்தமைக் கூறிக் கொள்ளும் பொழுது, பேரரசர்களாகவே (சக்கரவர்த்திகள்) கூறிக் கொண்டனர். இவ்வரசர்கள் ஒரோவழி இதை மறந்திருப்பினும், உழை இருப்போர் அவர்கட்கு நினைவூட்டிக்கொண்டே இருந்தனர்.

மேலே கூறப்பெற்ற பாடலின் அடுத்த அடியே போதுமானது. 'சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை' வெள்ளைக்குடி நாகனார் என்ற புலவர் பாடிய பாடலாகும் அது. 'முரசு முழங்கு தானை மூவருள்ளும், அரசெனப் படுவது நினதே பெரும!' *(35)* என்று கூறிய புலவர் பெருமான் இன்னும் ஒருபடி மேலே சென்று, 'நாடு எனப்படுவது நினதே' *(35)* என்றும் கூறிவிடுகிறார். தமிழ் நாட்டை மூவர் ஆட்சி செய்தாலும், 'அரசன்' என்று கூறினால் சோழனைத் தான் குறிக்குமாம்! நாடு என்று கூறினால், 'சோழ நாட்டை'த்தான் குறிக்குமாம்!

இன்னும் சில சந்தர்ப்பங்களில் இவர்கள் ஆளும் பகுதிகளை 'உலகம்' என்றுகூடக் குறிப்பிட்டனர். 'பிரமனார்' என்ற புலவர் 'பொதுமை சுட்டிய மூவர் உலகமும், பொதுமை இன்றி ஆண்டிசினோர்க்கும்' *(புறம், 357)* என்று கூறிய அடிகள் ஆழ்ந்து நோக்கற் குரியவை. உலகம் என்ற சொல்லால் நாட்டின் ஒரு பகுதியைச் சுட்டிக்கூறுதல் அக்கால மரபுதான். 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்று தொல்காப்பியம் கூறுகிறது என்றாலும், 'மூவர் உலகம்' என்று புறப்பாடல் புலவர் கூறும்பொழுது, அவர் இவர்களுடைய நாட்டின் பரப்பை ஓரளவு மிகுதிப் படுத்தியே கூறுகிறார் என்பது விளங்கும். ஒவ்வொரு சந்தர்ப்பத்தில் இம் மூவருள் வலிமைபெற்ற ஒருவன் ஏனைய இருவரையும் அடக்கி ஆளுதலும் உண்டு. இன்னும் கூறப்போனால், இவர்களுள் ஒவ்வொரு வனும் ஏனையோரை அடிப்படுத்தலையே தன் வாழ்நாளின் குறிக்கோளாகக் கொண்டிருந்தான். 'பிரமனார்' *357*-ஆம் பாடலில் 'பொதுமை இன்றி ஆண்டிசினோர்க்கும்' என்று கூறுவது இவ்வாறு

ஓரோவழி ஏனைய இருவரையும் வெற்றிகண்ட ஒருவனையே குறிக்கிறது.

கரிகாற் பெருவளத்தான் போன்ற ஒரு சிலர் தமிழ்நாட்டின் எல்லையைத் தாண்டிச் சென்று, பிற நாடுகளிலும் வெற்றி கண்டார்களாயினும், பெரும் பான்மையான தமிழ் மன்னர்கள் வெற்றி கண்டது பிற தமிழ் மன்னர்களையேயாம். தமிழனை மற்றொரு தமிழன் போரிட்டுத் தொலைப்பதைப் பெரு வெற்றியாகக் கொண்டாடி மகிழ்ந்தனர் அந்நாளில் பெரும்பான்மையான தமிழர். சில சந்தர்ப்பங்களில் இவர்களுடைய போர் அவ்வளவில் நின்றுவிடாமல், யாதொரு தீங்கும் புரியாத மக்களையும் வருத்தத் தொடங்கிற்று. வெல்லப்பட்டவர் நாட்டை (தமிழ் நாட்டின் மற்றொரு பகுதிதான்) அழித்து, நெருப்பூட்டல் ஒரு வழக்கம்.

கரும்பு அல்லது காடு அறியாப்
பெருந்தண்பணை பாழாக
ஏம நல்நாடு ஒள்ளரி ஊட்டினை (புறம், 16)

(கரும்பு விளையும் விளை நிலங்களை எல்லாம் நெருப்பூட்டினாய்) என வரும் அடிகள் நம் சிந்தனையைக் கிளறாமல் இருக்க முடியாது. இவ்வாறு இவர்கள் வெற்றிக் கொண்டாட்டம் கொண்டாடும் பொழுதுகூட, தோற்றவரைப்பற்றி நினைத்த தில்லையா? அவர்களும் தம்மைப் போன்ற மொழிபேசும் நாகரிகம் உடையவர் என்ற எண்ணம் இவ் வெற்றி வீரர்கட்குத் தோன்றி இராதா? போரில்லாத நாட்கள் மிகவும் குறைவு என்று கூறத்தக்க முறையில் இவர்கள் வாழ்ந்துள்ளனர். இப் பெருமன்னர்கள் ஓரோவழி வாளாவிருந்தாலும்,

இவர்கட்குக் கீழ் வாழ்ந்த சிற்றரசர்கள் வாளா விருப்பதில்லை. இவ்வாறு போரிட்டு மடியக் காரணம் யாது? படை வைத்திருந்தமையின் வாளாவிருக்க முடியாமல் ஓயாது போரிட்டனரா? புறப்பாடல்களை ஒருமுறை புரட்டினவருங்கூட ஓர் உண்மையை அறியாமல் இருத்தல் முடியாது. ஏனைய எத்துணைக் காரணங்கள் இருப்பினும், இவர்கள் ஓயாமல் பூசலிட்டதற்குத் தலையாய ஒரு காரணம் காணப் படுகிறது. மனித மனத்தின் ஆழத்தில் காணப்பெறும் இரண்டு உணர்ச்சிகளே இதன் காரணம் என்று நினைய வேண்டியுளது. இயற்கையாகத் தோன்றும் வெறுப்பு உணர்ச்சி ஒன்று; ஏனையது, புகழ் ஈட்ட வேண்டும் என்று தோன்றும் உணர்ச்சி. இவை இரண்டும்' கூடினவிடத்து விளைவது போரேயன்றி, வேறு யாதாக இருத்தல் இயலும்?

மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே (புறம், 165)

*(நிலை பேறில்லாத இந்த உலகில் புகழை நிலைநாட்டிப் பலர் மாய்ந்தனர்.)*

சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்
நூற்றுஇதழ் அலரின் நிரைகண்டு அன்ன
வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந் தோரை எண்ணும் காலை
உரையும் பாட்டும் உடையோர் சிலரே!
மரைஇலை போல மாய்ந்திசினோர் பலரே!
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான ஊர்தி
எய்துப என்ப... (புறம், 27)

*(தாமரையின் மலர்களைப் போலப் பலரும் ஒன்றாகவே காட்சியளிக்கும் இவ்வுலகில், பிறரால்*

பாடப்பெறும் சிறப்புடையோர் சிலரே! பலர் பிறரால் புகழப்படாமல் இறந்து போகின்றனர். புலவரால் புகழ் பெறும் சிறப்புடையோர் வானுலகமும் பெறுவர்.)

இத் தமிழருடைய புகழ்ப் பைத்தியம் மிகவும் அழகாக இருந்தது என்பதைக் காட்ட நூற்றுக் கணக்கான உதாரணங்கள் தர இயலும்.

> **தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார்**
> **தோன்றலில் தோன்றாமை நன்று (குறள், 236)**

என்று குறளாசிரியர் கட்டளை இடுமுன்பே இம் மக்கள் தம் வாணாளில் பெறவேண்டிய ஒரு குறிக்கோளாக இதனைக் கொண்டிருந்தனர் என்பதை நன்கு அறிய முடிகிறது. இலக்கணமும் இதற்குப் பெரியதோர் இடந்தந்து, 'பாடாண் திணை' என்றதொரு திணையையே வகுத்துவிட்டது.

மனிதனாகப் பிறந்தவன் புகழ் ஈட்டியே தீர வேண்டும் என்றால், அதற்குரிய வழிகள் யாவை என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? வழிகள் பலவாக இருக்கலாம். எந்த வழியை மேற்கொண்டால் புகழ் பேசுகிறவர்கள் எளிமையாகப் புகழ்வார்கள்? அந்த வழியே சிறந்த வழி என்று நினைத்திருத்தல் கூடும் அக்கால மக்கள். மேலும், புகழ் ஈட்டும் வழி மூலமாகவே தம்முடைய மனக்கருத்தையும் முற்றுப் பெறச் செய்யக்கூடுமாயின், அது மிகவும் நலமான தாகப்பட்டிருக்கும். இயற்கையாக மனத்தில் தோன்றும் வெறுப்புணர்ச்சிக்கு வடிவு கொடுப்பதன்மூலம் இரண்டு பயன்கள் கிட்டுகின்றன. முதலாவது, யாரை வெறுக்கிறோமோ அவர்மேல் போர் தொடுத்து வெற்றிகாண முடிகிறது. இரண்டாவது, அவ்வாறு பெறும் வெற்றியைப் பிறர் புகழவும் காரணமாகிறது.

இவ்வாறு இரண்டு வழிகளிற் பயன்பெறக் கூடுமாயின், வன்மை மிக்க அரசர்கள் 'போர்' என்ற வழியை மேற்கொண்டதில் வியப்பிருத்தல் இயலாது. மேலும், அந்த அரசர்கள் புரியும் இந்தப் போர்களைத் தம்முடைய நாட்டு மக்களின் நலத்திற்காகவே செய்ததாகவும் கூறினர்; அம் மக்களும் இதனை நம்பினர்.

பிறருடைய நாட்டின்மேல் போர் தொடுத்துச் செல்லுதல் அரசர்க்குரிய அறமாகவும் போற்றிக் கூறப் பெற்றது. தற்காப்புச் செய்யுமுறையில் போரிடுதல் அன்றியும், பிறர்மேல் படைகொண்டு வலுப் போருக்குப் போதலும் அறமெனவே கருதப் பெற்றது. புகழ் வேட்டையாடப் பிறருடைய நிலத்தைப் பற்றிக் கவலை கொள்ளாமல் போரிடுதலை ஒரு வாய்ப்பாகக் கொண்டனர் அற்றை நாள் தமிழர். எவ்வளவு பெரிய அரசனும் இதற்கு விலக்காமாறு இல்லை. மேலும், ஓரிரண்டு போர்களில் வெற்றி கண்டுவிட்டால் அது குடிப்பழக்கம்போல் ஆகிவிடும். அவ்வெற்றி தந்த வெறி மேலும் மேலும் போர் செய்யத் தூண்டும். தாம் இவ்வாறு போர் செய்து அதனால் பெறுவதாகக் கருதிய புகழ் உண்மையானதா என்று ஆராய அவர்கள் முற்படவில்லை.

அரசராகத் தாம் பிறந்ததே போர் செய்யத்தான் என்றுகூடப் பலர் கருதிவிட்டனர். இத்தகைய ஒரு நிலையில் அறிவுடைப் பெருமக்கள் சிலர் மனத்தி லாதல் ஓர் ஐயம் தோன்றி இருத்தல் வேண்டும். கேவலம் போரிடுதல் ஒன்றுதானா புகழை வளர்க்கும்? இது தவிர இவ்வரசர் பெருமக்கள் செய்யத்தக்க நற் செயல்கள் வேறு இல்லையா? இவ்வாறு சிலர்

தம்மைத்தாமே கேட்டுக்கொண்டு பெற்ற விடைகளும் புறப்பாடல் முதலியவற்றில் காணக் கிடைக்கின்றன. 'மாங்குடி மருதனார்' என்ற புலவர் தம்முடைய அரசனுக்குண்டான போர் வெறியைத் தணிக்க 'மதுரைக் காஞ்சி' என்றதொரு நூலையே (அவ்வளவு பெரிய பாடல் அது) இயற்றினார் என்றால், பழந்தமிழர் போர் வெறி என்ற பாலைவனத்தில் இஃது ஒரு நீர் ஊற்றுப் போன்று காணப்படுகிறது. 782 வரிகளையுடைய அப் பாடலில், அப் புலவர், 'பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கு' நல்லதோர் அறிவுரை வழங்குகிறார்.

பொற்புவிளங்கு புகழவை நிற்புகழ்ந்து ஏத்த
விளங்குஇழை மகளிர் பொலங்கலத்து ஏந்திய
மணங்கமழ் தேறல் மடுப்ப நாளும்
மகிழ்ந்து இனிது உறைமதி பெரும
வரைந்துநீ பெற்ற நல்ஊ ழியையே
(மதுரைக் காஞ்சி, 778–82)

(உனக்கிருக்கும் வாழ்நாள் ஓரளவுடையதாகலின், நல்ல முறையில் உண்டு உடுத்து மகிழ்ச்சியுடன் வாழ்வாயாக!)

இதே புலவர் இதே மன்னனைப் பாடும் புறப் பாட்டு ஒன்றில் இன்னும் ஒருபடிமேலே செல்கிறார்.

ஒண்தொடி மகளிர் பொலங்கலத்து ஏந்திய
தண்கமழ் தேறல் மடுப்ப மகிழ்சிறந்து
ஆங்கினிது ஒழுகுமதி பெரும ஆங்கது
வல்லுநர் வாழ்ந்தோர் என்ப... (புறம், 24)

(இவ்வாறு, இன்புற்று வாழ்வதே வாழ்க்கை எனப்படும் என்று அவர் கூறும்பொழுதுதான்,

இவ்வாறு செய்யாதவர்களுடைய வாழ்வு எவ்வளவு பயனற்றது என்பதையும் அறிய முடிகிறது.)

போர்செய்தலையே தம் வாணாளின் குறிக் கோளாகக் கொண்ட இம் மன்னர்கள் புகழடை வதற்கு மேற்கொண்ட வழி சற்று விந்தையானதே! இதனைக் காட்டிலும் வேறு வழியில் வாழ்வதால் நல்லதொரு புகழை அடைய முடியும் என இவர்கள் ஏனோ நினைக்கவில்லை? ஆனால், இப் பேரரசர்கள் வாழ்ந்த அதே காலத்தில் சில சிற்றரசர்களும் வாழ்ந்துள்ளனர். அவர்கள் வாழ்க்கையில் மேற் கொண்ட குறிக்கோள் முற்றிலும் வேறானதாகக் காணப்படுகிறது. கடை எழு வள்ளல்களைப் பற்றியும் இப் புறப்பாடல் முதலியன பேசுகின்றன. அவர்களும் புகழ்படைத்தவர்களாகவே உள்ளனர். என்றாலும், என்ன வேற்றுமை? புகழ் என்ற ஒன்றை அடைய முற்றிலும் வேறுபட்ட இரு வழிகளைக் கையாண்டுள்ளனர். யாருடைய வழி சிறந்தது? போர் வெறி கொண்டு, நாட்டிற்கு நன்மை என்ற பெயரால் தமிழர்களுடைய குருதியைத் தமிழ் மண்ணில் ஆறாகப் பெருகவிட்டுத் தம்முடைய மக்களும் தோற்ற மக்களும் ஒருசேர அவதிப்படச் செய்த இப் போர் வெறியர்களும் புகழடைந்து விட்டதாகச் செருக்குற் றிருந்தனர். பிறருக்குத் தீங்கு புரிவதைக் கனவிலும் கருதாதவர்களாய் வாழ்ந்த அவ் வள்ளல்களும் புகழ் பெற்றனர். அறிவின் துணை கொண்டு புகழ் தேட முயன்ற இப்போர் வெறியர்கள் எங்கே! உணர்வின் துணைகொண்டு கொடை என்ற சிறப்பால் புகழ் படைத்த வள்ளல்கள் எங்கே? இவ்விரு சாராரும் பெற்றது ஒரே புகழ்தான் என்றாலும், இருவரும் கையாண்ட வழிகள் எவ்வளவு மாறானவை?

அடையும் பயன் ஒன்றேயாயினும், மேற்கொள்ளும் வழி வேறுபாட்டால் இருவரும் இரு வேறு துருவங்கட்குச் சென்றுவிட்டனர்.

அறிவுவழி மேற்கொண்ட இவர்கள் புகழ் சிறந்ததா? அன்றி, அன்புவழி மேற்கொண்ட அவர்கள் புகழ் சிறந்ததா? அறிவு அறிவு என்று கூவி, அறிவிற்கு வணக்கம் செலுத்தும் தற்காலத் தமிழ் நாடு ஒருவேளை இப்போர் வெறியர்களைப் பாராட்ட முன்வரலாம். ஆனால், உண்மையில் இவர்கள் புகழ் நிலை நின்றதா? இது நன்கு ஆராயற்பாலது.

6

# காலப்போக்கில் தமிழ் இலக்கியம் (இருபதாம் நூற்றாண்டு)

"தொன்று நிகழ்ந்தது அனைத்தும் உணர்ந்திடு சூழ்கலை வாணர்களும் இவள் என்று பிறந்தவள் என்று உணரமுடியாத" இயல்பினையுடைய தமிழ்த் தாய் சென்ற இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கும் மேலாக இலக்கியத்தைப் பெரிய அளவில் பெற்று வாழ்கின்றாள். இருபத்தைந்து என்று சொல்வத னுடைய காரணம் அதற்கு முன்னர்த் தமிழில் இலக்கியம் இல்லை என்பதனால் அன்று. அதற்கு முன்னர் இருந்த இலக்கியத்தை, நாம் இன்று காணும் பேறு பெறவில்லை என்பதனாலேயே அவ்வாறு சொல்கிறோம். ஆனால், இருபது நூற்றாண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய சங்க இலக்கியப் பாடல்களைப் பார்த்தால் ஒரு பேருண்மை தெளிவாகப் புலனாகும். தலையாய கவிதைகள் என்று சொல்லத் தக்க சிறப்புகள் அனைத்தும் பொருந்திய சங்க இலக்கியப் பாடல்கள் ஆயிரக்கணக்கில் தோன்ற வேண்டுமே யானால் அதற்கு முன்னர் ஓர் ஆயிரம் ஆண்டுக ளாவது அந்த மொழியில் இலக்கியம் தோன்றி வளர்ந்து இருக்க வேண்டும். திடீரென்று எந்த

மொழியிலும் இவ்வளவு தரமான கவிதைகள் தோன்ற இயலாது.

தொடக்கத்தில் காணப்படுகின்ற இவ்வளவு சிறப்புகளோடு கூடிய சங்க இலக்கியத்தைப் படிக்கின்றவர்கள், இடைக்காலத்தில் தோன்றிய கம்பன் முதலிய காப்பியங்களையும் கண்டுவிட்டு, இருபதாம் நூற்றாண்டுக்கு வந்தால் ஓரளவு ஏமாற்றத்தைப் பெறுவர் என்பதில் ஐயமில்லை. 'சென்று தேய்ந்து இறுதல்' என்று சொல்லும் குற்றத்திற்கே ஓரளவு நம்முடைய இலக்கிய வளர்ச்சியும் உட்பட்டு விட்டதோ என்றுகூட நினைக்கத் தோன்றுகிறது. சங்க இலக்கியம் ஒருபுறம் இருக்கட்டும். மிகப் பிற்காலத்தில் தோன்றிய குமர குருபரருடைய பாடல்களோடு ஓரளவு வைத்து எண்ணத் தகுந்த பாடல்களாவது, இந்த நூற்றாண்டில் தோன்றியுள்ளனவா என்றால் வருத்தத்தோடு இல்லையென்றே விடை கூற வேண்டியுள்ளது. இதன் காரணம் எதுவாக இருத்தல்கூடும்?

பொதுவாக உலகமும், சிறப்பாகத் தமிழ் இனமும் சென்ற 19 நூற்றாண்டுகளில் பெற்ற அறிவு வளர்ச்சியைக் காட்டிலும் இந்த 60 வருஷங்களில் அதிகம் அறிவு வளர்ச்சி பெற்றுள்ளது என்பதை யாரும் மறுக்க முடியாது. அறிவுத் திறத்தாலும், அதன் பயனாக ஏற்படுகின்ற விஞ்ஞான வளர்ச்சி போன்ற வற்றாலும் எல்லை மீறிய அளவு, உலகமும் நாமும் வளர்ந்துள்ளோம். ஆனாலும், அறிவோடு ஒப்ப வைத்து எண்ணவேண்டியதாகிய உணர்வு உலகத்தில், வளர்ச்சி பெற்றோம் என்று சொல்ல வழியில்லை. தரமான அந்தக் கவிதைகள் தோன்றிய காலத்தில்,

அறிவு வளர்ச்சியோடு உணர்வு வளர்ச்சியும் பெற்றிருந்தார்கள் போலும். உணர்வை ஓரளவு பலியிட்டு, அறிவை வளர்த்த காரணத்தாலும், அகமுக வாழ்க்கையைக் கைவிட்டுப் புறமுக வாழ்க்கையில் மிகுதியான அளவு சென்றுவிட்டமையாலும், இன்று சிறப்பாகக் கவிதை உலகமும், பொதுவாக இலக்கிய உலகமும் ஓரளவு வலிமையற்று நம்மிடையே விளங்கு கின்றன.

மனிதனுக்கு இரண்டு கண்களும் தேவைப் படுவதுபோல, அறிவு, உணர்வு என்ற இரண்டுமே தேவைப்படுகின்றன. ஆனால், இந்த நூற்றாண்டில், உணர்வை ஓரளவு விற்றே அறிவை வளர்த்துள்ளோம். அதன் பயனாக, ஜெட் விமானத்தில் செல்வதும், "காசிநகர்ப் புலவர் பேசும் உரையைக் காஞ்சியில் கேட்பதற்குக் கருவி" செய்வதும் ஆகியவற்றில் வளர்ச்சி அடைந்துள்ளோம். ஆனால், ஒரு கம்பனையோ, வள்ளுவனையோ, இளங்கோவையோ, குமர குருபரரையோ பெற்றோம் இல்லை!

கவிதை, இலக்கணம், இலக்கியம் ஆகிய துறைகளில் ஆழ்ந்த முறையில் அமைந்து கிடக்கும் வளர்ச்சி இல்லை என்றாலும், பரந்துபட்ட நிலையில் இலக்கியம் வளர்ந்து உள்ளது என்பதை மகிழ்ச்சி யோடு வரவேற்கவேண்டும். உரைநடை, புதினம் (நாவல்), சிறுகதை, கட்டுரை, திறனாய்வு, மொழி பெயர்ப்புத்துறை ஆகிய இத் துறைகளில் நல்ல வளர்ச்சி அடைந்துள்ளோம் இந்த நூற்றாண்டில். ஆனால், கவிதை, இலக்கணம் என்ற இரண்டு துறைகளிலும் வளர்ச்சி குன்றியுள்ளோம் என்பதும் மெய்ம்மைதான்.

புற வாழ்க்கையில் ஏற்பட்ட அறிவு வளர்ச்சி தூரத்தை விரைவில் கடந்து செல்வதற்கு ஏற்பட்ட வாய்ப்புகள், தொழிற்புரட்சி, பிறமொழியாளருடைய கலப்பு, பிற மொழிப் பயிற்சி ஆகியவை பெரிய அளவில் தமிழ் மக்களுடைய வாழ்க்கை முறையையும் நோக்கத்தையும், மனப்பாங்கையும் மாற்றிவிட்டன என்பது உண்மைதான். அதன் பயனாகவே, இலக்கியத்தில் சில துறைகளில் பெரு வளர்ச்சியும், சில துறைகளில் வளர்ச்சியின்மையும் காணப்படுகின்றன.

முதலாவதாக, கவிதையை எடுத்துக்கொள் வோம். பழம் பாடல்களிலுள்ள கற்பனைத் திறமும் காட்சிப் பரப்பும், சொல்வளமும், பொருள் செறிவும் இன்றைய கவிதைகளில் இல்லை. இருபதாம் நூற்றாண்டில் விரல்விட்டு எண்ணத் தகுந்த கவிஞர் களே தோன்றியுள்ளனர். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, இராமலிங்க சுவாமிகள் (இவர்களைச் சென்ற நூற்றாண்டினர் என்பதே பொருத்தம்), கவிச்சக்கரவர்த்தி பாரதி என்ற இந்த மூவருமே தலையாய இடத்தைப் பெறுகின்றார்கள். அடுத்த நிலையில் வைத்து எண்ணத் தகுந்தவர்கள் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, வெ.ப. சுப்பிரமணிய முதலியார், 'பஞ்சலட்சணத் திருமுக விலாசம்' எழுதிய வில்லியப்பப் பிள்ளை, பாரதிதாசன் நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை, ஜெகவீர பாண்டியன் போன்றவர்கள். இவர்களை அல்லாமல் இளவட்டங்களில் மிகச் சிலர் நல்ல கவிதை எழுதும் திறமை பெற்றுள்ளார்கள். இராமலிங்க சுவாமிகள் எளிய, இனிய ஓசைநயம் பொருந்திய பாடல்கள் பாடுவதில் மிகவும் சமர்த்தர். நல்ல பண்பட்ட உள்ளத்தில் தோன்றிப் பக்திப் பெருக்கெடுத்தோடும்

அவருடைய பாடல்கள் அவரே கூறியுள்ளபடி 'கற்றார்க்கும் கல்லார்க்கும் களிப்பருளும் களிப்பாக', கல் மனத்தையும் கனிவிக்கின்ற இயல்புடையதாக அமைந்து கிடக்கக் காண்கின்றோம். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் புலவருக்கு விருந்தாக அமைகின்ற இனிய கவிதைகள் நூற்றுக் கணக்கில் இயற்றியுள்ளார். அவர் காலத்துக்குரிய சொல் சிலம்பத்தை ஓரளவு மிகுதியும் கையாண் டுள்ளார் மீனாட்சி சுந்தரம் பிள்ளை என்று சொன்னால் மிகையாகாது. அவர் காலத்தில் பெரு வழக்காக இருந்த ஸ்தல புராணம் போன்றவற்றில் அவருடைய கவிதை பலராலும் பாராட்டப்படாத நிலையை அடைந்து விட்டது. ஆனால், இருபதாம் நூற்றாண்டுக் குரியவராகிய கவிச்சக்கரவர்த்தி பாரதியார் 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமை பெற்றவராய்' விளங்கக் காண்கிறோம். ஆசிரியப் பாவை அவர் கையாளும்போது, சில சமயங்களில், சங்க இலக்கிய நடை துள்ளிவிளையாடக் காண்கின்றோம். அதே ஆசிரியப்பாவில் அவர் சொல்லியுள்ள கருத்தை நோக்கும்போது இருபதாம் நூற்றாண்டு மனிதனுடைய அறிவு வளர்ச்சியின் எல்லையில் பிறந்த அரும் கருத்துகள் களிநடம்புரியக் காண்கின்றோம். சுருங்கச் சொன்னால் பழமையும் புதுமையும் கலந்து பிழிந்து சாறாகக் கவிச்சக்கரவர்த்தி இருபதாம் நூற்றாண்டு இலக்கிய உலகில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாமல் விளங்குகின்றார்.

அடுத்துள்ள நிலையில் கவிமணி போன்றவர்கள் மென்மையான உள்ளம் படைத்தவர்கள் என்பதை அவர்கள் கவிதை நடை காட்டிச் செல்லும். ஜெகவீர

பாண்டியனார் போன்றவர்கள் புலமை நயம் நிரம்பிய கவிதைகள் ஆக்கியுள்ளனர் என்றாலும் அவருடைய கவிதையிலும், நாமக்கல் இராமலிங்கம் போன்றவர் கவிதையிலும் கற்பனைச் செறிவும், தெளிவும், நடை மிடுக்கும் கொண்ட கவிதை எழுதுகிறார் கவிஞர் பாரதிதாசன். இளவட்டாரக் கவிகளில் 'வேலன்', 'தூரன்' போன்ற ஒரு சிலர் மிக இனிய நல்ல நடையோடு கூடிய கவிதைகள் எழுதுகிறார்கள்.

தொல்காப்பியமும், நன்னூலும், இலக்கண விளக்கமும் தோன்றிய தமிழ்மொழியில் இருபதாம் நூற்றாண்டுக்கேற்ப ஓர் இலக்கணநூல் தோன்றாதது புதுமைதான். இந்த நிலையைப் போக்க முயன்றவர் சோழவந்தான் இலக்கணக் கடல் 'அரசஞ் சண்முகனார்' ஒருவரேயாவார். என்றாலும் அவருங் கூடப் 'பாயிர விருத்தி' எழுதினாரே தவிர, காலத்திற் கேற்ற முறையில் புதிய இலக்கண நூல் ஒன்றையும் வரையவில்லை. புதிய வழி வகுக்கத் தமிழர்கள் எளிதில் முன் வர மாட்டார்கள் என்பதை இது நன்கு காட்டுகிறது போலும்.

இருபதாம் நூற்றாண்டில் ஓரளவு வளர்ச்சி யடைந்து இந்த நூற்றாண்டில் நன்கு நிலைபெற்று விட்ட தமிழ் உரைநடை, செறிவோடும் திண்மை யோடும் விளங்கக் காண்கின்றோம். இருபதாம் நூற்றாண்டில் உரைநடை என்று எடுத்துக்கொண்டால் ஒப்பாரும் மிக்காரும் இல்லாமல் கலங்கரை விளக்கமாய், உரைநடை எவ்வாறு அமைய வேண்டு மென்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாய், ஒருவர் விளங்கக் காண்கின்றோம். அவர் யார் என்று சொல்லத் தேவையில்லை என்றாலும், தமிழ்ச் சமுதாயம் அதிகம்

மறதி உடையதாதலின் பெயரைச் சொல்லத்தான் வேண்டும் **உரைநடைக்குத் தந்தை**யென்று சொல்லத் தகுந்தவர் பெரியார் **திரு.வி.க.** அவர்கள்தாம். உரைநடையால் தொண்டுபுரிந்த இருபதாம் நூற்றாண்டுப் பெரியார்களுள் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, ஆறுமுக நாவலர், விபுலானந்த அடிகள், ந.மு. வேங்கடசாமி நாட்டார், மு. கதிரேசச் செட்டியார், கா. சுப்பிரமணிய பிள்ளை, மறைமலையடிகள், ரா. இராகவையங்கார், மு. இராகவையங்கார், சோம சுந்தர பாரதியார் ஆகியோர் குறிப்பிடத் தகுந்தவராவர். இப் பட்டியல் முழுமையானதன்று.

இந்த நூற்றாண்டில் தமிழ்மொழி வளரப் பேருதவி புரிந்த நிகழ்ச்சி பழந்தமிழ் இலக்கியங்கள் அச்சில் வரத் தொடங்கியதேயாகும். எனவே, தமிழ் வளர்ச்சியில் பெரும்பங்கு கொண்ட தமிழ் இலக்கியப் பதிப்பு வேலையில் முடிமணியாய் விளங்குபவர் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயராவார். அவரை அடுத்து எஸ். வையாபுரிப் பிள்ளையும், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், அ. கோபாலையர், சி.வை. தாமோதரம் பிள்ளை, வை.மு. சடகோபராமானுஜாசாரியார் ஆகியோர்களும் இத் துறையில் பெருந் தொண்டு புரிந்துள்ளனர்.

உரைநடையோடு, தொடர்புடைய புதினத்தையும், சிறு கதையையும் நன்கு வளர்த்த பெரியார்கள் பலர் இந் நூற்றாண்டுக்குரியவர்கள். வேதநாயகம் பிள்ளை, வி.ஆர். இராசமையர், மாதவையர், வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார். வ.ரா., கல்கி கிருஷ்ண மூர்த்தி, புதுமைப்பித்தன், கு.பா. ராஜகோபாலன் ஆகியோர் இத்துறையில் தமிழன்னைக்குப் பெருந்

தொண்டு புரிந்து, காலம் என்னும் ஏட்டில் தம் புகழ்நிறீஇத் தாம் மாய்ந்தனர். வாழ்க்கையை அப்படியே பிரதிபலித்துக் காட்டுகின்ற கல்கியின் புதினங்கள் ஒரு வகையையும், மனித மனத்தின் போராட்டங்களை அக, புறக் கோணங்களிலிருந்து கண்டு அதனைத் திறனாய்வு செய்கின்ற புதுமைப் பித்தனின் கதைகள் ஒரு வகையையும் சேர்ந்தவை. இப் பெரியார்கள் இயற்றிய நூல்கள் அனைத்திலும் புதுமைப் பித்தனுடைய படைப்புகளைப் புரிந்து கொள்வது ஓரளவு கடினம். கதைப் போக்கைக் காட்டிலும் மனித மனத்துள் ஆழ்ந்து சென்று உணர்ச்சிப் போராட்டங்களைப் பாத்திரங்களோடு ஒன்றியும், ஒன்றாமல் பிரிந்து நின்றும், பரிவோடும் கடுமையாகத் தாக்கியும் எடுத்துக் காட்டுகின்ற குணச்சித்திரப் படைப்புகளை மிகுதியும் கையாண்டவர் அவர். இலக்கியம் என்று கூற இயலாவிடினும் அளவால் அதிகமான புதினங்களை எழுதியவர்கள் வடுவூர் துரைசாமி அய்யங்கார், வை. மு. கோதை நாயகி அம்மையார் ஆகிய இருவர்.

இறவாத வரம்பெற்ற இந்த எழுத்தாளர் சமுதாயத்தில் தலையாய இடம் பெற்று இன்றும் தமிழன்னைக்குத் தொண்டு செய்து வருகின்ற பெரியார்கள் மிகப் பலராவார். அனைவருடைய பெயரையும் குறிப்பிடுதல் இயலாது எனினும், பல்கலைச் செல்வர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், டாக்டர் மு. வரதராசனார், கி.வா. ஜெகந்நாதன், அகிலன், ம.பொ. சிவஞானம், வெ. சாமிநாத சர்மா, பி.ஸ்ரீ. சுகி சுப்பிரமணியம், தி.ஜ.ர. பி.எஸ். இராமையா, நாரணதுரைக்கண்ணன் (ஜீவா) போன்றவர்கள் இருபதாம் நூற்றாண்டின் எழுத்துலக மேதைகளாவர்.

இளம் எழுத்தாளர்கள் நாளுக்கு நாள் பெருகி வருகின்றனர். இத்துணைப் பெரிய அளவில் இலக்கியம் வளர்வதற்குச் செய்தித்தாள்களும், வார, மாத இதழ்களும் முக்கியக் காரணமாகும்.

'குழந்தை இலக்கியம்' என்ற புதிய துறை இந்தக் காலத்தில் தோன்றிய ஒன்று. இதுவரை குழந்தை பற்றிய இலக்கியம் உண்டே தவிர, குழந்தைகட்கு'எனத் தனியே இலக்கியம் இல்லை. இப்பொழுது அழ. வள்ளியப்பா போன்றவர்கள் இத்துறையில் பணி புரிகின்றனர். பாரதியார், கவிமணி போன்றவர்கள் இத்துறையில் முன்னோடிகளாவர். பிற நாடுகள் சென்று அம் மக்களுடைய வாழ்க்கை வளம் முதலிய வற்றைக் கண்டு வந்தவர்கள் தம் அனுபவத்தை நூல் வடிவில் எழுதி வெளியிடுதல் பிற மொழிகளுள் பல காலமாக இருந்து வருகின்ற ஒன்றாகும். இந்த நூற்றாண்டில் தமிழ்மொழி பெற்ற சிறப்புகளுள் இத்தகைய 'சுற்றுலா' இலக்கியங்களும் 'சுயசரிதை' இலக்கியங்களும் முக்கியமானவை. எழுத்துலகில் அதிகம் ஈடுபடாமல் பெரும் புலவர்களாய்க் கல்லூரி முதலியவற்றில் பேராசிரியர்களாய் அமர்ந்து தமிழ் வளர்க்கும் பெருமக்கள் பலருண்டு. டாக்டர் சிதம்பரநாதன், டாக்டர் துரை அரங்கனார் போன்றவர்கள் தமிழ் உலகம் நன்கு அறிந்தவர்கள். பிறர் அறியாவிடினும் தம் கடமையை நன்கு செலுத்துவதால் தமிழ்நாட்டில் பல தமிழ் அறிஞர் களை ஆண்டுதோறும் நற்பயிற்சி மூலம் தோன்று விக்கும் எண்ணிறந்த தமிழ்ப் பேராசிரியர்களும், தமிழாசிரியர்களும் இக்காலத் தமிழ் வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டுள்ளனர்.

மேலே கூறப்பெற்றவர்கள் செய்துள்ள படைப்பிலக்கியங்கள் போக மேலை மொழிகளில் தோன்றி வளர்ந்த திறனாய்வும் இன்று தமிழ் மொழியில் தோன்றி வளருகிறது. ஒப்புயர்வற்ற உரையாசிரியர் களைக் கொண்ட தமிழ்மொழியில் திறனாய்வு என்பது புதுமையன்று என்றாலும், மேற்கத்திய முறையை ஒட்டி இப் புதிய இலக்கியம் உருவெடுத்து வளர்கின்றது. திறனாய்வின்மூலம் தமிழ்க் கவிதையின் பெருமையைத் தமிழருக்கும், பிற நாட்டாருக்கும் எடுத்துக் கூறிய முதற் பெருமை வ.வே.சு. ஐயர் அவர்களுடையதே. அடுத்துத் தமக்கே உரிய பாணியில், கம்பன் புகழ் பாடி அவன் கவிதைக்குத் திறனாய்வு செய்த பெருமை 'ரசிகமணி' டி.கே.சி. அவர்கட்கே உரியது. பேராசிரியர் அ. சீனி வாசராகவன், சிதம்பரரகுநாதன், ம.ரா.போ. குருசாமி, இராமகிருஷ்ணன் போன்றவர்கள் இத் துறையில் நற்பணி புரிந்து வருகின்றனர். புதிய துறையாதலின் குழப்பத்தைச் செய்கின்ற சிலருக்கும் இத் துறையில் பஞ்சமில்லை.

இருபதாம் நூற்றாண்டுக்கே உரிய இலக்கியம் பத்திரிகை இலக்கியம். மேனாடுகளில் வளர்ந்துள்ளது போல் இத்துறை இன்னும் நன்கு வளரவில்லை எனினும், சென்ற இருபத்தைந்து ஆண்டுகளில் பெரிதும் முன்னேறியுள்ளது என்பதில் தடை இல்லை. தமிழ்ப் பத்திரிகை உலகை அந்த நாட்களில் முன்நின்று வளர்த்தவர்கள் வரதராஜலு நாயுடு, திரு.வி.க. போன்றோர். செய்தித்தாள் முறையில் நாயுடுவின் 'தமிழ்நாடு' முன்நின்றது. தூய, இனிய தமிழில் ஒரு தனித் தன்மையுடன் விளங்கியன திரு.வி.க.வின் 'தேசபக்தனும்' 'நவசக்தி'யும். பல்லாண்டுகள் முன்னரே **இலக்கியத்தாள்** ஒன்றை நடத்த முடியும்

என்பதை எடுத்துக்காட்ட **'கலா நிலையம்'** நடத்தி அழியா இடம் பெற்றார் **சேஷாசலம்.** கதைகளை மட்டுமே நம்பி வாழுகின்ற இதழ்கள் ஒருபுறம் இருக்கத் 'தமிழில் முடியுமா?' என்ற வினாவிற்கு விடையளிக்கும் முறையில் நடைபெறும் 'கலைக்கதிர்' தமிழ்ப் பத்திரிகை உலகில் ஒரு தனியான இடத்தைப் பெற்றுள்ளது. செய்திகளைப் பிறர் அறிய வைப்பதிலும் ஒரு கலைத்தன்மை உண்டு என்பதைத் தமிழ்ப் பத்திரிகைகள் ஓரளவு உணர்ந்து வருகின்றன. ஒரே செய்தித்தாள் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர்க் கையாண்ட தமிழ் நடைக்கும், அதே செய்தித்தாளின் இன்றைய தமிழ் நடைக்கும் கடல் அனைய வேற்றுமை உண்டு.. அதுவும் இந்த நூற்றாண்டின் தமிழ் வளர்ச்சியையே எடுத்துக் காட்டுகிறது. கட்டுரை வரைவதில் இருபதாம் நூற்றாண்டில்கூட நல்ல வளர்ச்சி ஏற்பட்டுள்ளதாகக் கூற முடியாது. 'ஹாசிலிட்', 'டி கொன்ஸி', 'சார்லஸ் லாம்ப்' போன்றவர்கள் ஆங்கில மொழியில் எழுதிய கட்டுரை கள் போல் தமிழில் மிகுதியான அளவு இன்னும் வரவில்லை. இக்குறையை ஓரளவு போக்கியவர்கள் டாக்டர் ரா.பி. சேதுப்பிள்ளை, இராஜாஜி போன்ற சிறந்த கட்டுரையாளர்கள் ஆவர்.

புத்தம் புதிய கலைகள் மெத்த வளரும் மேனாட்டின் இலக்கிய, விஞ்ஞான நூல்களைத் தமிழில் ஓரளவு கொண்டுவந்துள்ளோம் எனினும், போதுமான அளவு முயற்சி எடுக்கப்படவில்லை என்றே கூறவேண்டும். கிரேஸ் 'அனாட்டமி' போன்ற மருத்துவ, விஞ்ஞான நூல்களைத் தமிழில் இந்த நூற்றாண்டின் முற்பகுதியிலேயே இலங்கையில் மொழி பெயர்த்துள்ளனர். மேனாட்டுக் கதைகளைக் கூசாமல்

தமிழில் பெயர்த்து நல்ல பெயரையும் இட்டுத் தமதாக் ஆக்கிக்கொள்ளும் பரந்த மனப்பான்மையுடைய சிறுகதையாசிரியர்களும், சினிமா வசனகர்த்தாக்களும் நிரம்ப உளர். தமிழ் மொழியில் உள்ள சிறந்த பகுதிகளை ஆங்கிலத்தில் ஓரளவு செய்து தந்த சிறப்பு வ.வே.சு. ஐயர், பேராசிரியர் அ. சீனிவாசராகவன், டி.பி. கிருஷ்ணசாமி முதலியார் ஆகியோருக்குரியது. வெ.ப. சுப்பிரமணிய முதலியாரின் 'சுவர்க்க நீக்கம்' ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கு மொழிபெயர்ப்புச் செய்த சிறந்த நூல். பொ. திரிகூட சுந்தரனார் பல ஆங்கில நூல்களைத் தமிழில் தந்துள்ளார். மொழிபெயர்ப்புக் கலை இன்னும் தளர்நடைப் பருவத்திலேயே உள்ளது.

இருபதாம் நூற்றாண்டில் நன்கு வளர்ச்சி யடைந்த பழைய இலக்கியப் பகுதி நாடகமாகும்; புதிய இலக்கியப் பகுதி சினிமாவாகும். முழுவதும் பாடலாகவே இருந்த நாடகங்கள் ஓரளவு மறைந்து நல்ல சூழ்ச்சியுடனும் உரையாடலுடனும் சிறந்த நாடகங்கள் பல மேடைமீது நடிக்கப்படுகின்றன. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் நாடகங்கள் இசைக் கச்சேரிகளாகவே இருந்தன. இந்த நிலையை மாற்றி, உரையாடலுக்கும் நடிப்புக்கும் தலைமை இடம் தந்து, தமிழ் நாடக மேடையைப் புதிய வடிவில் ஆக்கித் தந்த பெருமை பம்மல் சம்பந்த முதலியாருக்கே உரியது. டி.கே.எஸ். சகோதரர்கள், ஸேவாஸ்டேஜ் குழுவினர், நவாப் இராஜமாணிக்கம் குழுவினர் ஆகியோர் இத் துறையில் பெரும் பணிபுரிந்து வருகின்றனர். பழைய முறையில் நாடகத்துறைக்கு இந்த நூற்றாண்டில் பெருந்த தொண்டு புரிந்தவர் சங்கரதாஸ் சுவாமிகள்.

சினிமாவைப் பொறுத்தமட்டிலும் பிற படங் களைப் பார்த்துக் 'காப்பி' அடிப்பதும், பிற

பாடல்களைக் கேட்டு இசையமைப்பதும் இன்னும் ஓரளவு இருந்து வந்தாலும், இத்துறையில் கணிசமான அளவு முன்னேற்றம் கண்டுள்ளோம். நல்ல உரை நடையுடன் சிறந்த கருத்துகளையும் தாங்கி வருகின்ற இப்படங்கள் பலருக்கும் பயன்படுவதால் இந்த நூற்றாண்டின் இலக்கிய வளர்ச்சி என்று கூறத்தக்க இடத்தைப் பெறுகின்றது. சினிமாத் துறையில் நகைச்சுவைப் பகுதி இப்பொழுது ஒரு கலையாகவே வளர்ந்துள்ளது. நகைச்சுவை பழைய இலக்கியத்திலும் காணப்படுகின்ற ஒன்றாயினும் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் அச்சுவை ஒரு தனி இடம் பெற்று வளர்ந்துள்ளது. நகைச்சுவை மூலமே அரிய பெரிய கருத்துகளைக் கேட்போர் மனத்தில் பதியுமாறு செய்வது ஒரு தனிச் சிறப்பாகும். இத் துறையில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாமல் தமிழ் மொழிக்குத் தொண்டு செய்தவர் காலஞ்சென்ற நகைச்சுவைக் கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் ஆவார்.

இந்த நூற்றாண்டில் அதிகம் வளர்ச்சி அடைந்த மற்றொரு பகுதி 'பேச்சுக் கலை'யாகும். இதுவும் இலக்கிய வளர்ச்சியின் ஒரு பகுதியாகவே கருதப்படும். மிகச் சிறந்த பல பேச்சாளர்கள் இக்கால எல்லையில் தோன்றியுள்ளனர். பிற நாடுகளைப் போலப் பேச்சை எழுதிப் படிக்கும் பழக்கம் இத் தமிழ் நாட்டில் இல்லையாகலின் நம் காலத்துக்கு முன்னர் வாழ்ந்தவர்களின் பேச்சுத் திறம்பற்றி ஒன்றும் அறிய முடியாது. இந்தக் கட்டுரையாளனுக்குத் தெரிந்த வரையில், ஞானியார் அடிகள், மா.ரா. குமாரசாமிப் பிள்ளை, திரு.வி.க. சத்தியமூர்த்தி, டி.கே.சி. அ.மு. சரவண முதலியார் ஆகியோர் பெரும் பேச்சாளர்கள். இன்றுள்ளவர்களில் பெரியார் ஈ.வே. இராமசாமி,

டாக்டர் ரா.பி. சேதுப்பிள்ளை, ம.பொ. சிவஞானம், ராய. சொக்கலிங்கம், சி.என். அண்ணாதுரை, கி.ஆ.பெ. விசுவநாதன், ஜீவானந்தம், இராமகிருஷ்ணன், பல்கலைச் செல்வர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், கி.வா. ஜகந்நாதன் ஆகியோர் முன்னணியில் இடம் பெறுவர். இவர்களுள் சத்தியமூர்த்தி, திரு.வி.க., ஈ.வே.ரா., ம.பொ.சி., அண்ணாத்துரை ஆகியோர் மேடைப் பேச்சைக் கலையாகவே வளர்த்தவர்கள். நேர்மை குன்றாமல், நடுநிலை பிறழாமல், தம் கருத்தை விட்டுக் கொடாமல், பிறர் மனம் நோவாமல் அதே சமயத்தில் ஆணித்தரமாகப் பேசும் கலைக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியவர் திரு.வி.க. இப் பெரியாரைப் போலத் தமிழ் பேச இளைஞர் கூட்டம் ஒரு பெரிய அளவில் உருவாகியுள்ளது ஆகலின் இந்த நூற்றாண்டுத் தமிழ் வளர்ச்சியில் இதுவும் ஓர் உறுப்பாகும். அரசியல் கட்சிகள் பலவற்றிலும் நல்ல பேச்சாளர் பலர் உள்ளனர். இந்த நூற்றாண்டின் தமிழ் வளர்ச்சிக்கு இவர்களும் உதவுகின்றனர்.

'கற்றலில் கேட்டலே நன்று' என்ற உண்மையை மிகுதியும் போற்றுகிற நாடாகலின் கேள்விமூலம் தமிழ் வளர்ச்சியைப் பெரிதும் போற்றி வந்துள்ளது தமிழ்நாடு. இப்பொழுது ஓரளவு குறைந்து விட்டாலுங் கூடச் சில ஆண்டுகள் முன்னர்வரை ஆயிரக்கணக் கான சபைகளும், மன்றங்களும், கழகங்களும் பட்டி தொட்டிகளிலுங்கூடத் தமிழையும் சமயத்தையும் பரப்பி வந்தன. மதுரைத் தமிழ்ச் சங்கத்தை வளர்த்த பாண்டித்துரைத் தேவரைத் தமிழ் மக்கள் என்றும் நினைவு கூர்வர். கரந்தைத் தமிழ்ச் சங்கம், சைவ சித்தாந்த மகா சமாஜம், தூத்துக்குடி சைவ சித்தாந்த சபை, கம்பன் கழகம் காரைக்குடி, பம்பாய், தில்லித்

தமிழ்ச் சங்கங்கள், பாரதி தமிழ்ச் சங்கம் கல்கத்தா, அகில பர்மாத் தமிழர் சங்கம் என்பவை அவற்றுள் ஒரு சிலவாம். இவற்றுள் ஒருசில சங்கங்கள் இன்றும் வலிவுடன் நின்று தமிழ்ப்பணி புரிந்து வருகின்றன. ஆண்டுக்கொரு முறை கூடினாலுங்கூட மிகப் பெரிய அறிவாளிகளை நீண்ட தூரத்திலிருந்து வரவழைத்துப் பேசுமாறு செய்து பதினாயிரக்கணக்கான மக்கள் பெரும் பயனை எய்துகின்றனர். சென்ற 25 ஆண்டு களின் முன்னர் மேடைகளில் தமிழில் பேசுவது குறைவு என்று கருதிய பலரும் இன்று தமிழில் பேசவும் எழுதவும் தலைப்பட்டுவிட்டனர். இதுவும் ஒரு பெரிய வளர்ச்சியேயாகும்.

இந்த நூற்றாண்டின் தமிழ் வளர்ச்சியில் சைவ, வைணவ மடாலயங்களும் ஓரளவு பங்கு கொண் டுள்ளன. திருப்பனந்தாள் மடாலயத்தார் நூற்றுக் கணக்கான தமிழ் நூல்களை எளிய விலையில் அச்சிட்டு வழங்குகின்றனர். அல்லாமலும் தமிழ்க் கல்லூரிகள் நடத்தியும் சில மடங்கள் பணிபுரிகின்றன. ஏனைய நாடுகளில் பிற சமயத்தார் செய்யும் பணியை நோக்கத் தமிழ்நாட்டு மடங்களின் தமிழ்ப் பணி அளவாலும் தரத்தாலும் குறைந்துள்ளது என்றாலும் நாளாவட்டத்தில் அவைகளும் நன்கு பணிபுரிய முன்வரும் என எதிர்பார்க்கலாம்.

இந்த நூற்றாண்டுத் தமிழ் வளர்ச்சியில் வானொலியும் சொற்பொழிவுகள், நாடகங்கள், நிகழ்ச்சிச் சித்திரங்கள் மூலமாக ஓரளவு பணி புரிந்து வருகின்றது. 'வினாடி வினா'ப் போன்ற புதிய முறைகளைக் கையாண்டு தமிழில் எதுவும் முடியும் என்பதை எடுத்துக் காட்டியுள்ளனர். தமிழ் மூலம்

பொது அறிவை வளர்ப்பதற்கு இவை போன்றவை துணை செய்யும். தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் வெளியிட்டு வரும் 'கலைக்களஞ்சியம்' இந்த நூற்றாண்டின் சிறந்த தமிழ்ப் பணிகளுள் ஒன்றாகும்.

தமிழ்த் துறையில் ஈடுபட்டிராமல் பிற துறைகளில் உள்ள தமிழரும், பிற மொழியாளரும், பிற நாட்டுக் கழகங்கள் சிலவும் சிறந்தவகையில் தமிழ்த் தொண்டு புரிந்து வருகின்றனர். உலகப் புகழ் பெற்ற விஞ்ஞானியாகிய டாக்டர் கே.எஸ். கிருஷ்ணன் போன்றோர் தமிழ் இலக்கியக் கடலில் திளைத்து ஓய்வு நேரங்களில் அதனைப் பிறர்க்குக் கூறிப் பயன் பெறச் செய்கின்றனர். இற்றை நாளில் ஆட்சித் துறையில் ஈடுபட்டிருக்கும் பல ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் பலரும் வியக்கும் அளவில் தமிழ் இலக்கிய, இலக்கண அறிவு பெற்று விளங்குகின்றனர். இத் துறையில் முன் நிற்பவர் தொ.மு. பாஸ்கரத் தொண்டமான் ஆவார். செக்கோஸ்லோவேக்கியாவைச் சேர்ந்த 'கமில்ஸ்வலபில்' போன்றோர் தமிழ் கற்றுத் தமிழில் எழுதும் திறம் பெற்றுப் பிற நாட்டாரும் தமிழ் மொழியின் பெருமையை அறியுமாறு செய்து வருகின்றார்.

ஏனைய துறைகளில் முன்னேற்றம் காண்பது போலத் தமிழ்த்துறையிலும் இந்த நூற்றாண்டில் அதிக முன்னேற்றம் காணப்படுகிறது. அறுபது ஆண்டுகளில் பல்வேறு துறைகளிலும் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தை ஒரு சிறிய கட்டுரையில் எடுத்துக் காட்டுவது இயலாத காரியந்தான். எத்துணையோ பெயர்கள் விடப் பட்டுள்ளன என்பதைக் கட்டுரையாளன் அறியாமல் இல்லை. எனினும், இடங்கருதி விடப்பட்டுள்ளது என்பதை நினைவிற் கொண்டு படிப்பவர்கள் மன்னிக்க வேண்டுகிறேன்.

# 7

# தமிழ் வளர்ந்திருக்கிறதா ?

வளர்ச்சி என்று சொல்லும்பொழுது இரண்டு வகையான வளர்ச்சியைக் குறிக்கிறோம். ஒன்று நீளத்தில் வளர்வது. மற்றொன்று குறுக்கே வளர்வது. பருப்பொருள்களைப் பொறுத்தமட்டில் இந்த இரண்டு வகை வளர்ச்சியையும் நாம் காண்கின்றோம். ஆனால், நுண்பொருள்களைப் பொறுத்தமட்டில் வளர்ச்சி வேறுவகைப்படும். தமிழ் வளர்ந்திருக்கிறதா என்றால், அளவால் பெற்ற வளர்ச்சியைக் குறிக்குமா, அன்றித் தரத்தால் பெற்ற வளர்ச்சியைக் குறிக்குமா, அன்றி இரண்டையுமே குறிக்குமா என்று தெரிய வேண்டும். ஒருவேளை இந்த மூன்றையுமே (நீளம், அகலம், தரம்) இவ் வினா குறிப்பிட்டாலும் குறிப்பிடலாம். எவ்வாறாயினும் இந்த மூன்று துறைகளிலும் இந்த இருபது நூற்றாண்டுகளில் தமிழ் எங்ஙனம் வளர்ந் திருக்கிறது என்பதை இச் சுருங்கிய அளவில் ஒருவாறு காண முற்படலாம்.

இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழில் சில இலக்கியங்கள், ஒன்றிரண்டு இலக்கண நூல்கள் தோன்றின. இந்த இலக்கிய நூல்களைப் 'பத்துப் பாட்டு' என்றும், 'எட்டுத்தொகை' என்றும் குறிப்பிடுகிறோம். இலக்கண நூலைத்

'தொல்காப்பியம்' என்று கூறுகிறோம். தமிழ்நாட்டின் வரலாற்றில் கிறிஸ்துநாதர் தோன்றுவதற்கு ஒன்று அல்லது இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னர்த் தொடங்கி அவர் தோன்றிய பின்னர் மூன்று அல்லது நான்கு நூற்றாண்டுகள் முடியத் தமிழ்நாட்டில் தோன்றிய நூல்களின் எண்ணிக்கை பத்தும் எட்டும் பதினெட்டு என்று கூறினால் தவறாகாது. ஏறத்தாழ ஐந்து நூற்றாண்டுகளில் பதினெட்டு நூல்கள்தாம் தோன்றின. இவ்வாறு கூறுவதால் வேறு நூல்களே அக் காலத்தில் தோன்றவில்லை என்று கூற விரும்ப வில்லை. பல தோன்றியும் இருக்கலாம். காலாந் தரத்தில் நிலைபெற்றிருக்கும் சக்தியை இழந்து அவை அழிந்திருக்கலாம். இப்பொழுது உள்ள பதினெட்டு நூல்களில், எட்டு நூல்கள் தொகுப்பு நூற்களேயாகும். 'புறநானூறு' 'அகநானூறு' போன்றவை பற்பல புலவர் களால் பல காலத்தில் பாடப்பெற்று யாரோ ஒரு சிலரால் பிற்காலத்தில் தொகுக்கப் பெற்றனவாகும். இந்நூல்களுள் எது முன்னர்த் தோன்றியது. எது பின்னத் தோன்றியது? என்று அறுதியிட்டுச் சொல்ல முடியவில்லையாதலால் இந்த ஐந்து நூற்றாண்டுகளில் தமிழ் வளர்ந்திருக்கிறதா என்றும் காண முடிய வில்லை. என்றாலும் ஒன்றுக்கொன்று தரத்தால் குறையாத இந் நூல்களில் வளர்ச்சி இருந்து வந்தது. மேல் நோக்கி வளருகின்ற இயல்பு குறைந்திருப்பினும், குறுக்கே வளருகின்ற இயல்பு இருந்து கொண்டு இருக்கிறது என்று கூறலாம்.

இரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய 'சிலப்பதி காரம்', அதனையடுத்துத் தோன்றிய 'மணிமேகலை', அதனையடுத்து ஒன்றிரண்டு நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றிய 'பெருங்கதை' (உதயணன் சரிதம்) ஆகிய

மூன்று நூல்களும் இவ்வளர்ச்சி நீளத்திலும், அகலத்திலும் ஏற்பட்டிருப்பதை அறிவிக்கின்றன. தனியொரு பெண்ணின் வாழ்க்கையைக் காவிய முறையில் சித்தரித்துக் காட்டிய சிலப்பதிகாரம், தமிழ் நாட்டுப் பெண் ஒருத்தியின் வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டிய மணிமேகலை ஆகிய இரண்டு நூல் களும், அதற்கு முன்னர் இல்லாத முறையில் தமக்கெனப் புதுவழி வகுத்துக்கொண்டு விளங்கின வாதலால், இதை உயர அல்லது நீள வளர்ச்சி என்று கூறலாம். துண்டு துண்டுப் பாடல்களாக, யாரோ ஒருவருடைய ஒரு வீரச் செயலையோ அன்றிக் கொடை வண்மையையோ பாடிய புறநானூறு, பதிற்றுப்பத்துப் பாடல்கள்போல் இராமல், ஒருவருடைய வாழ்க்கையைத் தொடக்கத்திலிருந்து இறுதிவரையில் பாடிச் சென்ற சிலப்பதிகாரம் போன்றவை புதுமுறை வளர்ச்சி பெற்றவை என்று சொல்வதில் தவறில்லை.

ஒரு மனிதன் தன் வாழ்க்கையில் சில சிறந்த செயல்களைச் செய்திருக்கலாம். அந்தச் செயல்களை மட்டும் எடுத்துப் பாராட்டுவது எளிதான காரியம். அங்ஙனம் பாராட்டப்படும் பாடல் சிறந்த ஒரு கருத்தை அல்லது நிகழ்ச்சியை உட்கொண்டு நிற்பதால் பாடல் என்றென்றும் வாழும் உரிமையைப் பெற்று விடுகிறது. ஆனால், அந்த மனிதனுடைய வாழ்க்கை யில் நிகழும் அன்றாட நிகழ்ச்சிகளையெல்லாம் சொல்லித் தீரவேண்டிய கடப்பாட்டையுடைய சிலப்பதிகாரம் போன்ற காப்பியம் முற்றிலும் சுவை குன்றாமலிருப்பது கடினம். ஏனென்றால், வியத்தகு நிகழ்ச்சிகள் ஒன்றும் நடைபெறாத நேரத்தில் காவியத்தையும் நடத்திக்கொண்டு சென்று, சுவை

யுடைய பாடலையும் அதனுள் பெய்தல் எவ்வளவு கடினம் என்பது சொல்லத் தேவையில்லை. இவ்விரண்டு காரியங்களையும் நன்கு சாதித்த காரணத்தினால்தான் சிலப்பதிகாரம் இருவகை வளர்ச்சியையும் பெற்ற நூல் என்று கூறுகிறோம்.

இந்த மூன்று நூல்களையும் அடுத்து மூன்று நூற்றாண்டுகள் வரையில் தமிழ்நாட்டில் பெரும் இலக்கியங்கள் ஒன்றும் தோன்றவில்லை. ஏழாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில்தான் தேவாரங்கள் தோன்றலாயின. தேவார காலத்திற்கு முன்னர்த் தோன்றிய நூல்களில் கடவுளைப் பற்றிய கருத்துகளும் சிற்சில துதிப்பாடல்களும் அங்கங்கே காணப்பட்டாலும் திருமுருகாற்றுப்படை, பரிபாடலில் சில பாடல்கள், தொகை நூல்களில் கடவுள் வாழ்த்துப் பாடல்கள், ஆகியவை நீங்கலாக, தனிப்பட்ட முறையில் கடவுளையே பாடும் நூல்கள் இல்லை என்று சொல்லலாம். இதற்கொரு காரணமும் உண்டு.

தேவார காலம் வரையில் சமயம் என்பது மக்கள் வாழ்க்கையோடு ஒன்றியதாய் இருந்து வந்துள்ளது. தமிழனைப் பொறுத்தமட்டில் அவனுடைய அக வாழ்க்கையும் புறவாழ்க்கையும் எவ்வளவு இன்றியமை யாதவையோ அவ்வளவு இன்றியமையாததாகச் சமய வாழ்க்கையும் இருந்து வந்தது. வாழ்க்கையின் எல்லாப் பகுதிகளும் செம்மையான முறையில் நடத்தப்பெறும் பொழுது அங்கே சமய வாழ்க்கையைக் காண் கின்றோம். கடவுள் நம்பிக்கை என்பது பழந்தமிழ னுடைய குருதியோடு சேர்ந்துவிட்ட ஒன்று ஆதலால், அதை ஓயாமல் தனியே எடுத்துக் கூறிக்கொண்டிருக்க வேண்டிய இன்றியமையாமை இல்லை. ஆனால்,

களப்பிரர் இடையீட்டின் பின்னர்த் தமிழன் வாழ்க்கையின் அடிப்படை கெட்டுவிட்ட காரணத்தால் கடவுளைப் பற்றியும் சமய வாழ்க்கையைப் பற்றியும் வெளியே எடுத்துப் பேசும் இன்றியமையாமை ஏற்பட்டது.

கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையில் தமிழிலக்கியம் மிகப் பெரிய வளர்ச்சியை அடைந்தது என்று கூறலாம். அகலம், நீளம் ஆகிய இரண்டு பக்கங்களிலும் பெரு வளர்ச்சி ஏற்பட்டதோடு, நல்ல வலிமையும் பெற்றது என்று சொல்ல வேண்டும். சிந்தாமணி, கம்பராமாயணம், பெரியபுராணம் போன்ற காப்பிய நூல்களும், தேவாரம், திருவாசகம், பிரபந்தங்கள் போன்ற பக்தி இலக்கிய நூல்களும், நன்னூல், சூடாமணி நிகண்டு, பிங்கலந்தை நிகண்டு போன்ற கருவி நூல்களும் இந்த இடைக்காலத்தில்தான் தோன்றின. அளவாலும் இக் காலத்தில் தோன்றிய நூல்கள் மிகுதியுடையன. தரத்தால் இவை பழைய சங்க நூல்களைவிட வளர்ச்சி யடைந்துள்ளனவா என்று கூறுவது சிறிய கடினம். ஏனென்றால் சங்க நூல்களில் காணப்பெறும் பாடல்களின் போக்கிற்கும் கருத்திற்கும், இக்காலத்தில் தோன்றிய பாடல்களின் போக்கிற்கும் கருத்திற்கும் வேறுபாடு மிகுதியுண்டு.

சங்கப் பாடல்களில் புலவர்கள் அகம், புறம் என்ற இரண்டு துறைகளிலும், விரிந்து செல்வதை விட ஆழ்ந்து செல்வதையே குறிக்கோளாகக் கொண்டிருந் தார்கள் என்று நினைக்கவேண்டியுள்ளது. ஏனென் றால், எவ்வளவுதான் உயர்ந்த பொருளாக இருப்பினும் ஒருவன், ஒருத்தி என்ற இருவரிடையே தோன்றுகின்ற

காதலைப்பற்றிப் பல்லாயிரக்கணக்கான பாடல்கள் பாடினார்கள் என்றால் இதன் கருத்து யாது? காதல் என்ற ஒரே சுவையை வைத்துக்கொண்டு அலுப்புத் தட்டாத முறையில், சுவை குன்றாத முறையில், இத்தனை ஆயிரம் பாடல்கள் தோன்றின என்றால் ஆழ்ந்து செல்லும் — நுணுகிச் செல்லும் இயல்பை அவர்கள் மேற்கொண்டார்கள் என்று கூறுவதில் தவறு இல்லை. காதல், வீரம், கொடை என்ற இவற்றோடு பழம் பாடல்களின் பொருட்பரப்பு நின்றுவிடுகிறது. ஆதலால்தான் பொருட் சுருக்கம் கருதி, ஆழ்ந்து செல்லும் தன்மை அப்பாடல்களில் காணப்படுகிறது.

இடைக்காலத்தில் தோன்றிய இலக்கியங்களில் ஆழ்ந்தும் விரிந்தும் செல்லுகின்ற இயல்பைக் காண்கின்றோம். தேவாரம் முதல் பிரபந்தம் ஈறாக உள்ள பக்திப் பாடல்களில் பேசப்படும் பொருள் பக்தி யென்ற ஒன்றேயொன்றுதான். என்றாலும் பன்னி ரண்டு ஆழ்வார்களும் நான்கு நாயன்மார்களும் ஆகப் பதினாறுபேர் பல ஆயிரம் பாடல்களை இத் துறையில் பாடியுள்ளார்கள் என்றால் இவர்கள் பாடல்களில் சங்கப் பாடல்களைப்போல ஆழ்ந்து செல்லும் இயல்பு இருக்கிறது என்று கூறத் தேவையில்லை. நம்மாழ்வார், ஞானசம்பந்தர் போன்றவர்கள் ஒரே பக்திச் சுவையை வைத்துக்கொண்டு ஆயிரக்கணக்கான பாடல்களைப் பாடினார்கள் என்றால், அப்பாடல்களை ஒரு சிறிதும் அலுப்புத் தட்டாமல் பலமுறையும் படித்து இன்புறலாம் என்றால், அதன் காரணம் யாது? இவ்வொரு சுவையில் ஏற்படுகின்ற பல்வேறு அனுபவங்களையும் நுணுகி நுணுகிச் சென்று கண்டு

அவர்கள் பாடியுள்ளார்கள் என்பதே நாம் அவற்றை அலுப்புத் தட்டாமல் படிப்பதற்குக் காரணமாகும். இதுவே ஆழ்ந்து செல்லும் முறை எனப்படும்.

ஒரே சுவையில் ஆழ்ந்து சென்று பல்வேறு அனுபவங்களைப் பாடும் இம்முறை சங்கப் பாடல்முறை என்று கூறலாம். இதனையடுத்துள்ளது பல்வேறு சுவைகளைப் பாடுவதாகும். இராமாயணம், சிந்தாமணி போன்ற காப்பியங்கள் இவ்விரண்டாவது வகையைச் சேர்ந்தவை. இந் நூல்கள் விரிந்து செல்லும் இயல்பைத் தலைமையாகக் கொண்டு தோன்றியவை. மனித அனுபவம் எத்தனை எத்தனை வகைப்படுமோ அந்த அனுபவத்தில் எத்தனை சிக்கல்களும் பிரச்சினைகளும் ஏற்படுமோ அவை அனைத்தையும் ஒருவாறு தாங்கி வெளிவருகின்ற விரிந்த இயல்புடைய இப் பெரு நூல்கள். விரிந்து செல்கின்றன என்ற காரணத்தால் இவை ஆழ்ந்து செல்லும் இயல் புடையன அல்லவோ என்று யாரும் ஐயப்பட வேண்டா. பல்வேறு வகையான சூழ்நிலைகளையும், சந்தர்ப்பங்களையும், சுவைகளையும் இவை பேசு கின்றன என்ற காரணத்தால் விரிந்து செல்லுகின்றன என்று கூறினோமே தவிர, அதனால் இவை ஆழ்ந்து செல்லவில்லையென்பது கருத்தன்று. இந் நூல்கள் தனிப்பட்ட எந்த ஒரு சந்தர்ப்பத்தை எடுத்துக் கொண்டாலும், எந்த ஒரு பாத்திரத்தின் மனோ நிலையை எடுத்துக்கொண்டாலும் அப் பாத்திரப் படைப்பிலும், சூழ்நிலைப் படைப்பிலும் மிக மிக ஆழ்ந்து சென்றுள்ளதைக் காண முடியும். எனவே, இவ்விடைக்கால நூல்கள் ஆழ்ந்து செல்லும் இயல்போடு விரிந்து செல்லும் இயல்பையும்

பெற்றுள்ளனவாதலால் சங்க நூல்களைக்காட்டிலும் ஒருமுறையில் வளர்ச்சி பெற்றுள்ளன என்று கூறலாம்.

இவ் இடைக்காலத்தில் தோன்றிய நூல்கள் அளவாலும் சங்க நூல்களைக் காட்டிலும் வளர்ச்சி யடைந்திருந்தன. எந்த வகையான உணர்ச்சியையும் வெளியிட ஆசிரியப்பா, கலிப்பா என்ற இரண்டே வகையான பாடல்களைத் தவிர, வேறு வகையான பாடல் முறையை மேற்கொள்ளாத சங்கப் பாடல் களினும், மிகவும் விரிந்து கொடுக்கக்கூடிய விருத்தப் பாவைப் பயன்படுத்திய இவ் இடைக்கால நூல்கள் பாடல் முறையிலும் வளர்ச்சியடைந்தன என்று கூறலாம். பாடல்களில் தோன்றும் சொற்கள் பொருள்களைத் தம்முடைய 'பொருள் உணர்த்தும் சக்தியாலும்' 'ஓசைச் சக்தியாலும்' வெளியிடும் என்பது நாம் அறிந்ததே.

சங்கப் பாடல்களில் சொற்களின் இந்த ஓசைச் சக்தியை மிகுதியும் பயன்படுத்தினார்கள் என்று சொல்ல முடியாது. ஏனென்றால், அவர்கள் மேற் கொண்ட ஆசிரியப்பாவிற்குச் சொற்களின் இந்தச் சக்தியைப் பயன்படுத்தும் வன்மை மிகுதியாக இல்லை. எனவே, இடைக்கால இலக்கியம் இக் குற்றபாட்டை உணர்ந்து, ஆசிரியப்பாவை ஏறத்தாழ ஒதுக்கியே விட்டது என்று கூறலாம். இதுவும் ஒரு வகை வளர்ச்சியே.

மொழி இக்காலத்தில் அடைந்த வளர்ச்சியை மனத்திற்கொண்டு அந்த வளர்ச்சியை ஏற்றுக் கொள்கின்ற முறையில் அதற்கேற்ற இலக்கணம் எழுதப் பெற்றது. தொல்காப்பியத்தோடு சில வகைகளில் மாறுபட்டும் புதியவற்றை ஏற்றுக்

கொண்டும், இலக்கிய வளர்ச்சிக்கு உதவிய பெருமை இக்காலத்தில் தோன்றிய இலக்கண நூல்களுக்கு உண்டு. இந்நூல்கள் தோன்றியதே, மொழி வளர்ச்சியைப் பெரியோர்கள் ஏற்றுக் கொண்டார்கள் என்பதை அறிவுறுத்துவதாகும்.

இதனையடுத்துப் பதின்மூன்று முதல் பதினெட்டாம் நூற்றாண்டு முடிய ஒரு காலப் பகுதியாகும். இக்காலப் பகுதியில் தமிழ் வளர்ந்திருக்கிறது என்று உறுதியாகச் சொல்வதற்கில்லை. பெரும் காடு அழிந்து குட்டையும் நெட்டையுமான சிறு மரங்களும் செடிகளும் எஞ்சி இருப்பதைப்போல இந்த நூற்றாண்டுகளில் குட்டையும் நெட்டையுமான சிறு நூல்களும் பிரபந்தங்களுமே எஞ்சியுள்ளன. என்றாலும் இந்தப் பகுதியிலும் ஓரிரு வழிகளில் தமிழ் வளராமல், இல்லை. பன்னிரண்டாம் நூற்றாண்டு முடிய, சாத்திரம் என்ற பகுதி தமிழ் இலக்கியத்தில் இல்லை. பதினான்காம் நூற்றாண்டையடுத்துத் தோன்றிய 'சிவஞான போதம்', 'சிவஞான சித்தியார்' போன்ற நூல்கள் தமிழ் இலக்கிய உலகில், அதுவரை காணப்படாத புதுமுறை வளர்ச்சியாகும். உணர்வு உலகம் ஒன்றிலேயே மூழ்கி இருந்த தமிழன் அதனை விட்டு வெளியே வந்து, தான், உலகம், தனக்கும் உலகிற்கும் உள்ள தொடர்பு, உலகப் படைப்பின் மூல காரணம், அந்த மூலகாரணத்திற்கும் தனக்கும் உள்ள தொடர்பு என்பவற்றைப் பற்றியெல்லாம் சிந்திக்கத் தொடங்கினான். அங்ஙனம் சிந்தித்துக் கண்ட முடிவுகளை இலக்கிய வாயிலாக வெளியிட்டான். சமய சாத்திரங்கள் என்ற பெயருடன் இவை தோன்றின. தமிழ்மொழி வளர்ச்சியில் முற்றிலும் புதிய துறை வளர்ச்சி என்று கூறலாம் இதனை. (மணி

மேகலை போன்ற முந்தைய நூல்களில் தத்துவக் கருத்துகள் உண்டு. எனினும் சாத்திர நூல்கள் இருந்தமைக்குரிய சான்றுகள் இல்லை.)

இப்புதிய துறையில் வளர்ச்சி ஏற்பட்டதே தவிரப் பழைய இலக்கியத் துறையில் குமரகுருபரர், சிவப்பிரகாச சுவாமிகள் என்ற இருவரைத் தவிர மற்றையோர் பெரும் அளவில் இலக்கியம் ஒன்றும் செய்யவில்லை. இவர்களுடைய நூல்களும் பழைய வற்றோடு ஒப்புநோக்கக் குட்டையானவையாக உள்ளன. எவ்வளவு முயன்றும் காலக்கூறு பாட்டால் இவர்கள் பழைய நிலையை எட்ட முடியவில்லை.

நூல்களுக்கு ஆழ்ந்த விரிவுரைகள் எழுதுதல் என்ற புதிய துறை தமிழ் இலக்கிய வளர்ச்சியில் இக் காலத்தில் தோன்றிய ஒன்றாகும். நச்சினார்க்கினியர், பேராசிரியர், பரிமேலழகர் என்பவர்களோடு சிவஞான போதப் பேருரை எழுதிய சிவஞான சுவாமி களும் இப் புதிய துறை வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்தார்கள்.

பத்தொன்பது இருபதாம் நூற்றாண்டுகளில் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் அகல வளர்ச்சியைக் காண்கிறோமே தவிர, ஆழ்ந்த வளர்ச்சியைக்* (நீளம்) காண முடியவில்லை. உரைநடை வளர்ச்சியும், வேற்று மொழித்தொடர்பு ஏற்பட்டமையால் பல்வேறு துறைகளில் புதிய நூல்கள் தோன்றுகின்ற இயல்பும் நிறைந்தன என்பது உண்மைதான். ஆனால், இவற்றுள் எத்தனை நூல்கள் காலத்தை வென்று நிற்கும் என்பது ஆராய்ச்சிக்குரியது. இருபதாம் நூற்றாண்டில் இலக்கிய

* Depth

வளர்ச்சியடைவதற்கு உரிய அச்சுக் கருவிகள், ஒலி பரப்பிகள், செய்தித்தாள்கள் போன்ற பல சாதனங்களும் எண்ணற்று மலிந்து விட்டன. என்றாலும் என்ன? இவையனைத்தையும் நிரப்புகின்ற முறையில் கட்டுரைகளும், சிறுகதைகளும், நாடகங்களும் வெளி வருகின்றன. அளவால் கணக்கிடும்பொழுது இதனைப் பெருவளர்ச்சி என்று கூறலாமேனும், தரத்தால் கணக்கிடும்பொழுது வளர்ச்சி என்று கூற முடியுமா?

கடந்த இருபது நூற்றாண்டுகளையும் எடுத்துக் கொண்டு பார்க்கும்பொழுது பன்னிரண்டாம் நூற்றாண்டுவரை இலக்கியம் தரத்தாலும் அளவாலும் வளர்ந்து, பின்னர்ப் புதுமுறை வளர்ச்சியைப் பெற்றுப் பத்தொன்பது இருபதாம் நூற்றாண்டுகளில் அளவால் மட்டும் வளர்ச்சியைப் பெற்றிருக்கின்றது என்று கூறினால் தவறில்லையோ என்று நினைக்கின்றேன்.

8

# தனித்தமிழ்

உயர்தனிச் செம்மொழியாகிய நம் தமிழ் தனித்து இயங்க வல்லதா என்ற வினா இன்று தோன்றுவதில்லை. கால்டுவெல் பெரியாரின் முயற்சியின் பயனாக அது இயங்கவல்லது என்ற உண்மை நிலை நாட்டப் பெற்றுவிட்டது. ஏனைய மொழிகளின் உதவி இன்றியே தமிழன் தன் கருத்துகளை வெளியிட முடியும். எத்துணைப் புதியதாக உள்ள அறிவியல் கலைகளேனும் அவற்றைத் தமிழில் வெளியிடலாம். ஆனால், இங்ஙனம் செய்வதற்குத் தடையாக உள்ளது கலைச் சொற்கள் தமிழில் இல்லை என்பதேயாம். இதனைப் பின்னர்க் காண்போம்.

தமிழ்மொழி தனித்தியங்க வல்லது என்பதும் தனித்தியங்கித்தான் தீரவேண்டும் என்பதும் வேறு வேறு கருத்துகள். அது தனித்தியங்க வல்லது என்பதில் ஒரு சிலர் தவிர ஏனையோர் மாறுபட்ட கருத்துடையரல்லர். அவ் ஒரு சிலரும் ஆழ்ந்து ஆராயாது முடிவுக்கு வருவதாலும், வேண்டுமென்றே முரண்படுவதாலும் அவர்களைப்பற்றிக் கவல வேண்டுவதின்று. தமிழ் தனது பரந்துபட்ட மொழியின் மிகுதியானும், ஆழ்ந்துள்ள பொருட்சிறப்பானும் தனித்தியங்கக்

கூடியதேயாயினும், இன்றைய நிலையில் இது இன்றியமையாததா என்று காண வேண்டும்.

ஊர், நகரம், நாடு என்ற நிலை நீங்கி இன்று உலகம் முழுவதும் ஒன்று என்ற நிலை வந்துவிட்டது. மொழியின்மாட்டுப் பற்று இன்றி இருக்கிறவர் ஒருவருமிலர். ஆனால், மொழி மனிதனுடைய வாழ்வுக்கு இன்றியமையாததொரு கருவியே என்பதை மறந்துவிடுதலாகாது. மொழிக்காக மனிதன் வாழ்கிறான் என்ற நிலை ஏற்படுமாயின் அது வருந்தத் தக்கதே. மொழியின் பொருட்டு மனிதன் வாழ முற்பட்டால் அந்நிலையில் மனிதனின் மதிப்புத் தாழ்ந்துவிடுகிறது. எந்த ஒரு நாட்டில் மனிதனை மனிதன் என்பதற்காக மதிக்கவில்லையோ அந்த நாடு விரைவில் கீழ்நிலையடையும். கடவுட் படைப்புகளி லெல்லாம் மேம்பட்ட மனிதன் தன் வாழ்வு செம்மையுறுவதற்காகக் கொண்டுள்ள கருவிகளில் மொழி மிகச் சிறந்த ஒன்று மனிதன் மனத்தில் தோன்றும் எண்ணத்தை வெளியிடப் பல வழிகள் உள்ளன. குறியீடு முதல் மொழிவரை அவை பல திறப்பட்டன. ஆனால், அவற்றுள் எல்லாம் தலைசிறந்தது மொழியே.

ஆனால், எண்ணங்களை அப்படியே வெளியிடும் வன்மை மொழிக்கில்லை. இருக்கவும் இயலாது. அதன் காரணம் மனிதன் தானாக ஆக்கிக்கொண்டதே மொழி என்பதாகும். நாளாவட்டத்தில் தனது அறிவும் அனுபவமும் வளர வளர மனிதன் தன்னால் பேசப்படும் மொழியையும் மாற்றியமைத்துக் கொண்டிருக்கிறான். நமது தாய்மொழியாகிய தமிழும் இவ் விதிக்கு விலக்குடையதன்று. என்வே, மாறுந்

தன்மையுடையது மொழியென்றால், அது நம்மால் பயன்படுத்திக்கொள்ளப்பட வேண்டியதொன்றே தவிரப் போற்றி வழிபாடு மட்டும் செய்வதற்குரிய தன்று என்ற உண்மை விளங்கும் வழிபாடு செய்வதற்கே உரியது என்றால் எம் மொழி என்ற வினாத் தோன்றியே தீரும். பழங்காலத்தில் இருந்த மொழியா, அன்றி உருவம் மாறி இன்று வழங்கும் மொழியா? எது நமது வழிபாட்டிற்குரியது? எனவே, மொழி நமக்குப் பயன்பட வேண்டியதொன்று என்ற முடிவுக்கே வர வேண்டி நேரிடும். அது நமக்குப் பயன்பட வேண்டியதென்ற காரணத்தால் அதனிடத்து அன்பும், ஆர்வமும் கொள்ளக்கூடா தென்பது கருத்தன்று. அன்பு செய்யப்படலாம்; போற்றப்படலாம்; அதற்காக அது எங்ஙனம் இருப்பினும் மாற்றத்திற்குரியதன்று என்று நினைப்பதே தவறாகும்.

மனித மனத்தில் தோன்றும் எண்ணங்களை வெளியிடுவதற்குரிய கருவியே எல்லா மொழிகளும் என்றால், அம் மொழி அத் தொழிலைச் செம்மையாக செய்ய வேண்டும். ஆனால், உண்மையை ஆராயு மிடத்து உலகிடைத் தோன்றிய எந்த மொழியும் இத் தொழிலை முற்றிலும் செய்தது என்று கூறுவதற் கில்லை. மொழியால் குறிக்கப்படவியலாத எண்ணங் களும் உணர்ச்சிகளும் மனிதன்பால் நிரம்ப உள்ளன. அத்தகைய நிலையில் நாம் யாது செய்தல் வேண்டும்? எண்ணத்தை எவ்வாறாயினும் வெளியிட்டுத் தீர வேண்டும். அதுவே சிறப்புடையது. அதுவே உயிர் போன்றது. அது வெளிவருகையில் போர்த்து வரும் உடல் போன்றதே மொழி. உடல்மேல் உள்ள பற்றுக் காரணமாக உயிரை விட்டுவிடலாமா?

தனித் தமிழிலேயே நமது எழுத்து இருக்க வேண்டும் என்று கூறுவோர் ஒருபுறம். எந்த மொழியைக் கலந்தாயினும் கருத்தை அறிவித்தால் போதும் என்போர் ஒருபுறம். இருவரும் இரண்டு எல்லைகளில் நிற்கின்றனர். நடுநிலையில் நின்று ஆராய்வார்க்கு இருவர் கூற்றும் ஏற்றுக் கொள்ளக் கூடாததாகக் காணப்படும்.

முதலாவதாகக் கூறப்பட்டோர் கூற்று, மொழி மனிதனின் கருவி என்பதை மறந்தமையால் தோன்றிய தொன்று. அது தவறு என்பதைக் கண்டோம். இனி அடுத்து வரும் கருத்து இதன் மறுதலையாயது. இவர்கள் கருத்தை வெளியிடுவதற்காகத்தான் வேற்று மொழிகளைப் பயன்படுத்துகிறார்களா, அன்றி வேண்டுமென்றே செய்கிறார்களா என்று காண இயலவில்லை. "தமிழ் ஒரு இனிமையான **பாஷை; அது ரொம்பவும் ரசிக்கக்** கூடியது" இங்ஙனம் கூறுவதால் தான் ஐயம் ஏற்படுகிறது. 'தமிழ் ஓர் இனிய **மொழி**, அது **மிகவும் அனுபவிக்கக்**கூடியதொன்று' என்று கூறுவதால் மிகுதியான தொல்லை ஒன்றும் இல்லை.

எனவே, முற்கூறியதுபோல் பேசுவதே அவ்வளவு பொருத்தமுடையதாகக் காணப்படவில்லை. நமது கருத்துப்படி எண்ணத்தை வெளியிடுவதே முதற் காரியம். அவ்வாறாயின் எவ்வாறு வெளியிடுவது? நாம் அறிந்த மொழியில் வெளியிட வேண்டும். நாம் அறிந்த மொழியில் உள்ள சொற்கள் நமது கருத்தை அறிவிக்கக்கூடிய வன்மை பெற்றிருக்கும். அங்ஙனம் பெறவில்லை என்றால் நாளாவட்டத்தில் அவை அழிந் தொழியும். நமது எண்ணந் தோன்றுவதற்குக் கருவியாக இருப்பதே தாய்மொழி என்று கூறப்படும். சில

நேரங்களில் இம்முறை மாறிவிடுகிறது. வேறு மொழியில் மிகுதியும் பழகிய காரணத்தாலும் வேறு மொழியில் தோன்றியுள்ள கருத்துகளை ஆராய்வ தாலும், அதே கருத்தை நாம் வெளியிடும்பொழுது வேற்று மொழிகள் கலக்கின்றன. இங்ஙனம் வேற்று மொழிகளைக் கலக்கையில் அவை இன்றியமையாத வையா என்று துணிய வேண்டும். அறிவியல் கருத்துகளை எடுத்துரைக்கும்பொழுது இத்தகைய இடர்கள் தோன்றுகின்றன. பார்ப்பதற்கு ஓரே கருத்துடையனபோற் காணப்பட்டுப் பல்வேறு பொருட்குறிப்பை உடைய சொற்கள் வேற்று மொழியில் வழங்குகின்றன. நமது தமிழ்ப் பற்றின் காரணமாக அவற்றைத் தமிழாக்குவோம் என்று முற்பட்டால் இடர் ஒன்றுதான் எஞ்சும். கலைச் சொற்களைத் தமிழாக்குவதாகப் புறப்பட்ட பலரும் வடமொழியாக்கினரே தவிரத் தமிழாக்கவில்லை.

எனவே, வடமொழியாக மாற்றி அவற்றைப் பயன்படுத்துவதைக் காட்டிலும் நேரடியாக அவற்றை எம்மொழி வடிவத்தோடு நிற்பினும் அப்படியே ஏற்றுக் கொள்ளுதல் தவறுடையதாகாது. அதனால் மொழி வளர்ச்சியும் சிறப்பும் எவ்வாற்றானும் குன்றாது. அறிவியல் நூல்களும் கருத்துகளும் தற்காலத்தில் தோன்றுபவை. அவ்வப்பொழுது நேரும் இன்றியமை யாமைக்கேற்பப் புதிய பெயர்களை இடுகின்றனர். இவற்றுள் பெரும்பாலானவை காரணப் பெயர்கள். இவற்றை அப்படியே எடுத்துக் கொள்ளுதல் நன்று.

இது நிற்க, ஏனைய எழுத்துகளில் பிறமொழி கலக்கலாமா என்ற வினாவைச் சற்று ஆராய்வோம். கலப்பு ஏன் ஏற்படுகிறது? கலப்பு இன்றியமையாமை

நோக்கி ஏற்படுமாயின் அதனை ஏற்றுக்கொள்வதில் தவறு ஒன்றுமில்லை. இதனாலும் நமது மொழி வளர்ச்சி குன்றாது. ஆனால், இன்றியமையாமை எப்பொழுது ஏற்படுகிறது? மனம் ஒன்றை நினைக்கிறது; நினைவோ சொல் வடிவில் செல்கிறது. பிறகு நினைவு வெளிப்படுகையிலும் சொல்லாகவே வெளி வருகிறது. நினைவில் பெரும்பாலும் தாய் மொழியே பயன்படுகிறது. ஆனால், அது தூய்மையான தாக இருப்பதில்லை. பழக்கங் காரணமாகப் பிறமொழி களோடு கலந்த தமிழிலே நினைக்கிறோம். எனவே, அதி வெளி வருகையில் அங்ஙனம் கலந்த வடிவிலேயே வருகிறது. இது முறையா என்பது இரண்டைப் பொறுத்தே இருக்கிறது. முறையன்று என்று ஓர் அளவு வரை கூறலாம். மொழி என்று யாவரும் அறிந்த ஒரு சொல் இருக்க, 'பாஷை' என்று கூறுதல் தவறு. என்ன கருத்தாயினும் அதனைத் தனித்தமிழ்ச் சொற்க ளாலேயே வெளியிடுதல் சாலச் சிறந்தது. மேனோக் காகப் பார்ப்பதற்குத் தமிழ்ச் சொல் ஒன்றுங் காணப்படவில்லை என்று கூறிக்கொண்டு உடனே வேற்றுமொழிக்குச் செல்வதும் சிறப்புடையதன்று. அவ்வாறாயில் காலஞ் செல்லச் செல்லப் பயன்படுத்துவார் இல்லாமல் பல மொழிகள் இறந் தொழியும். எனவே, கூடுமானவரை தமிழ்ச் சொற்களைத் தேடிப் பயன்படுத்த வேண்டும். அவை வழக்காற்றில் மறைந்திருப்பினும் செம்மையான சொற்களாயிருப்பின் அவற்றை மீண்டும் வழக்கில் கொண்டுவர வேண்டும். மொழி வளர்வதற்கு இது ஒரு நல்ல வழியேயாகும்.

ஆனால், இங்ஙனஞ் செய்வதற்கும் எல்லையுண்டு இவ்வளவுக்கும் அடிப்படையான கருத்து மாறா

திருக்கும்வரை எம்மொழியிலும் அதனை வெளியிட லாம். தனித் தமிழையே பயன்படுத்த வேண்டும் என்ற தொரு கட்டுப்பாட்டிற்காகத் தனித்தமிழ்ச் சொற்களைத் தேடி ஆராய முற்பட்டு அம் முயற்சியில் கருத்தைப் பலி கொடுத்தல் பொருத்தமுடையதாகாது. கூறவந்த பொருள் சாதாரணமானதாக இருப்பின் அதனால் ஒன்றுந் தவறில்லை. ஆனால், உயர்ந்ததொரு கருத்தைக் கூறுகையில் இம் மொழி ஆராய்ச்சியில் ஈடுபட்டுக் கருத்தைப் பறி கொடுத்தல் ஆகாது. கருத்துக்கு மொழி உதவியே தவிர மொழிக்குக் கருத்து உதவியன்று. ஆனால், ஒரே கருத்தைத் தனித்தமிழ் மொழியாலுங் கூறலாம், பிறமொழி கலந்துங்கூறலா மென்றால், இரண்டாவது வகை புறக்கணிக்கப்பட வேண்டியதே; மொழி வளர்ச்சிக்கு அஃது ஏற்றதன்று.

பன்னெடுங் காலமாக மிகவும் பண்பாடு பெற்றுயர்ந்த மக்களால் வழங்கப்பட்டு வரும் மொழி யாகிய நம்தமிழ் மொழி பொருட்செறிவில் ஏனைய மொழிகளோடு எவ்விதத்திலும் தாழ்ந்ததன்று. இதன்கண் தோன்றி வளர்ந்த கவிதையே இது மிகத் தொன்மையும் சிறப்பும் வாய்ந்த ஒன்று என்பதற்குச் சான்றாகும். இத்தகைய மொழியில் பிறமொழி கலந்தே எழுத வேண்டும் என்பதில்லை. ஆனாலும் சில காலமாக நமது மொழியோடு கலந்த மொழிகள் உண்டு. நமது இலக்கண ஆசிரியர்களும் அவற்றை ஏற்றுக்கொண்டு இலக்கணம் செய்துள்ளனர். அவற்றை நீக்குதல் என்பது எளிமையானதன்று. நீக்க முயன்றால் இடர்ப்பாடு பெரிதாய் விளையும். எனவே, இம் முயற்சியைவிட்டு மொழிக்கு உண்மையாகவே ஆக்கந் தேடுபவர்கள் நல்ல கருத்தை நல்ல வகையில் நமது மொர்ழியில் வெளியிடப் பயிலுதல் நன்று.

மிகவும் இன்றியமையாத இடங்களில் பிறமொழி ஒன்றிரண்டு வருதலினால் மொழிவளம் மிகுமே தவிரக் குறையாது. எண்ணங்களை வெளியிடும் கருவி மொழி என்பதும், அறிவுடைய ஒருவன் தனது கருவியில் வேற்றுப் பொருள் கலவாது பாதுகாத்தல் போல் மொழியையும் பாதுகாத்தல் வேண்டும் என்பதும், அக் கருவிகட்கு எண்ணெய் முதலியன இடுதல் போலவும், உறை இடுதல் போலவும், மொழி வளர்ச்சிக்கு ஆக்கமான அளவுக்குப் பிறமொழிச் சொற்களை ஏற்றுக்கொள்ளலாம் என்பதும் இன்றைய நிலையில் நடுநிலைமையோடு நோக்குவார்க்குப் புலனாம்.

# 9

# மாணவர்களிடையே படிக்கும் வழக்கத்தை வளர்த்தல்

கல்வி என்ற தமிழ்ச் சொல்லே 'கல்' என்னும் பகுதியினடியாகப் பிறந்தது. 'கல்' என்றால் 'தோண்டு' என்று பொருள். எனவே, தோண்டத் தோண்ட மணற்கேணி சுரப்பதுபோல் அறிவின் துணை கொண்டு தோண்டத்தோண்டக் கல்வியும் வளரு மென்பதே கருத்தாகும். கற்காலத்தில் வாழ்ந்த மனிதனுக்கும் இன்று வாழுகின்ற மனிதனுக்கும், மனிதன் என்ற அளவில் பொதுத்தன்மை இருப்பினும், அறிவு நிலையில் மலைக்கும் மடுவுக்குமுள்ள வேறுபாடு இருக்கின்றது. உலகமும், இயற்கையும், உலகப் பொருள்களும் அன்றும் இன்றும் ஒரே மாதிரியாக இருப்பினும் இவ்வுலகத்தையும் அதிலுள்ள பொருள்களையும் மனிதன் காண்கின்ற காட்சியில் வேறுபாடு மிகுதியாகவுளது. அன்றைய மனிதன் பொருளைப் பொருளாகக் கண்டானே தவிர, அதனை ஊடுருவி நோக்கும் சக்தியையும் வாய்ப்பையும் பெற்றிருந்தானில்லை. அறிவு மிகுதியாக வளர்ந்துள்ள இற்றை நாளில் பொருள்களைப் பார்க்கும்பொழுது அதனுடைய புற வடிவத்தை மட்டும் கண்டு அமைதியடையாமல் மனிதன் ஊடுருவி நோக்கவும்

கற்றுக் கொண்டுள்ளான். ஆதலால், உலகில் எல்லாப் பொருள்களும் ஆதிகால மனிதனுக்குத் தந்த காட்சிவேறு; இன்றைய மனிதனுக்குத் தருகின்ற காட்சி வேறு.

இக் காட்சி வேறுபாடு எதனால் கிடைத்தது? மனிதனின் அறிவு வளர்ந்த காரணத்தால் அவ் வறிவின் துணைகொண்டு, பொருள்களை ஊடுருவி நோக்கும்பொழுது பொருள்களின் தன்மையும் இயல்பும் மாறிவிடுகின்றன. இவ்வாறு சொல்வதால் பொருள்கள் மாறி விட்டன என்பது கருத்தன்று. அப் பொருள்களைக் காணும் மனிதனின் அறிவு வளர்ச்சி காரணமாக, அப் பொருள்களுள் அடங்கியிருக்கும் உண்மைப் பொருளை, தத்துவத்தை இன்றைய மனிதன் காண்கின்றான் என்பதே கருத்தாகும். இங்ஙனம் காண்பதற்குரிய வாய்ப்பை மனிதனுக்கு நல்கியது எது? அது அவனுடைய அறிவேயாம். இந்த அறிவை மனிதன் எவ்வாறு பெற்றான்? கல்வியின் மூலமாகத் தான் பெற்றான். ஆதலால்தான் பொருள்களின் புற வடிவத்தைக் காண்கின்ற கண்களும், அவற்றின் அக வடிவை ஆராய்கின்ற கல்வியும் ஒன்று என்றே வள்ளுவர் கூறிப்போனார். எண்ணும் எழுத்தும் மாந்தர்க்குக் கண்ணென்றே நம் முன்னோர் கூறினர். எனவே, மனிதன் அறிவு படைத்த மனிதனாக வாழ வேண்டுமானால் உலகத்தில் உள்ள பொருள்களை. கேவலம் யானைகண்ட குருடர்களைப்போல் காணாமல், அவற்றின் தன்மையை, இயல்பை, அடிப்படையை உள்ளவாறு காணவேண்டுமானால் கல்வி இன்றியமையாதது என்று புலப்படும். இக் கல்வியைத் தவிர வேறெந்த வழியாலும் மனிதன் உலகத்தைப் பூரணமாகக் காணமுடியாது? உலகத்தை

மட்டுமென்ன? இவ் வுலகத்தைச் சூழ்ந்து ஊடுருவி அப்பாற்பட்டு நிற்கின்றதாகிய பரம்பொருளையும் அறிந்துகொள்ள வேண்டுமானால் கல்வி ஒன்றின் மூலமாகத்தான் இயலும்.

கல்வி என்று சொல்லும்பொழுது ஏட்டுக் கல்வியைமட்டும் நாம் குறிப்பிடவில்லை. அனுபவத் தாற் பெறப்படும் கல்வியும், கேள்வி ஞானத்தால் பெறுகின்ற கல்வியும், அக உணர்வுத் தூண்டலால் பெறப்படுகின்ற கல்வியும் கல்வியென்றே அழைக்கப் பெறும். ஏட்டுக்கல்வி, கேள்விக்கல்வி என்ற இரண்டினையும் நாம் அறிவோம். ஆனால், இவை யிரண்டினையும் கடந்த அகவுணர்வுக் கல்வியென்ற ஒன்றும் உண்டு. இயேசுநாதர், ஞானசம்பந்தர், நம்மாழ்வார், இராமகிருஷ்ண பரமஹம்ஸர் போன்ற வர்கள் நம்மைப்போல் ஏட்டுக் கல்வியில் தொடங்கி, கேள்விக் கல்வியில் வளர்ந்து, மூன்றாவதாக உள்ள அகவுணர்வுக் கல்விக்குச் செல்லாமல், நேரடியாகவே அகவுணர்வுக் கல்வியைப் பெற்றார்கள். இதனால் இவர்களை நம் முன்னோர்கள் ஓதாதுணர்ந்த பெரியோர்கள் என்று கூறினார்கள். அதாவது கல்வியை ஓதுவதே பொருள்களை உள்ளவாறு காண்பதற்குத்தான். ஆகவே, உணர்தல் ஆகிய பயனை ஓதுதல் வழியின்மூலம் அடைவது ஒன்று; அவ்வா றில்லாமல் ஓதுதல் ஆகிய வழியை விட்டுவிட்டு உணர்தலாகிய பயனை அடைதலும் உண்டு. மேலே கூறிய பெரியோர்கள் நம்மைப்போல் சாதாரண வழியை மேற்கொள்ளாமல் தீவிரமான வழியை மேற் கொண்ட காரணத்தால் அந்த இரண்டு படிகளின் மூலமாகச் செல்லாமல் மூன்றாவது படியை அடைந்துவிட்டனர்.

இராமகிருஷ்ண பரமஹம்ஸர் போன்ற பெரியவர்களுக்குமட்டும் இவ் வழி உரியதே தவிர, நம்மைப் போன்ற சாதாரண மக்கள் முதலில் கூறியபடி, கற்றல், கேட்டல், சிந்தித்தல், தெளிதல் ஆகிய வழிகளை மேற்கொள்வதன் மூலமாகத்தான் உண்மைக் கல்வியைப் பெற முடியும். அதிலும் பொறிபுலன்கள் சுறுசுறுப்பாகவுள்ள இளமைக் காலத்தில் கல்வியை மேற்கொள்வதைவிடச் சிறந்த காலம் வேறில்லை. சாந்துணையும் கற்கவேண்டும் என்று நம்முடைய பெரியோர்கள் கூறியுள்ளார்கள். என்றாலும் அதனைத் தொடங்குவதற்குரிய நேரம் இளமையேயாகும். வெறும் பாடப் புத்தகங்களை மட்டும் படித்துத் தேர்வுகளில் வெற்றிபெறுவதுதான் குறிக்கோள் என்று மாணவர்கள் நினைத்துவிடக் கூடாது. தேர்வில் வெற்றி பெறுவது முக்கிய மென்றாலும் அதைவிட முக்கியம் இந்த இளமைக் காலத்தில் நிரம்பக் கற்றுப் பிற்கால வாழ்க்கைக்குத் தன்னைத் தயாரித்துக் கொள்ளல் வேண்டும். இன்றைய நிலையில் கல்வி உலகம் விரிந்து நிற்கின்ற சூழ்நிலையைப் பார்த்தால் எந்த ஒருவனும் பிறந்ததிலிருந்து இறக்கின்றவரையில் கல்வி யொன்றையே பொருளாகக் கருதிக் கற்றாலும், ஒரு பகுதியைக்கூட முற்றக் கற்றான் என்று சொல்ல முடியாது. ஆகவே, கலையியல் (Humanities), விஞ்ஞானம் (Science) என்ற இரண்டும் இன்றைய மனிதனுக்கு இரண்டு கண்கள் போலாகும். ஒரு கண்ணை மட்டும் கூர்மையாகச் செய்துகொண்டு மற்றொரு கண்ணைப்பற்றிக் கவலைப்படாமல் பார்வையிழக்கச் செய்வது மிக மிக வருந்துதற்குரிய ஒன்று. மனிதன் முழு வளர்ச்சி பெற வேண்டுமானால்

அறிவு, பண்பு என்ற இரண்டும், அதாவது, மூளையும் நெஞ்சும் நன்கு வளர்ச்சியடைய வேண்டும். நெஞ்சின் வளர்ச்சியாகிய பண்பாட்டுக்குக் கலையியல் கல்வியும், அறிவு வளர்ச்சிக்கு விஞ்ஞானக் கல்வியும் தேவை. இவையிரண்டும் ஒருசேர வளர்ந்தாலொழிய மனிதன் முழுத்தன்மை பெற்றவனாக வளர முடியாது. மாணவர் உலகம் இதை நன்கு மனத்தில் பதித்து, வாய்ப்புள்ளபொழுதே மேலும் மேலும் கற்கின்ற, ஓயாது கற்கின்ற பழக்கத்தை மேற்கொள்ள வேண்டும். கற்பதுகூட ஒருவகைப் பழக்கம்தான். ஓயாது படித்துப் பழக்கப்பட்டவர்கள் காலத்தை வீணடிக்க மாட்டார்கள்.

'கல்வி கரையில, கற்பவர் நாள்சில' ஆகலின், காலத்தை வீணடிக்காமல் கற்போமாக; மேலும் மேலும் கற்போமாக.

# 10

# இயற்றமிழ்

---

பொதிய மலையில் பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்து இருப்பிலே வளர்ந்த தமிழ் எனும் கன்னி உலகிடைத் தோன்றிய உயர்தனிச் செம் மொழிகளாம் அணங்குகளுள் ஒருத்தியாவாள். 'தொன்று நிகழ்ந்தது அனைத்தும் உணர்ந்திடு சூழ்கலை வாணர்களும் இவள் என்று பிறந்தவள் என்று உணர முடியாத இயல்பினையுடையவள்' இக் கன்னி. இத்துணை ஆயிரம் ஆண்டுகளாக இவள் வாழ்பவ ளாயினும், முதுமைக் குறி ஏதுமின்றிச் சீரிளமை உடையவளாய் வாழ்ந்துவருகிறாள்.

இந்தப் பெருமாட்டியின் வளர்ச்சியைக் கருதி அப் பழைய நாளில் இவளை முத்தமிழ் என வழங்கினர். இயல், இசை, நாடகம் என்ற மூன்று பகுதிகளையே 'அவ்வாறு குறித்தனர். இவற்றுள் முதல் வகை வளர்ச்சியைக் காண்பதே இன்று நம் கருத்தாகும். நல்ல பருவ காலத்தில் தினம் தினம் புதிய அழகுடன் விளங்கும் ஒரு பெண்ணின் அத்துணை அழகையும் காணவேண்டுமாயின், அதனை ஓயாது உடன் இருந்து காண்பதே சிறந்த வழி. இதிலும் ஓர் இடையூறு உண்டு. அழகிலும் இருவகை உண்டு. சிலவகை அழகுகள் நிலை பெற்றிருப்பன. சிலவகை

சில நேரம் நின்று மறைந்துவிடுவன. நிலைபெற்ற அழகுடையவர்களும், அழகிய புன்முறுவல் கொள்கையில் அதிக அழகுடன் விளங்கக் காண்கிறோம். ஆனால், புன்முறுவலால் பிறந்த அழகு உடனே மாறிவிடும் இயல்புடையதென்பது கூறல் வேண்டா.

தமிழ்க் கன்னியின் நிலைபெற்ற அழகுப் பகுதியை நமக்கு எடுத்துக்காட்ட இன்று நூற்றுக் கணக்கான நூல்கள் உண்டு. தோன்றி மறையும் அவள் அழகை வெளியிட்ட பல நூல்கள் இன்று இல்லாமல் ஒழிந்தன. இடைக்காலத்தில் இருந்து இன்று பெய்ரளவில் மட்டும் கிடைக்கும் அத்தனை நூல்களும் இருந்திருப்பின், இக் கன்னியின் பேரழகைப் பல கோணங்களிலிருந்து காணும் வாய்ப்புக் கிடைத் திருக்கும்.

அது ஒருபுறம் இருக்க, இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் இத் தமிழ்க் கன்னி நாடாளும் உரிமை பெற்று, வடவேங்கடம் தென் குமரியிடைப்பட்ட நாட்டில் அரசு செலுத்தி வந்தாள். அந்நாளில் இவளுக்குப் பல அணிகளையும் செய்து சார்த்தி மகிழ்ந்த பெருமக்கள் பலருண்டு. கழுத்தில் அணிகின்ற பெரிய வைரமாலை செய்து சார்த்தினவர்களும் உண்டு. விரலுக்குரிய கணையாழி செய்தவர்களும், மூக்கில் இடும் சிறிய பொட்டு ஒன்றை மட்டுமே செய்தவர்களும் உண்டு. அவர்கள் பல அணிகளைச் செய்து தம் அரசிக்குச் சார்த்தி மகிழ்ந்தனர்.

அணியைச் செய்துவிடலாம் எளிதாக. ஆனால், அவ்வணி அரசியின் சிறப்புக்கு ஏற்றதா? அவள் அதை

அணியலாமா? என்பதை யார் அறிந்து கூறுவது? தனி ஒருவருக்கு ஓர் அணி அழகென்று தோன்றலாம். பிறர் அதை வெறுக்கவும் செய்யலாம். இதற்கு வழி யாது? ஒரு கூட்டமே இருந்து ஒவ்வோர் அணியும் செய்து தரப்பட்டவுடன் அதனை ஆய்ந்து கண்டு தன் அரசிக்கு அவ்வணி ஏற்றதுதானா என்பதில் முடிவு கூறிற்று.

இக் கூட்டத்தையே 'தமிழ்ச் சங்கம்' என அந்நாளைய தமிழர் கூறினர். மதுரை மாநகரில் நிலை பெற்ற இச் சங்கம், 'சங்கம்' என்ற பெயருடன் இருக்க வில்லை. சங்கம் என்பது பிற்காலத்தார் இட்ட பெயராகும். **தமிழ் நிலை** என்ற பெயருடன் பழைய சங்கம் இருந்திருக்கும்போலும். 'தமிழ் நிலைபெற்ற தாங்கருஞ்சிறப்பின் மதுரை' (சிறுபாணாற்றுப்படை) என்பது போன்ற அடிகள் இவ்வுண்மையை அறிவிக் கின்றன.

இயற்றமிழ் என்ற தலைப்புப் பரந்துபட்டது. கிறித்துநாதருக்கு நான்கு நூற்றாண்டுகட்கு முற்பட்டவ ராகலாம் என்று கருதப்பெறும் தொல்காப்பியர் இயற்றிய 'தொல்காப்பியமே' இன்று நமக்குக் கிடைக்கும் இயற்றமிழ் நூல்களுள் மிகப்பழமையானது. ஏனைய மொழிகளிலும் பழைய இலக்கணங்கள் உண்டு. எனினும், அவை எழுத்து, சொல் என்ற இரண்டிற்குமட்டுமே இலக்கணம் கூறும். 'எழுத்தும் சொல்லும் கற்பது பொருளதிகாரத்தின் பொருட் டன்றே? பொருள் இல்லையேல் இவை இரண்டும் பயனற்றனவே' என்று கூறும் இறையனார் களவியல் கதை, ஆழ்ந்த ஓர் உண்மையை உட்கொண்டது. இத் தமிழர் பொருளதிகாரத்துக்கு எத்துணை மதிப்பு வைத்திருந்தனர் என்பதையே இது புலப்படுத்துகிறது.

பொருளதிகாரம் என்பது மக்கள் வாழ்க்கை பற்றிக் கூறும் பகுதி. மொழிக்கு இலக்கணம் வகுக்கப் புகுந்த தொல்காப்பியனார், அம் மொழி பேசும் மக்கள் வாழ்வுக்கும் இலக்கணம் வகுத்தார். உலக மொழிகளில் வேறு எந்த மொழிக்கும் இல்லாத தனிச் சிறப்பாகும் இது.

தொல்காப்பியத்தை அடுத்துக் கிறித்துநாதர் தோன்றிய ஒரு நூற்றாண்டுக்குள் பலதிறப் பாடல்கள் தோன்றின. புறத்திணை பற்றித் தொகுக்கப் பெற்றுப் 'புறநானூறு' என்ற பெயருடன் இன்று வழங்கும் தொகுப்பு நூலில் பெரும்பான்மையான பாடல்கள் இக்கால எல்லையில் தோன்றினவேயாம். இப் பாடல்கள் அந்நாளில் வாழ்ந்த நம் மூதாதையர் என்ன உண்டனர், எவற்றை உடுத்தனர், என்ன நினைத்தனர், எவற்றைக் குறிக்கோளாகக் கொண்டனர் என்பன போன்ற அரிய கருத்துகளை அறிய உதவுகின்றன. சுருங்கக்கூறின் 'புறநானூறு' ஒன்றுமட்டும் கொண்டு தமிழருடைய நாகரிகப் பண்பாட்டு வரலாற்றைத் தொகுத்துவிடலாம் என்பர். இத்தகைய ஒரு தொகுப்பு நூலை உலக மொழிகளில் வேறு யாண்டும் காண்டல் அரிது. புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை முதலிய எட்டுத்தொகை (தொகுப்பு நூல்கள் — Anthologies) நூல்கள் ஏறத்தாழ இந்தக் கால அளவில் தோன்றின என்று கூறுதல் மிகையாகாது. இவற்றுட் சில பாடல்கள் கி.பி. முதலாம் நூற்றாண்டை அடுத்தும் தோன்றியிருக்கலாம்.

இப் பகுதியிலேதான் 'பத்துப்பாட்டு' என்று இன்று வழங்கப்படும் தொகையில் பல பாடல்கள் தோன்றியிருத்தல் வேண்டும். பத்துப்பாட்டும் எட்டுத்

தொகையும் தொகை நூல்கள் எனினும், தமிழர் வாழ்வின் ஆணிவேரான அகம், புறம் என்ற இரண்டையும் எடுத்து விளக்குவனவாதலின், இயற்றமிழ் வளர்ச்சியில் இவை பெருமதிப்புக் கொண்டவை.

கி.பி. முதலாம் நூற்றாண்டினதாக இருத்தல் கூடும் என்றும், தொகை நூல்கட்கு முற்பட்டதாக இருத்தல்கூடும் என்றும் கருத்து வேறுபாடுகட்கு இடந்தந்து நிற்கும் திருக்குறளும் இக் காலத்தைச் சேர்ந்ததேயாகும். 'உலகப் பொதுமறை' என்று கூறுவதற்குரிய அனைத்து மதிப்பையும் பெற்று, அணுவைத் துளைத்து ஏழ் கடலைப் புகட்டும் சிறப்புடையதாய் விளங்கும் குறளின் பெருமையை விரிக்க இஃது இடமன்று. தமிழ்க் கன்னியின் மார்பை அணி செய்யும் மதாணியாய் விளங்குவது இது.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய பெருநூல் நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரமாகும். 'முத்தமிழ்க் காப்பியம்' என்று பிற்காலத்தில் கொண்டாடப்படும் பெருமை பெற்ற இஃது, இயற்றமிழ் வளர்ச்சியில் புதுமுறை வகுத்தது. சாதாரணமான ஒரு வணிகனைப் பற்றியும் 'மேலோ ராயினும் நூலோராயினும் பிணி எனக்கொண்டு பிறக்கிட்டொழியும் கணிகையர்' வாழ்க்கையுடைய ஒருத்தியைப்பற்றியும் பெருங்காப்பியம் ஒன்றை எழுதி, அதனைப் பிறர் மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளுமாறு செய்யலாம் என்ற பேருண்மையை உலகுக்குக் காட்டிய பெருமை இளங்கோ அடிகட்கு உரியதாகும். தமிழில் முதலில் தோன்றிய கலைக் காப்பியமாகும் இது. பெருங்காப்பிய இலக்கணம் அனைத்தும் பெற்று

விளங்கும் இது, தமிழ்க் கன்னியின் நடை அழகை அறிவிக்கும் சிலம்பாய் அமைந்தது சாலப் பொருத்த முடையதே.

சிலம்பை அடுத்து மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் 'மணிமேகலை' என்னும் காப்பியம் எழுந்தது. மணிமேகலை காலத்தில் இயற்றமிழ் மற்றொரு பெரு மாறுதலை அடைந்தது. சமயக் கொள்கை முதலியவற்றை வலியுறுத்த ஒரு வரலாற்றைக் கையாளலாம் என்ற புதுமுறையைக் கையாண்டார் கூலவாணிகன் சாத்தனார். சாத்தனார் புகுத்திய இப் புதுமுறை இயற்றமிழில் நிலைத்து விட்டது. பின்னர்த் தோன்றிய சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி, பெரிய புராணம், கம்ப ராமாயணம் முதலியன அனைத்தும் இம்முறையில் எழுந்தனவே. வேறு பயன் கருதாமல் காப்பியம் இயற்றும் மரபு இளங்கோவுடன் மறைந்து விட்டது போலும்.

கி.பி. நான்காம் நூற்றாண்டு தொடங்கிக் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கம் வரையில் தமிழ் நாட்டுக்கும் இயற்றமிழுக்கும் இருண்ட காலம் என்று கூற வேண்டும். தமிழரல்லாத களப்பிரர் என்ற இனத்தார் தமிழ்நாட்டைப் பிடித்து ஆட்சி செய்தமையின், தமிழ்மொழி போற்றுவாரற்றுக் கிடந்தது. எனவே, இக்கால எல்லையில் ஒரு பெருநூல் தவிர வேறு ஒன்றுந் தோன்றவில்லை. அவ்வொரு நூலும் சைன சமய நூலாய், மொழி பெயர்ப்பு நூலாய் அமைந்தது புதுமையே. 'பெருங்கதை' என வழங்கும் 'உதயணன் கதை' இயற்றமிழ் வளர்ச்சியில் ஒரு புதிய திருப்பத்தைப் போன்றது. வடமொழியிலிருந்து

காப்பியங்களை மொழி பெயர்க்கும் மரபை முதலில் தோற்றுவித்தது பெருங் கதையேயாகும்.

தமிழ் நாகரிகத்தையும் இலக்கியத்தையும் அடக்கி ஆண்ட களப்பிரருடைய கொடுமையை வென்று தமிழ் நாகரிகத்தை நிலைநிறுத்த ஒரு புரட்சி தேவைப்பட்டது. அரசியல் முறையில் ஏற்படும் புரட்சியைக் காட்டிலும் வலுவுடையதாய், மக்கள் மனத்தில் தமிழ்ப் பண்பாட்டை மீண்டும் நினைவூட்டும் பணியை மேற்கொள்வதாய் உள்ள ஒருவகைப் புரட்சி தேவைப் பட்டது. இதனைச் செய்தவர் திருஞானசம்பந்தர் என்று போற்றப்படும் சமயகுரவராவர். 'தமிழ் ஞான சம்பந்தன்' என்றும் 'முத்தமிழ் விரகன்' என்றும் தம்மைக் கூறிக் கொள்ளும் இவர்தாம், களப்பிரர் சமுதாய வாழ்வில் செய்திருந்த கொடுமைகளை மாற்றியமைத்தவர். அன்றியும், அதுவரையில் வழக்கில் அதிகம் பயின்று வாராத 'விருத்தப்பாவில்' தம் பாடல்களை இயற்றிய பெருமை இவரையே சாரும். இதன் பிறகு பழம் பாடல் முறையைப் பின்பற்றி அகவல், கலி முதலிய பாமுறைகள் தலை எடுக்கவே இல்லை. சமயப் புரட்சியால் மக்கள் வாழ்வுமுறை மாறினதுபோல, இயற்றமிழ் பெற்ற மாறுதலாகும் இது.

இம் மாறுதலால் தமிழ்க் கன்னி புதிய பொலிவு பெற்றாள். ஆசிரியம் வஞ்சி முதலிய பா வகைகள் கவிஞனுடைய கற்பனைக்கு ஏற்ப விரிந்து கொடுப்பவையல்ல. எனவே, சொல்லாட்சி முறையிலும் ஓசையிலும் கவிஞன் ஏற்றும் பொருளை முற்றிலும் ஏற்க முடியாமல் அப் பா முறைகள் தவித்தன. புதிய விருத்தப் பாடலால் இக் குறை நீங்கிற்று. திருஞானசம்பந்தர் முதலிய நாயன்மார்

பாடலிலும் ஆழ்வாராதியர் பிரபந்தங்களிலும் அதற்கு முன்னர்த் தமிழ்க் கவிதைகளிற் காணாத ஓசை அழகைக் காண்டல் கூடும். இப் பெருமாற்றத்தால் இயற்றமிழ் பெற்ற சிறப்பை அளவிட முடியாது.

ஏழாம் நூற்றாண்டு தொடங்கிப் பன்னிரண்டாம் நூற்றாண்டு முடியத் தமிழ் மொழியின் பொற்காலம் என்று கூறலாம். முதலாழ்வார்களும் நாயன்மாருள் இருவரும் இக்காலத்து வாழ்ந்தவரே. எட்டாம் நூற்றாண்டில் நம்மாழ்வார், பெரியாழ்வார், சூடிக் கொடுத்த நாச்சியார், திருமங்கை மன்னர், சுந்தர மூர்த்தி நாயனார் முதலிய பெரியவர் பலர் விளங்கினர். இப் பெரியார்களால் இயற்றமிழ் பெற்ற வளர்ச்சிக்கு ஓர் அளவேயில்லை.

ஒன்பதாம் நூற்றாண்டில் ஈடு எடுப்பற்றதாய் உலக மொழிகளில் உள்ள பக்திப் பாடல்கள் அனைத்தினும் தலைமை இடம் பெற்ற 'திருவாசகம்' தோன்றிற்று. கற்றோர்க்கு இதயம் களிக்கச் செய்யும் கம்பநாடரின் ஒப்புயர்வற்ற பெருங் காப்பியம் தோன்றிற்று. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வளையாபதி, குண்டலகேசி, நீலகேசி முதலிய நூல்களும் தோன்றின. பத்தாம் நூற்றாண்டில் விருத்தப் பாவில் முதற்காப்பியமாகிய சீவகசிந்தாமணி பிறந்தது. இந் நூற்றாண்டில் சமணப் பெருமக்கள் தமிழுக்குச் செய்த தொண்டு மிகப் பெரியது. இப் பகுதியில் ஒரு நூற்றாண்டு முன்னும் பின்னும் யாப்பருங்கலம், காரிகை முதலிய பாவியல் இலக்கணங்களும், நிகண்டு களும் தோன்றின.

பதினோராம் நூற்றாண்டிலேதான் ஒட்டக் கூத்தருடைய தக்கயாகப்பரணி போன்ற நூல்களும்,

செயங்கொண்டாரின் கலிங்கத்துப் பரணியும் பிறந்தன. இந் நூற்றாண்டில் தொல்காப்பியத்திற்கு உரையிட்ட 'இளம்பூரண அடிகள்' விளங்கியிருத்தல் கூடும். விரிந்த முறையில் நூலுக்கு உரையிடும் மரபு இக்காலத்தே தோன்றியிருத்தல் வேண்டும்.

பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் பத்திச்சுவை நனி சொட்டச்சொட்டப் பாடும் சேக்கிழாரின் பெரிய புராணம் தோன்றிற்று.

பதின்மூன்றாம் நூற்றாண்டு, பதினான்காம் நூற்றாண்டுகளைச் சமய சாத்திரக் காலம் என்று கூறலாம். குறளைப்போலக் கடுகைத் துளைத்துக் கடலைப் புகட்டும் சிவஞானபோதம் முதலிய சைவ சமய சாத்திரங்கள் பன்னிரண்டும் தோன்றியது இக்கால எல்லையிலேயே. வைணவப் பெரியார் பலரும் இக்காலத்திலே வாழ்ந்தவர். நச்சினார்க் கினியர், பேராசிரியர், அடியார்க்கு நல்லார் முதலிய பேருரையாசிரியர்களும் இக்காலத்தவரேயாவர். கவிதைப் பெருக்கம் குறைந்து உரைநடை வளர்ச்சி பெற்ற கால எல்லையாகும் இது.

இறையனார் களவியல் உரைதான் முதன் முதலில் நாம் காணும் உரைநடைப் பகுதியாகும். ஆசிரியர் தொல்காப்பியனார் 'உரைநடை வகையே நான்கென மொழிப' என்று கூறியிருந்தும், பழைய உரைநடை நூல் ஒன்றும் கிடைத்திலது. கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய இவ்வுரை நடையை அடுத்து மீட்டும் உரைநடை பல்கிய காலம் 13, 14–ஆம் நூற்றாண்டுகளாம்.

கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டு முதல் பதினெட்டாம் நூற்றாண்டுவரை இயற்றமிழ் இருந்து

வந்தது என்று கூறலாமே தவிர, வளர்ந்து வந்தது என்று கூறல் இயலாது. இப் பகுதியில் சிறந்த பெரியார் மூவர் தோன்றினர். குமரகுருபரர், சிவப்பிரகாசர், சிவஞான முனிவர் என்ற மூவரும் தமிழ்க் கல்வியைப் பழைய நிலைக்குக் கொணரப் பெருமுயற்சி செய்தனர். **கம்பநாடர் காலத்திற்குப் பின் தமிழ் பழைய நிலையை அடைய முடியவே இல்லை.** சிறந்த கவிஞராய் இருந்தும் குமரகுருபரர், பிள்ளைத் தமிழ், கலம்பகம், குறம் முதலிய சிற்றிலக்கியங்கள் ஆக்கினாரே தவிரப் பெரிய அளவில் ஒன்றும் செய்ய வில்லை.

குமரகுருபரரை ஒத்த பெரும்புலவர் முயன் றிருப்பின், காப்பியம் பாடியிருக்கலாம். பிற்காலக் கவிஞர்களுள் அவரை ஒத்த கவிஞரைக் காண்டல் அரிது. எனினும், காப்பியம்பாடும் மரபு அருகி விட்டமையின், அவர் அதில் நுழையவில்லை போலும். காப்பியம் பெற்றிருந்த இடத்தில் ஸ்தல புராணங்கள் புகுந்தன. இவ்வகை இலக்கியங்களில் பரஞ் சோதியார் திருவிளையாடற்புராணம், கந்தபுராணம், காஞ்சிப் புராணம். தணிகைப்புராணம் என்பவை தவிர, ஏனைய பெயரளவில் கவிதைகளேயாம்.

இந் நூற்றாண்டுப பகுதியில் இயற்றமிழில் ஒரு புதுமுறை வளர்ச்சி தோன்றலாயிற்று. அதுவே மணிப் பிரவாள நடை எனப்படும். வடமொழியும் தமிழ் மொழியும் கலந்து எழுதுவதே அம்முறை. அம் முறையில் பல நன்மைகளும் தீமைகளும் உண்டு. திவ்விய பிரபந்தங்கட்கு உரையிட்ட பெரியவாச்சான் பிள்ளை போன்றவர்களும் அம் முறையைக் கையாண்டு சிறப்படையச் செய்தார்கள். இலக்கண விளக்க ஆசிரியர் போன்ற சில அறிஞர்கள் அம்

முறையின் சிறப்பை அறியாமல் வடமொழியிலிருந்து தமிழ்மொழி பிறந்தது என்று அறியாமையின் எல்லையில் நின்று கூறவும். அஃது இடந்தந்தது.

பழைய முறையில் காப்பியம் பாட முயன்ற பெருமை சிவப்பிரகாசர்க்கே உரியது. 'பிரபுலிங்க லீலை' நல்ல காப்பியமேயாயினும், மிகச் சிறந்த கவிதைகள் பல அதனுள் இருப்பினும், கால மாறு பாட்டால் அது தலையாய காப்பியங்களுள் வைத்து எண்ணப்படக் கூடாததாய்விட்டது.

சிவஞான முனிவர் முற்கூறியவர்களைப் போல்பவர் அல்லர். அவர்கள் கவிஞர்கள், கலைஞர்கள்; ஆனால், திறனாய்வாளர்கள் அல்லர். ஆனால், சிவஞான முனிவர், கவிஞர், திறனாய்வாளர், பேருரையாசிரியர், இலக்கண ஆசிரியர் ஆவார்.

தமிழ் நாட்டில் மடங்கள் செய்த இரண்டொரு நன்மைகளுள் குமரகுருபரர், சிவஞான முனிவர் போன்ற ஒரு சிலரைப் படைத்தமையும் ஒன்று.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இயற்றமிழ் புதிய முறைகளில் முன்னேறலாயிற்று. மேனாடுகளிலிருந்து சமயம் பரப்பத் தமிழ்நாடு போந்த தொண்டர்களுள் சிலர் புது முறையில் தமிழ் வளர்த்தனர். வீரமா முனிவர், ஜி.யூ. போப்பு, கால்டுவெல் என்பவர்கள் அவர்களுள் முக்கியமானவர்கள். இவர்களால் உரைநடைப் பகுதி வளம் பெறலாயிற்று. இந் நிலையில் இராமலிங்க வள்ளலார், ஆறுமுக நாவலர் போன்ற தமிழ்ப் பெரியார்களும் இயற்றமிழுக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்தனர். முன்னையோர் கவிதைகளாலும்

பின்னையோர் உரைநடையாலும் மொழியை வளர்த்தனர்; பண்பாட்டையும் உடன் வளர்த்தனர்.

18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் தாயுமான அடிகள் சமரச வழியைப் பெரிதும் போற்றி நூல் செய்தார். 19-ஆம் நூற்றாண்டில் வள்ளலார் அவ்வழியைப் பெரிதும் போற்றிக் கவிதை புனைந்தார். துறவியரான இவர்கள் இருவர் தவிர, இந் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் வேதநாயகம் பிள்ளையும் இத்துறையில் பெருந்தொண்டு புரிந்தார். திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களும் அவருடைய சீடர் டாக்டர் உ.வே. சாமிநாதையரும் செய்த தொண்டுகள் எண்ணுந் தரத்தனவல்ல. சோழவந்தான் அரசஞ்சண்முகனார் இந் நூற்றாண்டின் ஒப்புயர்வற்ற செல்வம்.

இருபதாம் நூற்றாண்டில் இயற்றமிழ் மேலும் பல துறைகளில் முன்னேறியது. கவிதைத் துறையில் கவிச் சக்கரவர்த்தி சுப்பிரமணிய பாரதியாரும் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையும் புதுமுறைக் கவிதைகள் புனைந்து தமிழ்க் கன்னிக்குப் படையல் செய்தனர். இன்று எத்தனையோ இளங்கவிஞர் தொண்டு செய்து வருகின்றனர். உரைநடை, ஆராய்ச்சிப் பகுதிகளுள் ந.மு. வேங்கடசாமி நாட்டார், விபுலானந்த அடிகள், திரு.வி. கலியான சுந்தரனார், கந்தசாமியார், மு. கதிரேசஞ் செட்டியார், இரா. இராகவையங்கார், கா. சுப்பிரமணிய பிள்ளை, வெ.ப. சுப்பிரமணிய முதலியார், டி.கே.சி. போன்ற பெரியவர்கள் தத்தம் துறையில் அளப்பருந்தொண்டு செய்தனர். இன்று நம்மிடையே காணப்பெறாத இவர்கள் தவிர, நம்முடன் வாழும் எத்தனையோ பெரியோர்கள்

தமிழ்க் கன்னியின் அழகைப் பெருக்க அருந்தொண்டு செய்துவருகின்றனர்.

இவ்விரண்டாயிரம் ஆண்டுகளாக ஆற்றொழுக்குப் போல விடாது வளர்ந்துவரும் ஒரு துறையாகும் இயற்றமிழ்த்துறை. அது மேலும் வளம் பெறத் தமிழர் உழைப்பாராக.

# 11

# உலகப் பொதுமறை

---

இப் பரந்த உலகில் காலம் இடையிட்டும் தேசம் இடையிட்டும் வாழ்ந்த, வாழ்கின்ற, வாழப்போகும் மக்கள் எண்ணிலடங்கார். எத்துணை வேறுபாடான நாகரிகத்தையும், மொழியையும், பண்பாட்டையும் உடையோர் இம் மக்கள். ஆண்டு முழுவதும் பனிக்கட்டியில் வாழும் எஸ்கிமோ இனத்தார் முதல் ஓர் ஆண்டு முழுவதும் ஒரு துளி நீரையும், காணாத பாலை நில மக்கள் வரை அனைவரும் மக்கள் என்ற பொதுப் பெயருள் அடங்குவரேனும் இவர்களுள் எத்துணை வேறுபாடு? தமிழ்நாடு போன்ற ஒரே பகுதியை எடுத்துக் கொண்டாலும் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த நம் முன்னோருக்கும் நமக்கும் எத்துணை வேறுபாடுகள் உள்ளன? அவ்வாறு இருக்கவும் உலகில் ஒரு மூலையில், தமிழ் நாட்டில், என்றோ ஒரு நாள் (இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்) தோன்றிய ஒரு நூலை உலகப் பொதுமறை என்று கூறல் பொருந்துமா? இவ்வாறு கூறுவது உண்மை வழக்கா, அன்றி, உபசார வழக்கா? காய்தல் உவத்தல் இன்றி ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும்.

திருக்குறள் ஒரு நீதி நூல் என்றே அனைவரும் கூறுகிறார்கள். எத்துணை இலக்கிய நயம் நிறைந்த

தாயினும், எத்துணைக் கவிதைச்சிறப்புடையதாயினும் நீதிநூல் நீதிநூல்தானே! அவ்வாறாயின் உலகில் எப் பகுதியிலாவது ஒரு நீதி இரண்டாயிரம் ஆண்டுகளாக மாறாமல் இருத்தல் கூடுமா? அப்படியே அந்த ஒரு பகுதியில் அந் நீதி மாற்றமடையாமல் இருந்திருக்கிறது எனக் கொள்ளினும், பல்வேறு நாகரிகமுடைய பல இன மக்கட்கும் அது பொது நீதியாமாறு யாங்ஙனம்? இவ் வினாக்கள் நியாயமானவையே.

இவ் வினாக்கட்கு விடை கூறு முன்னர் நீதி என்று குறிப்பது எதனை என்பதை ஒரு சிறிது ஆராய வேண்டும். தமிழ் மரபில் குறிக்கவேண்டுமானால் மக்கட்குரிய ஒழுக்கத்தைப் புகட்டும் நூல் என்று கூறலாம். மக்கள் ஒழுக்கம் கூறும் நூல் உலகில் வேறு இல்லையா? இருப்பின் அவற்றை உலகப் பொது மறை என்று கூறாமல் இதனைமட்டும் அவ்வாறு கூறக் காரணம் யாது?

உலகின் பிற பகுதிகளில் தோன்றிய ஒழுக்க நூல் கட்கும் குறளுக்கும் ஓர் அடிப்படை வேறுபாடு உண்டு. அந் நூல்கள் தம்கால மக்கள் இனத்தை முழுவதுமாகக் கொண்டு அந்தச் சமுதாயம் செம்மையான நெறியில் வாழ வழி கூறின. பிளேட்டோ, அரிஸ்டாட்டில், கௌடில்யர் போன்றோர் இந் நெறி சென்றவர் களேயாவர். சமுதாயம் எவ்வாறு அமையவேண்டும், எவ்வாறு வாழவேண்டும், என்ன குறிக்கோளுடன் இருத்தல்வேண்டும் என்பனபற்றி இந் நூல்கள் கூறின என்பது உண்மைதான். ஆனால், இப் பெருமக்கள், தோப்பில் கவனம் செலுத்தின அளவுக்குத் தனி மரங் களில் கவனம் செலுத்தவில்லை என்பதும் உண்மையே. சமுதாயம், நாடு என்பவை தனிமனிதர்கள் கூடிய

தொகுப்புத்தாமே. தனிமனிதன் திருந்தினால் சமுதாயமும் நாடும் தாமே திருந்திவிடும். இதன் எதிராகச் சமுதாயச் சீர்திருத்தத்தைமட்டும் பெரிதெனப் போற்றினால் அத்துணைப் பயன் கிடைப்பதில்லை.

மேலும் பிளேட்டோ, அரிஸ்டாட்டில் போன்ற வர்கள் "ரிபப்ளிக்" போன்ற நூல்களை எழுதிய பொழுது கிரேக்கநாட்டுப் பொதுமக்கள் எவ்வாறு இருந்தனர்? இப் பெரியார்கள் வகுத்த ஒழுக்க நெறியைக் கடைப்பிடிக்கக் கூடிய சமுதாயம் அன்றிருந்ததா எனில் இல்லை என்றே கூறிவிடலாம். பசித்த சிங்கத்திடம் மானிட அடிமைகளைத் தூக்கி எறிந்து அவர்களை அவ் விலங்குகள் கடித்துக் குதறித் தின்பதைக் கண்டு கிரேக்க சமுதாயம் கைகொட்டி ஆரவாரித்துக்கொண்டிருந்தது. அந்தத் துர்பாக்கிய சாலிகளான அடிமைகளின் மனைவியர்கள் இக் காட்சியைப் பார்க்குமாறு வற்புறுத்தப்பட்டனர். சாதாரண மக்கள் நிறைந்த சமுதாயம் இந்த நிலையில் இருக்கும் பொழுது அந் நாட்டு அறிஞர்கள் எழுதிய நூல்கள் பயனற்றுப் போவதில் வியப்பு ஒன்றும் இல்லை!

இதன் மறுதலையாகக் குறள் கூறும் ஒழுக்க நெறி அக் காலச் சமுதாய மக்களின் ஒழுக்கத்தை, வாழ்வை, குறிக்கோளைத் தன் ஆணிவேராகத் கொண்டிருந்தது. அதனால்தான் இத்துணைக் காலங் கழித்தும், குறள், என்றும் புதியதாய் இலங்கக் காண்கிறோம். தனி மனிதனுடைய அடிப்படையில் குறள் ஒழுக்கநெறி வகுக்கத் தொடங்கியது. தனிமனித வாழ்வு செம்மைப் பட்டால் சமுதாயம் தானே திருந்திவிடும் என்ற

உறுதியுடன் குறள் வழி வகுக்கத் தொடங்கியது. ஒரு காலத்தில் வாழும் ஒருவகைச் சமுதாயம் முழுவதற்கும் சட்டம் வகுத்தால், காலம் மாறும் பொழுதும் அதனால் அச் சமுதாயம் மாறும் பொழுதும் அச் சட்டமும் ஓரளவு பயனற்றுப்போம். ஒருவகைச் சமுதாயத்திற்கு இயற்றப்பெற்ற சட்டம் அல்லது ஒழுக்க நெறி பிறிதொரு சமுதாயத்திற்கு ஏலாமலும் போய்விடுகிறது.

தனிமனிதனுடைய ஒழுக்க நெறியை அடிப்படை யாகக் கொண்டால் ஏறத்தாழ உலக முழுவதற்கும் ஒரு பொதுத் தன்மையை வகுத்துவிடலாம். தனிமனித வாழ்விலும், மாறும் அறம் என்றும் மாறா அடிப்படை அறம் என்றும் இரண்டு உண்டு. மாறும் அறநெறி கால, தேச, வர்த்தமானத்திற்குக் கட்டுப்பட்டதாகும். ஆனால், அடிப்படையானவும் மாறாதனவுமான சில அறவழிகளும் உண்டல்லவா? ஒவ்வொரு நாட்டிலும் வாழும் மக்கள் தம் சூழ்நிலை, தட்ப வெப்ப நிலை, சுற்றுப்புற உயிர்கள் என்பவற்றிற்கு ஏற்பச் சில ஒழுகலாறுகளைக் கடைப்பிடிப்பர். இந்த ஒழுகலாறு கள் ஒரே நாட்டில் கூடக்கால மாறுபாட்டால் மாறும் இயல்புடையன; ஒரே காலத்தில்கூட இடவேறுபாடு களால் மாறும் இயல்பு முடையன; ஒரே காலத்தில் ஒரே நாட்டின் இரு வேறு மூலைகளிலும்கூட மாறுபடும் இயல்புடையன. இத்தகைய ஒழுகலாறுகளே மாறும் அறங்கள் எனப்பெறும். உதாரணமாகத் தண்ணீர்ப் பந்தல் வைப்பது பொதுவாக ஒரு காலத்தில் அறமெனக் கருதப் பெறினும் இன்று அது தேவையற்றதாகும். இந் நாட்டில் அதனை அறமென்று கருதிய பழைய காலத்தில்கூட வட நாட்டில் குளிர் நிறைந்த பிரதேசத்தில் அது

அறமாகக் கருதப்படவில்லை. எனவே, ஒரு காலத்தில் ஓர் இடத்தில் அறமெனக் கருதப் பெற்ற ஒன்று பிறிதொரு காலத்தில் அதே இடத்தில்கூட அறமெனப் படுவதில்லை. இதனையே மாறும் அறமெனக் கூறுகிறோம்.

இதன் எதிராக, மனத்தில் யாதொரு குற்றமும் இல்லாமல் வாழ முற்படுதல், பிறரிடம் அழுக்காறு கொள்ளாதிருத்தல், சினங்கொள்ளாதிருத்தல் என்பவை என்றும் எக்காலத்தும் மாறா அறங்கள். குறளின் தனிச் சிறப்பு யாதெனில் மாறாத இந்த அடிப்படை அறநெறியை வளர்க்க முற்பட்டதே யாகும்.

அறமாவது யாது என்ற வினாவிற்கு முதற்கண் கூறியபடி மாறும் அறத்தின் அடிப்படையிலும் விடை கூறலாம். ஆனால், அவ்வாறு கூறப்பெற்ற விடை எக்காலத்தும் பொருந்தும் என்று கூறல் இயலாது. இதன் எதிராக மாறாத அடிப்படை அறத்தின் அடிப்படையிலும் விடை கூறலாம். அவ்வாறு கூறப் பெற்றால் அந்த விடையே எக்காலத்துக்கும் பொருத்த முடையதாக இருக்கும். அறமாவது யாது என்ற வினாவிற்குக் குறள் கூறும் விடை இரண்டாவது வகையைச் சேர்ந்தது.

'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து அறன்'

(குறள், 34)

'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை'

(குறள், 49)

'அறத்தான் வருவதே இன்பம்'

(குறள், 39)

இத்தகைய தொடர்களால் வள்ளுவர் கண்ட அறம் எத்தகையது என்பது ஒருவாறு விளங்கும், ஒருவன் அறவாழ்க்கையை மேற்கொள்ள வேண்டுமானால் அஃது அவனுடைய மனத்தையே பொறுத்தது. புறவாழ்க்கையில் அறவாழ்வை மேற்கொள்வதும் சமுதாயத்தில் அறவாழ்வை மேற்கொள்வதும் மனத் துக்கண் மாசிருப்பின் பயனற்றுப் போய்விடும். அவை இரண்டும் நன்கு துலங்கவேண்டுமாயின் மனத்துக்கண் மாசின்றாகவேண்டும். மாசு நிறைந்த மனத்துடன் புறத்தேமட்டும் அறவாழ்வு தொடங்கினால் அது வேர் இல்லாத மரம் போல் அழிந்துவிடும். அன்றியும் அதன் வலுவின்மையைப் பிறர் அறிய முடியாமல் போவதோடு, வலுவுடையதென்று தவறாக எண்ணவும் நேரிடும். இன்றைய மக்களிற் பெரும் பாலோர் இத்தகைய வாழ்வை மேற்கொண்டுள்ளனர் என்றால் அது மிகையாகாது.

இறைவனுக்குத் தொண்டு செய்யவேண்டு மென்ற கருத்தில் திருக்கோயிலுக்கு விளக்கிடுபவர்கள், படி செய்து வைப்பவர்கள் ஆகியோர் அவற்றிற்கு ஆகும் செலவில் ஒரு செம்பாதியை அது யாருடைய தருமம் என்று அறிவிப்பதில் செலவிடுகின்றனர். இதனை மனத்துட்கொண்டே ஆசிரியர் இத்தகைய அறங்களை ‘ஆகுல நீர பிற’ (ஆரவாரமான தன்மை யுடையன) என்று கூறுகிறார். தனிப்பட்ட ஒருவரை விளித்து இவ்வாறு இந் நீதி பேசப்படுகிறது. ஒரு சமுதாயத்தில் வாழ்பவர் அனைவருமே மனத்துக்கண் மாசில்லாதவர்களாய் வாழப்புகுந்தால் அச் சமுதாயத்திற்கென்று தனிப்பட்ட அறநெறி வகுக்கத் தேவை இன்றாய் முடியும். இத்தகைய ஓர் ஒழுகலாறு அல்லது நீதிமுறை அனைத்துலகத்திற்கும்

எக்காலத்தும் பொருந்தும் என்பதில் ஐயமில்லை யன்றோ!

அடுத்து 'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை' என்கிறது குறள். இல்வாழ்க்கையை இத்துணைப் பெரிதுபடுத்திக் குறள் பேசக் காரணம் யாது? இறைவனுடைய படைப்பின் அடிப்படையை ஆராய்ந்தால் உலகம் முழுவதிலும் ஓரறிவுயிர் முதல் ஆறறிவு படைத்த மனிதன் ஈறாக அனைத்துயிர்களும் ஆண் பெண் என்ற இரு பிரிவில் வாழ்கின்றன என்பதை அறிதல் கூடும். இம் மண்ணுக்கு 'உலகம்' என்ற பெயர் நிலைக்கவேண்டுமாயின் இவ்வுயிர்கள் பல்கிப் பெருகி வாழவேண்டும். உலகில் வாழ நேர்ந்துள்ள தனிமனிதனின் எதிரே ஒற்றையாக வாழும் வாழ்வும் இரட்டையாக வாழும் வாழ்வும் இருக்கின்றன. மனிதன் எதனை விரும்பி ஏற்றுக் கொள்வது? இல்வாழ்வில் புகுவதானால் தனிமனித உரிமைகள் பலவற்றை விட்டுக் கொடுத்தேயாக வேண்டும். இதற்கு அஞ்சி அவன் தனிவாழ்வை மேற்கொள்ளுதலும் கூடுமன்றோ. அவ்வாறு பலரும் மேற்கொள்ளத் தொடங்கினால் உலகம் எவ்வாறு வாழ முடியும்? உலகம் சிறந்து வாழத்தானே குறள் அறவழி கூற வந்தது. எனவே, அந்த உலகம் நிலைபெற்று மேலும் பல்கி வளர வேண்டியது முதற்படி யன்றோ? அடிப்படை நிலையாமற் போகுமாயின் அறம் எங்ஙனம் நிலைத்து வாழ முடியும்? ஆகவேதான், அறத்தின் வழி ஒழுகவேண்டும் என்று தனிமனிதனுக்குக் கட்டளை இட்ட குறள், அடுத்த படியாக இல்வாழ்க்கைதான் அறம் என்ற கருத்தில் 'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை' என்று பாடுகிறது.

மனத்துக்கண் மாசில்லாத அறவாழ்வை மேற்கொண்டு, அறமேயாகிய இல்வாழ்வில் புகுந்த பொழுதுங்கூட அறனில்லாத பிறவழிகளில் மனிதன் இன்பத்தைத் தேட முற்படுவதும் உண்டு. மனத்துக் கண் மாசற்ற ஒருவன் அறவழியல்லாத பிற வழிகளிலும் இன்பம் காண முடியுமா எனின் முடியும் என்றே கூறலாம். தன் கண் காணாவிடத்துப் பிறர் துன்பப்பட்டு ஈட்டிய பொருளைத் தன் சுகத்துக்குப் பயன்படுத்துபவரும் உண்டு. பொருளைச் சேகரிப் பவர் துயரம் தன் கண்ணில் படவில்லையாகலின், 'அவர் ஈட்டித் தரும் பொருள் அறவழியால் வந்ததா என்பதுபற்றி நான் ஏன் கவலைப்படவேண்டும்' என்று கூறகிறவர்களும் உண்டு. அதனை மறுப்பதற்கே போலும் 'அறந்தான் வருவதே இன்பம்' எனத் தேற்றேகாரம் தந்து பேசுகிறது குறள்.

இனி 'அறத்தான் வருவதே இன்பம்' என்று ஏன் கட்டளை இடுகிறது குறள்? இவ்வாறு கூறவதனால் அறத்தால் அன்றிப் பிறவற்றாலும் இன்பம் வருதல்கூடும் என்ற பொருளும் இத் தொடருள் அமைந்து கிடக்கிறது. என்றாலும் 'வருவதே' என்ற தேற்றேகாரம் அறவழியன்றிப் பிறவழிகளால் வரும் இன்பம் இன்பமேயன்று என்பதும், இன்பம் போல் காட்சி யளிப்பினும் முடிவில் அவை துன்பமாகவே முடியும் என்பதும் கூறினாராயிற்று. 'அறத்தான் வருவதே' என்பதிலுள்ள 'ஏ' — காரத்திற்கு இப்பொருள் உண்டு என்பதை அறிய முடியாதவர்களும் இருப்பரன்றோ? அவர்கட்கு இன்னும் வெளிப்படையாக இதனைக் கூற நினைந்த குறள் 'அழக் கொண்ட எல்லாம் அழப்போம்' என்று பின்னரும் வலியுறுத்துகிறது. தனிமனிதனுடைய வாழ்வில் இன்ப நாட்டம் என்பது

மிகமிக இன்றியமையாத ஒன்று. சாதாரண மக்கள் வாழ்வின் குறிக்கோள் என்று கூறத்தக்கது அஃது ஒன்றுதான். மனித முயற்சிகள் அனைத்திற்கும் ஆணிவேராயும் முடிவிடமாயும் அமைவது இன்ப நாட்டம் ஒன்றேயாம். உலகிடை உழன்று வாழ்பவரும், அனைத்தையும் துறந்து வாழ முற்படுபவரும் ஆகிய இருவரும் விரும்புவதும் வேண்டுவதும் 'இன்பம்' என்ற ஒன்றையேதான். ஆதிமனிதர்களாகிய 'ஆதாம்', 'ஏவாள்' முதலாக ஜெட் விமான கால மனிதர்கள் வரை இன்ப நாட்டங் கொள்ளாதார் யார்? நாக ரிகத்தில் மிதப்பதாகத் தம்மைக் கூறிக்கொள்ளும் அமெரிக்கரிலிருந்து ஆஸ்திரேலியக் காடுகளில் வசிக்கும் ஆதிக்குடிகள் வரை 'இன்ப நாட்டம்' கொள்ளாதார் யார்? கால, தேச, வர்த்தமானம் கடந்து மானிட சமுதாயம் முழுவதற்கும் பொதுவாயுள்ள ஒன்று 'இன்ப நாட்டம்' என்பதாகும். அந்தப் பொதுத் தன்மையை எடுத்துக் குறள் பேசுகிறது. உலகம் முழுவதும் அன்றும், இன்றும், என்றுமே 'இன்ப நாட்டங்' கொண்டு இயங்குகிறது. எனவே, குறளாசிரியர் 'அறத்தான் வருவதே இன்பம்' என்று குறிக்கும்பொழுது உலகம் முழுவதற்கும் எக்காலத் திற்கும் பொதுவான ஒரு நீதியை எடுத்துக் கூறுகிறார் என்றே கொள்ள வேண்டும்.

இன்பம் என்பது மனத்தான் அனுபவிக்கப் படுகின்ற ஒன்றே யன்றிப் புறத்திற் பெறுவது ஒன்றன்று. மூக்கு இனிய மணத்தை முகர்வதும், நா இனிய சுவையை ருசிப்பதும் இன்பம் என்று கூறப்பெறு கின்றன. ஆனால், மனம் இல்வழி இவை இல்லை. மயக்கம் உற்றவர், மனநோய் உற்றவர் ஆகியோர், நா முதலிய பொறிகள் ஒழுங்காய் அமைந்திருந்துங்கூட

அவற்றின் பயனை அனுபவிக்க முடிவதில்லை. காரணம் யாது? மனம் அதன்வழிச் செல்லாமைதான். எனவே, எத்தகைய இன்பமாயினும் நன்கு அனுபவிக்கப்பெற வேண்டுமானால் மனத்தின் துணை இன்றியமையாதது. அந்த மனம் செம்மையுடையதாக இருந்தாலன்றி அஃது இன்பத்தை அடைய முடியாது. மனம் எப்பொழுது செம்மையுடையதாக இருக்கும்? மனத்தில் அறம் நிலைத்திருந்தாலன்றி மனம் செம்மைப்படாது. மனத்தில் அறம் எவ்வாறு நிலைக்கும்? மனத்துக்கண் மாசில்லாது இருத்தலே அறம் என்று குறள் பேசுகிறது. 'மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்து அறன்' என்ற குறளை மறத்தலாகாது.

அவ்வாறானால், மனத்துக்குரிய மாசுகள் யாவை என்று அறிந்தால்தானே அவற்றைப் போக்க முடியும். 'அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம்' என்று குறள் பின்னரும் இதற்கு விளக்க உரை தருகின்றது. இவை நான்கும் மனத்துள் தோன்றும் குற்றங்களே என்று கூறத் தேவை இல்லை. இவை நான்கும் மனத்துட் புகாவழி அம் மனம் அறவழிச் செல்லும்பான்மை பெற்று விளங்கும். அத்தகைய மனத்துள் இன்பம் என்றும் நிலைபெற்று விளங்கும் என்று கூறவும் வேண்டுமோ? மனத்துள் அறம் புக முடியாமல் தடை செய்யும் மேலே கூறிய நான்கு குற்றங்களும் மானிடச் சமுதாயம் முழுவதற்கும் எக்காலத்தும் பொருந்தக் கூடியவை என்பதில் யாரும் ஐயங்கொள்ள முடியாது.

எனவே, மேலே கூறிய நால்வகைக் குற்றங்களிலிருந்தும் நீங்கிய மனமே அறம் தங்கும்

மனம் என்று கூறப்பெறும். இக் குற்றம் நீங்கிய வழியே அம்மனத்தில் அறம் குடிபுகும். அறத்தால் நிறைந்த மனத்தில் தோன்றும் இன்பம் நிலைத்த இன்பமாகும்.

இவ்வாறு அறத்திற்கு விதித்துள்ள அடிப்படை இலக்கணமும் அறவழி ஒழுகினால் ஏற்படும் நிலையான இன்பமும் அனைத்துயிட்கட்கும் எக்காலத்துக்கும் பொதுவானவை என்பதில் ஐயமில்லை. தனிமனிதன் செம்மைப்படுவதற்கு வழி வகுத்த குறள் அதனுடன் நின்றுவிடவில்லை. தனிமனிதர்கள் கூடி வாழும் சமுதாயத்தில், தனிமனிதன் கடமை யாது என்பதையும் வகுத்துக் கூறுகின்றது. விருந்தோம்பல், அன்புடைமை, இன்சொல்லுடைமை, நடுவுநிலைமை ஆகிய பகுதிகள் சமுதாயத்தில் கூடிவாழ முற்பட்ட தனிமனிதன் மேற்கொள்ளவேண்டிய பகுதிகளாகும். விருந்தோம்பலும் இன்சொலும் வீடுபேற்றைத் தரவல்லன என்று கூறப்பெற்றாலும், அவை மிகுதியும் தேவைப்படுவது சமுதாய நல்வாழ்விற்குத்தான். தன்னலத்துடன் பிறந்த தனி மனிதன் மனம் விரிவடைந்து அன்பு நிறைந்ததாக ஆக வேண்டும். மேலும், மனம் விரிவடைய வேண்டுமாயின் 'நன்மக்கட் பேறு' வேண்டும். அதனையடுத்து இன்சொல் உடைமை, விருந்தோம்பல் முதலிய பண்புகளால் சமுதாயத்தில் பிறருடன் கூடிவாழும் தகுதியைப் பெறுகிறான் தனிமனிதன். தனிமனிதன் வாழ்வு செம்மைப்படுவதில் இத்துணைக் கவனம் செலுத்திய குறள் அவனுடைய சமுதாய வாழ்வு செம்மைப்படுவதிலும் பேரளவு கவனம் செலுத்துவதை ஆழ்ந்து நோக்கினால் அறிய முடியும். வேறு வேலை இல்லாதவர்கள் கூட்டமாக அமர்ந்து கொண்டு வெட்டிப் பேச்சுப் பேசிப் பொழுது

போக்குதலைக் காண்கிறோம். இவ்வாறு பேசிப் பொழுது போக்குவதில் பிறருக்குத் துன்பம் நேராத வழி யாதொரு தீமையும் இருப்பதாகக் கூற முடியாது. ஆனால், பயனில்சொல் பேசிப் பொழுது போக்கு கின்றவர்களைக் குறள் மிகவும் கடுமையாகக் கண்டிக் கின்றது. காரணம் என்ன என்று சிந்தித்தும் பார்க்க வேண்டும்.

> 'பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
> மக்கட் பதடி எனல்'

என்ற குறள் (196) இத்துணைக் கடுமையாகக் கண்டிப் பதற்குக் காரணம் என்ன? சமுதாய வாழ்வில் தனிப் பட்ட ஒருவன் தன் காலத்தை வீணடிப்பதே பெருந்தவறாகும். ஆனால், மற்றொருவனுடைய காலத்தை வீணடிக்க எவ்வித உரிமையும் ஒருவனுக்கு இல்லை. ஆனால், பயனில்சொல் பாராட்டவேண்டு மானால் தனியாக ஒருவன் செய்யமுடியாதன்றோ? மற்றொருவனை இழுத்துவைத்துத்தானே வெட்டிப் பேச்சுப் பேசமுடியும். அப்படியானால் நாம் யாரை இழுத்துவைத்துப் பேசுகிறோமோ அவனுடைய காலம் பொன்னாவதாக இருக்கலாமன்றோ? நம்முடைய தயவுக்கு அஞ்சி அவன் எழுந்துபோக முடியாமல் இருந்து நம்முடைய வெட்டிப் பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்க நேரிடலாம். தன் காலம் வீணாவதை எடுத்துக் கூறமுடியாத சூழ்நிலையில் அவன் இருக்க லாம். எனவேதான் உட்கார்ந்து கேட்கும் அவனைக் குறை கூறகின்றது. எனவே, வெட்டிப் பேச்சுப் பேசுவதால் ஒருவன் தான் கெடுவதுமன்றி, சமுதாயத்தில் முக்கியமான ஒருவனுடைய காலத்தை யும் வீணடிக்க நேரிடுகின்றது. இதனை ஒரு சமுதாயத் தீமை (Social evil) என்று குறள் குறிப்பிடுகின்றது. ஒரு

வினாடியையும் வீணாக்காமல் உழைக்கும் மேனாடுகள் போன்ற சமுதாயத்திற்கு இக் குறள் எவ்வளவு பொருத்தமுடையது. ஆனால், நம் நாட்டவர்கட்கு இன்று தேவைப்படும் மிகச் சிறந்த நீதியாகும் இது. இக் குறளும் கால, தேச, வர்த்தமானம் கடந்து அனைத்துலகுக்கும் அனைத்துக் காலத்திற்கும் பொதுவான நீதியைப் புகட்டுவதாகவே அமைந்துள்ளமை வெளிப்படை.

எவ்வளவு சிறந்த பண்புடையவர்கள் கூடி வாழும் சமுதாயமாயினும் ஒன்றுக்கு மேற்பட்டவர் கூடிவாழத் தொடங்கினால் தனிமனிதன் உரிமைகள் சிலவற்றை விட்டுத் தரத்தான் நேரிடும். அன்றியும் கூடிவாழும் பொழுது ஏற்படும் மன உறழ்ச்சிகளால் (Frictions) சினம் ஏற்படுதலும் உண்டு. அறிந்தோ அறியாமலோ பிறருக்குத் தீமை செய்தலும் உண்டு. உலகப் பொது அறம் பேசவந்த குறள், இந்த நெருக்கடிகளையும் மனத்துட்கொண்டு நீதி வகுத்துச் செல்கிறது. எக் காரணத்தைக் கொண்டும், எந் நிலையிலும் சினம் கொள்ளாதே என்று கூறிய குறள், அடுத்து அவ்வாறு கொள்வாயேயானால் அந்தச் சினம் பிறருக்குத் தீமை விளைவிப்பதைவிட உனக்கே கேடு பயக்கும் என்றும் கூறுகிறது. 'சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி' என்ற அடி எல்லா மக்கட்கும் எக் காலத்துக்கும் பொருந்தும் ஒன்றாகும். வில், வாள் கொண்டு போர் செய்த காலத்தும் இக்குறள் பொருந்தும். அணுகுண்டுக் காலத்தில் மிகமிகப் பொருந்தும்.

சமுதாயத்தில் ஓர் உறுப்பினர் பிறர்மேல் சினங் கொண்டு ஒருவேளை தீமை விளைவித்தால் பிறர்

எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதையும் குறள் குறிப்பிடுகிறது. இன்று சினங்கொண்டு தீமை புரியும் அவர் என்றாவது ஒரு நன்மை செய்யாமலா இருந்திருப்பார். எனவே, கொலைக்கு ஈடான தீமைகளை அவர் சினங் காரணமாகச் செய்யும் பொழுதும் என்றோ ஒரு முறை அவர் செய்த ஒரு நன்மையை நினைந்து பார்க்கவும் என்று கட்டளை இடுகிறது குறள்.

'கொன்றுஅன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும்'

என்ற குறள் (109) தனிமனிதன் தனிமனிதனிடமும், தனிமனிதனிடம் சமுதாயமும், சமுதாயத்திடம் தனிமனிதனும் நடந்துகொள்ளவேண்டிய முறையை வகுத்துக் கூறுகிறது.

இதுவரை கூறிய சில நீதிகளை, மனத்துட் கொண்டு பார்த்தால், திருக்குறள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்த் தமிழ் நாட்டில் ஒரு மூலையில் தோன்றியதாயினும் தமிழ்ச் சமுதாயம் ஒன்றை மட்டும் மனத்துட்கொண்டு பேசாமல் உலக முழுவதற்கும் எக் காலத்துக்கும் பொருந்தும் அறவழிகளையே கூறிச் செல்கிறது என்பதும், உலகப் பொதுமறை என்ற பெயர் உபசார வழக்கன்றி உண்மை வழக்கே என்பதும் நன்கு புலனாகும்.

12

# திரு. வையாபுரிப் பிள்ளை

தமிழ்ப் பேரறிஞர் வையாபுரிப் பிள்ளையவர்கள் இற்றைக்குச் சரியாக 75 ஆண்டுகளின் முன்னர் தண் பொருநை எனப் புகழப்பெறும் தாமிரவருணிக் கரையில் உள்ள சிக்கல் நரசையன் கிராமம் என்ற சிற்றூரில் தோன்றினார்கள். 1957ஆம் ஆண்டு பிப்ரவரி 17ஆம் நாள் தமிழன்னைக்குப் பெருந் தொண்டாற்றிய இவ் ஆராய்ச்சி மன்னன் இவ்வுலக வாழ்வை நீத்துவிட்டார். இறப்பதற்கு ஆறு நாள் முன்னர்க்கூட, உடல் பெரு நலிவுற்ற நிலையிலும், திருவாய்மொழிப் பதிப்புப்பற்றிதான் ஓயாது சிந்தித்துத் தம் நாட்குறிப்பிலும் எழுதியிருந்தார்.

தமிழ், ஆங்கிலம், வடமொழி, மலையாளம் என்பவற்றோடு ஜெர்மன், ஃபிரெஞ்சு ஆகிய மொழி களையும் கற்றுத் தேர்ந்தவர் திரு. பிள்ளையவர்கள். இளமையிலேயே பாம்பன் குமரகுருதாச சுவாமிகள், மறைமலையடிகள், யாழ்ப்பாணம் சுவாமிநாத பண்டிதர் போன்ற அறிஞர்களிடம் தமிழ் கற்கும் வாய்ப்பும் இவருக்குக் கிட்டியது.

திருநெல்வேலியில் திரு. பிள்ளையவர்கள் தங்கி யிருந்த காலத்திலேயே கம்பராமாயண ஆராய்ச்சியில்

ஈடுபட்டார். கம்பராமாயணத்தில் பெரிதும் ஈடுபட்ட வ.வே. சு. ஐயர் அவர்களும் பிள்ளை அவர்களும் மிக நெருங்கிப் பழகியவர்கள். 1923ஆம் ஆண்டிலேயே 'நெல்லைக் கம்பர் கழகம்' என்ற பெயரில் ஒரு நிறுவனத்தைத் தொடங்கி நடத்தியுள்ளார்.

இக் கழக விழாவில் திரு.. பிள்ளை அவர்கள் 'கம்பன் திருநாள்' என்ற ஒரு கற்பனைக் கட்டுரையை வாசித்துள்ளார். அக் கட்டுரையில் கம்பன் கொலு வீற்றிருக்கும் ஓர் இனிய காட்சியைக் கேட்போர் உள்ளம் குளிரச் சித்திரித்து இருக்கின்றார். "உயரிய பீடத்தின் மீது நம் கம்பர் பெருமான் எழுந்தருளி யிருக்கிறார்; அவரது திருமுகத்தே பேரறிவும், ஆழ்ந்த சாந்தியும், பெருங் கவித்வ சக்தியும் நர்த்தனம் புரிகின்றன. அவரது நயனங்கள் ஆழ்ந்து அகன்றுள்ள மனத்தையும் ஒருங்குதோற்றி விளக்குகின்றன; நோக்கு வோரையெல்லாம் வசீகரித்து அமைகின்றன. அன்பு அலை எறிந்து படர்கின்றது. அறிவு கூர்ந்து விளங்கு வதனை ஒப்ப அவரது நாசியும் நீண்டு கூர்ந்து இருக்கின்றது." இச் சொற்றொடர்கள் 1923ஆம் ஆண்டில் பிள்ளை அவர்கள் எழுதிய கட்டுரையி லிருந்து எடுக்கப்பட்டவை. இத் தெளிவான நடை இவ ருடைய புலமையையும் தெளிந்த கருத்தோட்டத் தையும் நமக்குக் காட்டுகின்றது. அதேநேரத்தில் நயனங்கள், கவித்வ சக்தி, நர்த்தனம் ஆகிய சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமை அவருடைய இளமைக் கால எழுத்து முறையாகும். இதே பிள்ளையவர்கள் பிற்காலத்தில் இம் முறையிலல்லாமல் மிக அழகான, இனிய, எளிய தமிழ் நடையில் எழுதியுள்ளமையை அவருடைய கட்டுரை நூல்களிற் காணலாம்.

இவர் சாதித்த மாபெருஞ் சாதனைகளுள் தலையாய இடத்தைப் பெறுவது 'தமிழ் அகராதி'ப் பதிப்பு வேலையேயாகும். 1926ஆம் ஆண்டு இவ் வேலையை ஒப்புக்கொண்டார். இவர் இப் பதிப்பு வேலையை மேற்கொண்ட பிறகு அகராதி புதிய துறையில், புதிய முறையில் உருப்பெறலாயிற்று. இவருடைய ஆங்கில அறிவு, வழக்கறிஞர் திறம், இயல்பாக அமைந்த நுண்மாண் நுழைபுலம் என்பவை இப் பதிப்பு வேலைக்கும் இவருடைய பிற தமிழ்த் தொண்டுகளுக்கும் நிலைக்களனாய் அமைந்தது போற்றற்குரியதாகும்.

இத்துணைப் பேராற்றல் படைத்திருந்தும் புது முறையில் விஞ்ஞான ரீதியாக இவர் தம்முடைய ஆராய்ச்சியைத் தொடங்கியதும், அதுவரையில் உறங்கிக் கிடந்த தமிழகம் விழித்தெழுந்து பெருங் கலவரத்தை உண்டாக்கியது. 'அகராதி' என்பது மேலும்மேலும் வளர்ந்து மாறுதலடையக்கூடிய ஒன்றாகும். ஏனெனில், ஆராய்ச்சி விரியவிரிய, புதிய கண்டுபிடிப்புகள் வெளிவரவெளிவரப் பழைய முடிபுகள் மாறும் இயல்புடையன என்ற அடிப்படை உண்மையைப் பொதுமக்கள் எளிதில் புரிந்து கொள்ள இயலாமையால் குழப்பம் விளைத்தனர். மேலும், அன்றைய அரசியல் சூழ்நிலையும் சமுதாயச் சிக்கல் களும், இலக்கியம், மொழி என்பவற்றிலும் புகுந்து விளையாடத் தொடங்கின.

உலகில் மக்கள், சமுதாயமாக வாழத் தொடங்கிய நாளிலிருந்தே அவர்கள் போராட்டங் களும் புரட்சிகளும் மொழியின் அடிப்படையில் நிகழ்ந்து வந்துள்ளன. எத்துணை தூரம் ஒருவன்

விருப்பு வெறுப்பற்று விஞ்ஞான ரீதியாக ஆராய்ந்தாலுங்கூட, மொழி என்பது மனிதனுடைய உணர்வோடு ஒன்றிவிட்ட காரணத்தால், அம் மொழியைப்பற்றிய எவ்வகைக் கருத்தும் உணர்ச்சிகளைத் தூண்டி விடுவதாக அமைவதில் வியப்பு ஒன்றுமில்லை. ஆங்கில மொழியை இந் நாட்டில் பரப்புவதன்மூலமே அரசியல் வெற்றி பெறலாமென்று ஆங்கிலேயர்கள் கருதினார்கள். அக் கருத்துத் தவறானது அன்று என்பதைப் பிற்கால வரலாறு விளக்கிவிட்டது. எனவே, பிள்ளை அவர்கள் மொழிபற்றிக் கூறிய புதுக் கருத்துகள் தமிழ்நாட்டில் கலவரத்தை உண்டாக்கியதில் வியப்பு ஒன்றுமில்லை. என்றாலும், தமிழ் நாட்டில் பல கட்சிகள் தோன்றி மொழிப் பூசலில் ஈடுபட்ட அதேநேரத்தில், திரு, பிள்ளை அவர்கள் இப்பூசலில் ஒரு சிறிதும் ஈடுபடாமல், தம் கருமமே கண்ணாக, ஆராய்ச்சி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு தொண்டாற்றினார்கள் என்பதை நினைக்கும்போது யாரும் வியவாமல் இருக்க முடியாது.

அன்றைய நிலையில் 'தனித் தமிழைப் போற்றுவோர்' ஒருபுறமும் 'வடமொழியை வரம்பின்றிப் புகுத்துவோர்' ஒருபுறமும் தத்தம் கொள்கையே சரி என வாதித்தனர். இவ்விரண்டு கட்சிகளிலும் வீண் பிடிவாதமும் உண்மை காண மறுக்கும்* முரட்டுத் தனமும் அமைந்திருந்ததை பிள்ளை அவர்கள் நன்கு கண்டார்கள். தாம் கண்ட இக் கருத்தை யாருக்கும் அஞ்சாமல் 'விடுதலை வேண்டும்' என்ற கட்டுரையில் கீழ்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

"ஓர் இயக்கத்தால் வடமொழி வெறுப்பு நமது நாட்டில் களைபோல வளரத் தொடங்கியிருக்கிறது. வடமொழி, அந்தணருக்குமட்டும் உரியதன்று. அந்தணரல்லாதாரும், பௌத்த ஜைன சமயத்தவர் களும் அதனைப் போஷித்து வளர்த்து வந்திருக் கின்றனர். அது பாரத தேசத்திற் பிறந்த ஒவ்வொரு வனுக்கும் பொதுவுடைமை. இவ்வுண்மையை மறந்து விட்டு அந்தணர்களுக்குமட்டும் இம் மொழி உரியதாகச் சொல்லுகிறோம். இதனோடு நிற்கவில்லை. மற்றவர்களுக்குப் போலவே அந்தணர்களுக்கும் தமிழ் தாய்மொழியாக இருந்தபோதிலும், அவர்களுக்கும் தமிழுக்கும் யாதொரு தொடர்பும் இல்லையென்று வாதாடுகிறோம். இவ்வாறு சொல்லுதற்கு அவர்களுள் ஒரு சிலர் இடங்கொடுக்கவும் செய்கிறார்கள்; தமிழ் தங்கள் தாய்மொழி அல்லாதது போல் ஒதுக்குகிறார் கள். தங்களை ஆரியரென்றும் மற்றையோர்கள் திராவிடரென்றும் பகுத்துக் கூறுகிறார்கள். ஆரிய-திராவிட வாதம் அர்த்த மற்றது. தனிப்பட்ட தூய ஆரியரும் திராவிடரும் இல்லையென்பது சரித்திரம் ஒப்பிய உண்மை. இந்திய தேசத்தவர்க ளெல்லோரும் ஒரே ஜாதி என்ற இலட்சியத்தைக் கைக்கொள்ளவேண்டிய இந்த நாளில், இந்த வகுப்பு-வாதமும் மொழி-வாதமும் ஏற்பட்டிருப்பது மிகவும் வருந்தத்தக்கது" என்பவை அவருடைய உரைகள்.

'இந்திய ஒருமைப்பாடு' என்று இக் காலத்தில் வலியுறுத்தப்படும் இதே கருத்தைப் பிள்ளையவர்கள் அரை நூற்றாண்டின் முன்னரே கூறியது, அவரது எதிரது நோக்கும் ஆற்றலுக்கு ஓர் எடுத்துக் காட்டாகும்.

இந்த இரு சாராருக்கும் நடுநிலைமையை எடுத்துக் கூறத் தொடங்கிய பிள்ளை அவர்கள், கீழ்வரும் கருத்தைத் 'தமிழும் சுதந்திரமும்' என்ற கட்டுரையில் எழுதியுள்ளார்:

"வடமொழி சாஸ்திரம், கலை முதலிய வற்றை அந்தண குலத்தவர் மாத்திரம் இயற்றின ரென்று கருதுவதும் பிழை. பிற சமயத்தினரும், அந்தணரல்லாதாரும், இந்திய தேசத்தில் தமிழ் நாட்டினர் உள்படப் பல நாட்டினரும் வட மொழி சாஸ்திரங்களையும் கலைகளையும் இயற்றியுள்ளார்கள். இம் மொழி இந்தியப் பொது மொழியாகும். இதனைத் தமிழ் மக்கள் இழப்பது தங்கள் பூர்வார்ஜிதத்தை இழப்பது போலாம். வடமொழியை நன்றாகப் பயன்படுத்துவதற்குத் தமிழுக்குப் பூரண சுதந்திரம் உண்டு."

வடமொழியை வெறுப்போருக்கு இவ்வாறு அறிவுரை வழங்கியவர், அதே நேரத்தில் அதே கட்டுரையில் தமிழை இழிவுபடுத்துவோருக்கும் தக்க முறையில் அறிவுறுத்தியுள்ளார்:

"உயிர்த் தத்துவத்தோடு வழங்கிவரும் நமது தமிழ்தான் நமது தென்னாட்டில் தலைமை வகிக்கவேண்டும். வடமொழி தலைமை பூணுதல் தகாது. ஏனெனின், முதலாவது, அது இயற்கைக்கு முற்றும் விரோதம். வடமொழி வழக்கொழிந்த மொழி. அதன் வாழ்வு முடிந்து பல நூற்றாண்டுகள் ஆகிவிட்டன. இவ் வழக் கொழிந்த மொழியை, வழக்கத்தில் நின்று உயிர்த் தத்துவத்தோடு இருக்கும் தமிழ் மொழியைக்

காட்டிலும் முதன்மையுடையதாகக் கொள்வது இயற்கையோடு சிறிதும் பொருந்தாதல்லவா?

(வடமொழியை மாத்திரம் கற்றவர்கள் அதன் பேரழகில் மயங்கி அதற்கு அடிமையாகி, அம் மொழியிலுள்ள அபத்தக் கொள்கை களையும் கருத்துகளையும் உண்மை என்று நம்பியவர்களாய், அறிவின் எல்லைப் பரப்பு முழுவதும் அம் மொழியிலுள்ள சாஸ்திரங் களாலும் பிற நூல்களாலும் அறிந்து அளவிடப் பட்டுப் போயின என்னும் கருத்துடையவர் களாய், அறிவு வளர்ச்சியே இனி இல்லை என்னும் கொள்கையினராய் இருப்பதைக் காண் கிறோம். அவர்கள் தமிழ் மக்களாயிருந்தும் இவ்வாறு கருதுவது பெரிதும் இரங்கத்தக்கது. கேடு விளைக்கும் இப் பொய்யுணர்ச்சியை மக்கள் மனத்தில் விதைக்கும் மொழி தலைமை யிடம் வகித்தல் கூடாது.)

தற்கால அறிவை உதவுதற்குரிய மொழி உயிருடன் இருக்கும் தமிழ் மொழியேயாகும். அதுவே முதன்மை பெறத்தக்கது'' என்ற முறையில் எழுதுகிறார்.

ஒரு பெரிய போராட்டம் நடைபெறுகையில் அதில் சிறிதும் கலந்துகொள்ளாமல் புறத்தே நின்று, மருத்துவன் நோயாளியைப் பார்க்கின்ற நிலையில், இரு சாராரின் இடையேயுள்ள குறைவு நிறைவு களையும் ஆராய்ந்து இவ்வாறு எழுதும் துணிவே பிள்ளை அவர்களின் மனவுறுதியை எடுத்துக் காட்டுவ தாகும். இவ்வாறு எழுதியதால் இரண்டு சாராருக்கும் ஓரளவு வேண்டாதவராகவும் ஏச்சுக்கு உரியவராகவும்

ஆயினார் பிள்ளை அவர்கள். இவ்வளவு நடுநிலைமை வகித்த பிள்ளையவர்கள், தம் ஆராய்ச்சியில் இன்று நாம் ஏற்றுக்கொள்ள முடியாத முடிபுகளைத் தந்தார். அவ்வாறு இவர் 40 ஆண்டுகளுக்கு முன்னர் செய்தாரென்றால், அதனுடைய காரணத்தை, விருப்பு வெறுப்பு நிறைந்த நிலையிலிருந்து அன்றைய நாளில் முடிவு செய்ய முடியாமல் இருந்திருக்கலாம். ஆனால், இன்றைய நிலையில் நின்று, ஒட்டுமொத்தமாக அதனைப் பார்க்கும்போது ஒருசில காரணங்கள் தோன்றத்தான் செய்கின்றன.

பிள்ளை அவர்கள் இப் புது முறையில் சொல் ஆராய்ச்சியை, மொழி ஆராய்சியைத் தொடங்கிய காலத்தில் மொழி நூல்கள் (Philology), ஒலி நூல்கள் (Phonology), மொழி இயல் (Linguistics) ஆகியவை நன்கு வளர்ச்சி அடையவில்லை. கால்டுவெல் ஐயரின் 'ஒப்பிலக்கணம்' என்ற ஒரே நூல் தவிர அத் துறையில் வேறு நூல்கள் இல்லாத அத்தகைய ஒரு சூழ்நிலையில் ஆராய்ச்சி என்பது பரந்து விரிந்து நடுநிலையுடன் செல்வதற்கு இயலாத இடமேற்பட்டது. வேண்டிய அளவு கருவிகரணங்களை வைத்துக்கொண்டு ஒன்றைச் செய்தல் என்பது வேறு; தேவையான கருவி கரணங்கள் இல்லாமல் ஒரு காரியத்தைச் செய்து முடிக்க நினைப்பது வேறு. என்றாலும், கால்டுவெல் ஐயரின் "ஒப்பிலக்கணம்" ஒன்றையே அடியொற்றிச் சொல் ஆராய்ச்சியில் புகுந்த பிள்ளை அவர்களின் துணிவு போற்றற்குரியதாகும்.

தமிழிலக்கியங்கட்குக் கோவையான சொல்லக ராதி ஒன்றும் இல்லை. நினைவாற்றலைக் கொண்டே பிள்ளையவர்கள் தம் ஆராய்ச்சியை நடத்தினார். இந்த

அடிப்படையில் அவர் எழுத்துகளைப் பார்க்கும் பொழுது இம் முறையில்தான் அவர் சென்றிருக்க முடியும் என்பதும் இவரையன்றி யாரும் இத்தகைய பணியை ஆற்றி யிருக்க முடியாது என்பதும் விளங்கும்.

தம் காலத்தில் கிடைத்த கருவிகரணங்களை வைத்துக்கொண்டு, விஞ்ஞான ரீதியில் மொழி ஆராய்ச்சியில் புகுந்த பிள்ளை அவர்கள், அவ் வாராய்ச்சியின் பயனாகப் பல்வேறு மெய்ம்மைகளை வெளியிட்டார். கருவிகரணங்கள் மாறுவதாலும், சுற்றுச் சூழ்நிலை மாறுவதாலும், புத்தம் புதிய மெய்ம்மைகள் கண்டுபிடிக்கப்படுவதாலும் ஒரு காலத்தில் நிறுவப்பெற்ற மெய்ம்மைகள் மாறக் கூடும் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அம் மெய்ம்மை கள் மாறிவிட்ட காரணத்தால் அதனை முதன் முதலாகக் கண்டுபிடித்த அறிஞர்களைத் தவறாக நினைப்பதும் கூடாது. இவர் காலத்திலும் இவருக்கு முன்னரும் ஆராய்ச்சியாளர் என்ற பெயரில் பலர் தமிழ் இலக்கிய காலத்தைப்பற்றிக் கூறிய தவறான கொள்கைகள் ஒருவாறு பிள்ளையவர்கட்கு எதிர்வாதம் செய்யும் மனநிலையை உண்டாக்கி யிருக்கலாம். மேலும், மொஹஞ்சதாரோ, ஹாரப்பா நாகரிகங்கள்பற்றிய கருத்துகளும் ஒருவாறு குழப்பத்தில் இருந்த காலம் அது. உதாரணமாக, திரு. பிள்ளை தமிழ்நாட்டின் பல்வேறு இடங்களிலும் காணப்படுகின்ற பிராமிக் கல்வெட்டுகள் ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்று கருதினார். அவருடைய 'தமிழன் மொழி, இலக்கிய வரலாறு' என்ற ஆங்கில நூலில் பின்வருமாறு பேசுகிறார்:

"The earliest inscription in Tamil belongs to about 5th century A.D. So we have to conclude

that there was no Tamil literature in the accepted sense of the term in the 3rd century B.C. if we accept the dates assigned to the Brahmi Inscription. Considering all these the earliest date to which Tolkapier may be assigned is 5th century A.D"

பிள்ளை அவர்கள் அன்று எழுதிய நிலையில் இது உண்மையாகக் கருதப்பட்டது. ஆனால், பல்வேறு புதிய மெய்ம்மைகள் கண்டுபிடிக்கப்பெற்ற இன்றைய நிலையில் இக் கூற்றுப் பொருத்தம் இல்லாததாகும். இது கருதியேபோலும் பிள்ளையவர்கள் இதில், "if we accept the dates assigned to Brahmi Inscriptions" என்று கூறியுள்ளார். எனவே, அந்த அடிப்படையின்மேல் பிள்ளை அவர்கள் செய்த ஆராய்ச்சியும் அதன் முடிவுகளும் தவறாகிவிடலாம் அல்லவா? இன்று மாங்குளம், திருவாதவூர், புகளூர், ஆறுநாட்டார்மலை ஆகிய இடங்களில் உள்ள பிராமிக் கல்வெட்டுகள் கி.மு. 2ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 2ஆம் நூற்றாண்டு வரை உள்ளவை என்று 1924ஆம் ஆண்டிலேயே திரு. கே. வி. சுப்பிரமணிய ஐயர் அவர்களும் இக் காலத்தில் ஐ. மகாதேவன் போன்ற அறிஞர்களும் நிறுவியுள்ளனர். 'நெடுஞ்செழியன் பணவன் கடலன் வழுதி கொடுப்பித்த பள்ளி' என்று மாங்குளம் பிராமிக் கல்வெட்டுப் பேசுகிறது. இக் கல்வெட்டு கி.மு. இரண்டாம் நூற்றாண்டினது என்றால், இதில் வரும் 'கொடுப்பித்த' என்ற சொல் அன்றைய இலக்கியத்தில் பெருவழக்கினதாயிருந்தமையால் தொல்காப்பியரும் இதற்கு இலக்கணம் வகுத்துள்ளார் என்றால், அந்த நூற்றாண்டில் இலக்கியமே இருந்திருக்க முடியாது என்று பிள்ளையவர்கள் கட்டிய முடிபு வீழ்ந்து விடுமன்றோ?

முதலாவதாக இதே ஆங்கிலக் கட்டுரையில் திரு. பிள்ளையவர்கள்,

"Before the second century A.D. there must have been crude attempts at literary expressions and these attempts must have been going on for a pretty long time. Moreover, the style, the diction and metrical perfection of the Sangam poets require for their development a considerably long period. At a rough computation, we may put this period of development as three centuries." (Page:22)

அதாவது, கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் பின்னர் தான் சிறந்த வளமுடைய சங்கப் பாடல்கள் தோன்றி யிருக்கவேண்டும் என்று கூறுகிறார் ஆசிரியர். இரண்டாவதாக இதே ஆங்கில நூலின் மற்றொரு பகுதியில் திரு. பிள்ளையவர்கள்,

"Trust we are lead to conclude that the poets of the early Sangam literature, flourished from the 2nd Century A.D. to 3rd Century A.D. and that was the genuine Sangam period." (Page:38)

என்று கூறுகிறார். மூன்றாவதாகத் திரு. பிள்ளை யவர்கள் எழுதியுள்ள 'இலக்கிய தீபம்' என்ற நூலில் திருமுருகாற்றுப்படை பற்றிய கட்டுரையில்,

"சுமார் கி.பி. 250–ல் நக்கீரரால் நெடுநல் வாடை இயற்றப்பெற்றிருக்கலாம். கபிலர், பாரி, கரிகாலன் முதலியோர்களெல்லாம் இந் நக்கீரருக்கு ஒரு நூற்றாண்டிற்கு முற்பட்டவ ராகலாம்."

என்றும் எழுதியுள்ளார். இம் மூன்று எடுத்துக் காட்டுகளும் திரு. பிள்ளையவர்களின் கருத்துகள் ஓரளவு மாறிக்கொண்டிருந்தன என்பதையே அறிவிக்கின்றன. ஏதாவதொன்றைப் பிடித்துக் கொண்டு விட மறுக்கும் ஒருசிலரைப் போலல்லாமல், அவ்வப்பொழுது தாம் காணும் மெய்ம்மைகளை ஒட்டித் தம் முடிபுகளை மாற்றிக்கொள்ளும் உரம் படைத்தவர் திரு. பிள்ளையவர்கள் என்பது நன்கு விளங்கும்.

1922-ல் மனோன்மணீயத்தின் இரண்டாம் பதிப்பை வெளியிட்ட பிள்ளையவர்கள் 1955-ல் திவ்வியப் பிரபந்தம் முதலாயிரம் பதிப்பித்தவரை* மொத்தம் 39 நூல்களைப் பதிப்பித்தார். இவற்றுள் புறத்திரட்டுப்போன்ற தமிழ்க் கருவூலங்களும் அடங்கும். கயாதரம் முதலிய நான்கு நிகண்டுகளைப் பதிப்பித்ததும், தமிழ் அகராதி பதிப்பித்ததும் திரு. பிள்ளையவர்களைச் சொல்லாராய்ச்சியில் 'பெரிய அளவுக்குச் செலுத்தியது. ஆனால், அதேநேரத்தில் மொழி நூல் நன்கு வளர்ச்சியடையாத காரணத்தால், சில மாறுபாடான முடிபுகளை அவர் எடுக்கவும் காரணமாய் அமைந்துவிட்டது. இதே காரணத்தால் தான் இரு மொழிகளினிடையே கருத்தொற்றுமை காணப்பட்டால் எந்த ஒன்றிலிருந்தும் மற்றொரு மொழிக்கு அக் கருத்துப் பரவலாம் என்ற வாதத்தைப் பிள்ளையவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. தமிழிலும் வடமொழியிலும் ஒரேகருத்து இருப்பின் அல்லது ஒரு சொல் காணப்படின், அது வடமொழியிலிருந்துதான் தமிழுக்கு வந்திருக்கவேண்டுமெனத் திரு. பிள்ளை

* மர்ரே – ராஜம் வெளியீடு

யவர்கள் கருதினார்கள். மொழி நூல் நன்கு வளர்ந்துள்ள இக் கால அறிஞர்கள் வேதத்தினுள்ளும் கூடச் சில திராவிடச் சொற்கள் புகுந்துள்ளன என்றும், கிரேக்க மொழியிலும் சில தமிழ்ச் சொற்கள் புகுந்துள்ளன என்றும் கூறுகின்றனர்.

பதிப்பு வேலை போக ஆராய்ச்சி நூல்களாக 23 நூல்கள் யாத்துள்ளார். இவற்றுள் இரண்டு ஆங்கிலத்திலுள்ளன. இன்னும் இவர் எழுதி வெளிவராத கட்டுரைகளும் பல உள. இவர் சேர்த்து வைத்திருந்த பன்னூறு ஏட்டுச் சுவடிகளும் நூல்களும் இன்று தமிழ்நாட்டிற்குக் கிடைக்கும் பேறு நமக்கு இல்லை. கல்கத்தாவிலுள்ள தேசீய நூல் நிலையத்தில் அவை இருக்கின்றன. அந்த ஏடுகள் நூல்கள் ஆகிய வற்றிற்கு அவர்கள் ஒரு நூற்பட்டியல் வெளியிடுவார் களாயின் பெரிதும் பயனுடையதாயிருக்கும்.

இறுதியாக ஒரு வார்த்தை. திரு. பிள்ளையவர்கள் இன்று நம்மிடையே இல்லை. ஆனால், அவர் வகுத்த வழிகளும் அவர் இயற்றிய நூல்களும் உள்ளன. அவர் முடிபுகளை உடன்படாதவர்களும் அவர் வகுத்த புது வழியைக் கண்டு வியவாமல் இருக்க முடியாது. தமிழாராய்ச்சியில் விஞ்ஞான முறையைப் புகுத்திய பெருமை திரு. பிள்ளையவர்களையே சாரும். அந்த ஒரு வழியில் சென்றால்தான் உண்மை காண முடியும். காய்தல் உவத்தல் அகற்றி அவர்வழிச் சென்று உண்மை காண முயல்வதுதான், தமிழர்களாகிய நாம் நம் முன்னோடியான அந்த விஞ்ஞான முறைச் செல்வருக்குச் செலுத்தும் நன்றிக் கடனாம்.

# 13

## வாழும் கவிமணி

மனிதனிடம் அமைந்து கிடக்கும் அறிவு, உணர்வு என்ற இரண்டனுள் அறிவுக்கு விருந்தளிப்பவன் விஞ்ஞானி; உணர்வுக்கு விருந்தளிப்பவன் கலைஞன். எல்லாக் கலைகளும் உணர்வை இருப்பிடமாகக் கொண்டு தோன்றி அனுபவிப்பவர்கட்கும் உணர்ச்சியை நல்குகின்றன. உணர்ச்சியைத் தூண்டாத கலை அப் பெயருக்கே தகுதியுடையதன்று. நுண் கலைகள் அனைத்துமே அனுபவிப்பவருடைய உணர்ச் சியைத் தூண்டுவனவாயினும், அவற்றுள் தலைசிறந்த தாகக் கருதப்படுவது கவிதைக் கலையாகும்.

வடவேங்கடமுதல் தென்குமரிவரை பரவி உள்ள இத் தமிழகத்தில் பல்லாயிரம் ஆண்டுகளாகவே கவிதைக் கலை சிறந்து விளங்குகிறது. கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூறு ஆண்டுகளின் முன் தொட்டுத் தோன்றிய கவிதைகளும் இன்று கிடைக்கின்றன. உலகில் உள்ள மிகச் சிலவான மொழிகளே இத்தகைய பெருமையை அடையக்கூடியன. என்றாலும், அவற்றுட் சில என்றுமே பேச்சு வழக்கற்றிருந்தன; இன்னுஞ் சில தம் உருவம் மாறிப் பழைய மொழி வடிவுடன் முற்றிலும் மாறுபட்டுள்ளன. தமிழ் மொழியை ஒத்த மிகமிகச் சில மொழிகளே அன்று

தொட்டு இன்று காறும் வடிவு மாறாமலும் ஓரளவு பழைய மரபை மேற்கொண்டும் வாழ்கின்றன.

மிகப் பழையதாய புறநானூற்றில் காணப் பெறும் பல மரபுகள் மிகப் புதியனவாய்க் கவிமணியவர்களின் பாடல்களிலும் காணப்பெறுகின்றன. இவ்வாறு மரபை விடாமல் காக்கும் சிறப்பு தமிழ்க் கவிதைக்கு உண்டு. இந்த இரண்டாயிரம் ஆண்டுகளில் தமிழருடைய வாழ்வு முறை, எண்ணம், நாகரிகம் என்பவை பெரிதும் மாறுபட்டுவிட்டன. என்றாலும் என்ன? இவை அனைத்திலும் உள்ளீடாக நிற்கும் அவர்களுடைய பண்பாடு ஒன்றாகவே இருந்துவருகிறது. இதுவே அன்று தோன்றிய தமிழ்க் கவிதையிலும், இன்று தோன்றும் தமிழ்க் கவிதையிலும் ஒரு பொதுத் தன்மையை உண்டாக்குவது.

உலகில் பிறந்த மனிதன் இறந்தே தீரவேண்டிய வனாகிறான். பிறப்பு என்று தோன்றிற்றோ அன்றே இறப்பும் உடன் தோன்றிவிட்டது. இவ்வளவு ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக இவை நடை பெறினும் இறப்பு மனிதகுலத்திற்கு ஒரு புதிராகவே இருந்து வந்திருக்கிறது. இறப்பு என்பது அனைவருக்கும் பொதுவாயினும் இதனைக் கண்டு பலர் பலவகையில் நினைக்கலாயினர். இறப்பை அஞ்சினவர் பலர்; வெறுத்தவர் பலர்; வியந்தவர் சிலர்; வரவேற்றவர் சிலர்; அதுபற்றிக் கவலைகொள்ளாமல் இருந்தவர் மிகமிகச் சிலர். என்றாலும் இறந்துவிட்ட ஒருவரிடம் இரக்கங் கொள்ளும் இயல்பு அனைவரிடமும் காணப் படுவதொன்று. இறந்தவர் தம்முடன் தொடர்பில்லாத விடத்தும், இறந்தவரிடத்து வருத்தமும் அவர் விட்டுச் சென்றவர்களிடத்து இரக்கமும் காட்டுதல் மனிதப்

பண்பின் பாற்படும். ஆனால், இறந்தவர் தம்முடன் நெருங்கிய தொடர்பு கொண்டவராயின் அதனால் உண்டாகும் பிரிவுத்துயரம் அனைவருக்கும் உரியது.

ஒருவர் இறந்தபொழுது உண்டாகும் பிரிவுத் துயரம் பல காரணங்களால் தோன்றுவதுண்டு. சென்றவர் தமக்குச் செய்த பல நன்மைகளை நினைந்து இனி அத்தகைய உதவி இல்லாமற்போய்விடுமே என்று வருந்தும் வருத்தம் ஒரு வகை. இது மட்டமான தொன்று. இனி அடுத்துள்ளது சென்றவர்களுடைய நற்பண்புகளை நினைந்து பார்த்து அப் பண்புகளும் அவருடன் மறைந்துவிட்டனவே என்று வருந்தும் வருத்தம் ஆகும். ஓரளவு பண்பட்டார்மாட்டுத் தோன்றும் துயரமாகும் இது. இவ்விரண்டு வகையை அல்லாத மூன்றாவது ஒருவகையும் உண்டு. அதுவே பெரும்பான்மையான மக்களிடம் காணப்பெறுகிற தொன்றாகும். இங்குத் தோன்றும் துயரத்தின் காரணத்தை எளிதில் ஆராய முடிவதில்லை. காரணம் கருதித் தோன்றும் அன்பினால் ஏற்படும் துயரமன்று இது. தாய் பிள்ளையினிடத்திலும் மனைவி கணவனிடத்திலும் காட்டும் அன்பு எக்காரணம் கொண்டு தோன்றுவது? காரணமின்றியும் இயற்கையி லேயே தோன்றுகிற இந்த அன்பு தடைப்படும் பொழுது தோன்றும் வருத்தமே மூன்றாவதாகக் குறிக்கபெற்றது.

சாவும் ஒருவகைப் பிரிவுதான். பழங்காலத்தைப் பொறுத்தவரை நீண்டதூரப் பயணம் போவதும் ஒரு பெரிய பிரிவுதான். என்றாலும் அப் பிரிவை மக்கள் பொறுத்துக்கொண்டனர். இத்தகைய பிரிவுக்கும் பெரும் பிரிவுக்கும் உள்ள வேறுபாட்டை எவ்வாறோ

மனம் உணரும் சக்தி பெற்றிருந்தது. தலைவியைப் பிரிந்த தலைவன் பொருள் தேடவோ போர்புரியவோ சென்றான் எனில், அவன் மீண்டு வந்தாலொழிய உறுதி இல்லை. சென்ற இடத்தில் அவன் என்ன ஆயினான் என்பதை அறியவும் வழி இல்லை. அவ்வாறு இருந்தும் அப்பிரிவைக் தவறாக அக்கால மக்கள் கருதவில்லை. அத் தலைவன் பயன்படுத்திய பொருள்களைக் காணுந்தோறும் தலைவனுடைய நினைவை அவை உண்டாக்கத்தாமே செய்யும்? இருந்தும் அப் பொருள்களை அப்புறப்படுத்தல் வேண்டும் என்று அவர்கள் நினைக்கவில்லை.

இதற்கு மறுதலையாக ஒருவன் இறந்துவிட்டால் அவன் பயன்படுத்திய பொருள்களையும் அவனுடம் புடன் அடக்கஞ் செய்யும் பழக்கமும் மிகப் பழங் காலத்திலிருந்தே வந்ததொன்று. இத் தமிழ் நாகரிகம் போலவே மிகப் பழங்காலத்தே நிலைத்துச் சிறந்த எகிப்திய நாகரிகத்திலும் இப் பழக்கம் இருந்துவந்ததை அவர்களுடைய சவக்குழிகள் தெரிவிக்கின்றன. இறந்தவர்கள் பயன்படுத்திய பொருள்களை அவர் களுடன் புதைத்து விடுவதற்குப் புதைபொருள் ஆராய்ச்சியாளர் கூறும் காரணம் வேறு. அந்தப் பழங்காலத்தில் வாழ்ந்தவர்கள், இறந்தவர்கள் இப் பொருள்களை மறு உலகத்தில் பயன்படுத்துவார்கள் என்ற கருத்தால் உடன் புதைத்துவிட்டார்கள் என்ற கருதினர் ஆராய்ச்சியாளர்; எழுதியும் விட்டனர். இஃது எவ்வளவு தூரம் மெய்ம்மையானது என்பதை நாம் அறியோம். ஆனால், மக்கள் உள்ளத்தை விஞ்ஞானியைக் காட்டிலும் கண்டுணர்ந்த கவிஞன் வேறு காரணம் கூறுகிறான்.

மனிதனுடைய உணர்ச்சி ஆற்றொழுக்குப் போன்றது என்று கூறுவர் மனநூலார். ஆற்றில் நீர் இடையறாது ஒழுகுகிறது. இடையே ஏதேனும் தடை ஏற்பட்டால் உடனே அதனைத் தாண்டிச் செல்ல வேண்டி நீர் மட்டம் உயர்கிறது. தடை எவ்வளவு உயரமானாலும் அவ்வளவு உயரமும் உயர்ந்து சென்று பிறகு கீழ் வீழ்கிறது. அதேபோல நாம் ஒருவரிடம் செலுத்தும் அன்புணர்ச்சியும் ஆற்றொழுக்குப் போலச் சென்று கொண்டிருக்கிறது. அதற்குத் தடை ஏற்படும் வரை அவ்வுணர்ச்சி எவ்வளவு ஆழமானது. எத்துணை வேகமானது என்பவற்றை நாமே அறிவதில்லை. ஆனால், அன்பு செய்யப்பட்டவர் நம்மை விட்டுப் பிரிகையில் இவ்வன்பு வெள்ளம் தடைப்படுகிறது. பிரிவு என்னும் தடை எதிர்பட்டவுடன்தான் அன்பின் ஆழத்தை அறிய முடிகிறது. சிறிய கால அளவு உடைய பிரிவும், பிறகு சந்திக்கலாம் என்ற உறுதிப் பாட்டுடன் தோன்றும் பிரிவும் சிறிய தடைகளாம். எனவே, இவற்றால் தோன்றும் வருத்தமும் சிறிய அளவில் உள்ளன. ஆனால், 'இறப்பு' என்னும் பிரிவு முழுவதும் அன்பைத் தடை செய்து விடுகிறது. ஆகலின், அது பெருவருத்தமாகவே வெளிப்பட வேண்டியுள்ளது. இவ்வாறு தோன்றும் வருத்தம் வெள்ளம் போல் தோன்றுவதாகலின் காலாந்தரத்தில் வடிந்து விடுகிறது. தடையை வெல்ல முடியாத வெள்ளம் பிற வழிகளில் ஓட முற்படுவதுபோல் இவ்வன்பும் 'இறப்பு' என்னும் தடையை மீற முடியாமல் பிற வழிகளில் ஓடிவிடுகிறது.

இந் நிலையில் மறக்கப்படவேண்டிய துயரத்தை மீட்டும் நினைவுறுத்தக்கூடிய சக்தி சிலவற்றிற்கு உண்டு. இறந்தவர்களுடன் மிகவும் தொடர்புடைய வர்களோ, தொடர்புடைய பொருள்களோ

எதிர்ப்பட்டால் மீட்டும் அவ் வருத்தம் மிகுதிப் படுகிறது. இஃது உலகியலில் நாம் காணும் அனுபவம். கருத்தொற்றுமை (Association of ideas) காரணமாக இறந்தவர் பயன்படுத்திய பொருளைக் கண்டவுடன் இறந்தவர் நினைவு தோன்றுகிறது. ஓரளவு மறந்துவிட்டு வேறு அலுவல்களில் ஈடுபடும் நிலையில் இப் பொருள் மறுபடியும் வருத்தத்தைத் தோற்றுவித்தலின், இப் பொருள்களை மறைத்து விடுதல் நலம் என்று கருதினர் அக்கால மக்கள். இக் கருத்தாலேயே இறந்தவர்களைப் புதைக்கும் பொழுது அவர்கள் பயன்படுத்திய பொருள்களையும் அவர்களுடன் புதைத்துவிட்டனர் பழைய எகிப்திய மக்கள் என்று நினைப்பதில் தவறு இல்லை.

கவிமணியின் ஒப்புயர்வற்ற படைப்புகளில் ஆசிய ஜோதி'யும் ஒன்றாகும். அதனைப் படிப்பவர் மனத்தில் அஃது ஒரு 'படைப்பு' (creation) என்ற எண்ணம் தோன்றுமே தவிர, 'தழுவல்' அல்லது 'மொழி பெயர்ப்பு' என்ற எண்ணம் தோன்றுவதில்லை. இதுவே சிறந்த கவிதையின் இலக்கணம். தமிழ் நூல்களிற் சிறந்து விளங்கும் சில, தழுவலோ அன்றி மொழிபெயர்ப்போ செய்யப்பட்டவைதாம். 'கம்பராமாயணம்', 'பெருங் கதை', 'சிந்தாமணி' என்பவற்றைப் படிப்பவர் யாருடைய மனத்திலாவது 'தழுவல்' என்ற எண்ணம் தோன்றியதுண்டா? கல் எந்த ஊரைச் சேர்ந்ததாக வேண்டுமாயினும் இருக்க லாம். ஆனால், சிற்பம் சிறந்துவிட்டால் கல்லைப்பற்றி ஆராய்பவர் கசடர் என்றே கருதப்படுவர். 'ஆசிய ஜோதி'யில் ஓர் அழகான இடத்தில் நாம் இது வரை கூறிய கருத்துகளை கவிஞர் பெருமான் கையாள் கிறார். ஒரே மகனை இழந்த தாயொருத்தி

பெருவருத்தத்தில் ஆழ்ந்துவிட்டாள். மகனை இழந்து துடிக்கும் அத்தாயின் உள்ளத்தைக் கவிஞர் தாமும் ஒரு தாயாக இருந்தே வடித்துத் தருகிறார். ஒரே ஒரு வேறுபாடுதான். கவித்திறன் அற்ற ஒரு தாய் படும்பாடு ஊமையன் கண்ட கனவாக இருந்து விடும். கவிஞன் தாயாக மாறும்பொழுது அத்துயரம் கவிதை வடிவு பெற்று நம்முடைய கண்ணீரையும் காணிக்கையாகப் பெற்றுவிடும்.

மகனை இழந்து கதறியழும் தாயினிடத்தில் யாரோ கூறிவிட்டார்கள், 'புத்தபிரான்' ஒருவரே இக் குழந்தைக்கு உயிர்ப்பிச்சை தர இயலும் என்று. எனவே, 'நெஞ்சிற் கிடத்தி வளர்த்த' அப்பிள்ளையை, 'விஞ்சு தவத்தில் பெற்ற' பிள்ளையைத் தோளில் சுமந்து வந்து பெருமான் எதிரே கிடத்திவிட்டாள் ஆம்!

காடும் மலையும் கடந்து வந்தேன் — உன்னைக்
கண்டு துயர்எல்லாம் போக்க வந்தேன்
வாடும் மலர்ச்செண்டு போல் கிடக்கும் — இந்த
மைந்தன் உயிர்எழச் செய்யும் ஐயா!

என்று கதறுகிறாள், 'தனக்கென வாழாப் பிறர்க் குரியாளனாய' அத்தயாபரன் கருணை நிறைந்த கண்களுடன் அத்தாயை நோக்குகிறான். 'நிர்வாண நிலையை' எய்திய அக் குழந்தையைப் பற்றி மகிழ்ச்சி கொள்ளாமல் வருந்தும் அத்தாயின் அறியாமைக்கே இரக்கங் காட்டுகிறான் கருணை வள்ளல். ஆனால், அத் தாய்க்கு அதனை அறிய முடியவில்லை. தாயின் வருத்தத்தை ஆண்மகனாகிய அவன் அறிய முடியாதோ என்று ஐயுற்ற தாய் தன் துயரத்தை எல்லாம் கொட்டுகிறாள்.

"வாய்முத்தம் தாராமல்
 மழலைஉரை யாடாமல்
சேய்கிடத்தல் கண்டு எனக்குச்
 சிந்தைதடு மாறுது ஐயா!
'பின்னி முடிச்சிடு அம்மா
 பிச்சிப்பூச் சூட்டிடு அம்மா'
என்னும் மொழிகள் இனி
 எக்காலம் கேட்பன் ஐயா!"

*என்ற முறையில் அழுகிற தாய் கூறுவதாக ஒரு பாடல் முன்னர்க் கூறிய உண்மையை உணர்த்துவதாக அமைந்துள்ளது. அடுத்தவரும் பாடலில்தான் கவிஞர் இதுவரையும் நாம் கண்டு கூறிய உண்மையை விளக்கு கிறார். பழந்தமிழன் இறந்தவர்களுடன் அவர்கள் பயன்படுத்திய பொருள்களைப் புதைப்பதன் நோக்கம் என்ன என்பதைக் கவிஞர் கூறுகிறார் அடுத்துவரும் பாடல்மூலம். குழந்தை பயன்படுத்திய சித்திரத் தேரும் சிறு பறையும் இன்னும் வீட்டில்தான் இருக்கின்றன. குழந்தையின் பிரிவுத் துயரை மறக்க நினைத்தாலும் இவற்றைக் காணும்பொழுது தாய்மனம் தாளவில்லை. எனவே, அவற்றைக் காணுந்தோறும் அவள் படும் பாட்டைக் கூறுகிறாள்:*

"சித்திரத் தேரும்
 சிறுபறையும் கூடி எனைப்
பித்தியிலும் பித்தி
 பெரும் பித்தி ஆக்குது ஐயா!"

*குழந்தை விளையாடின விளையாட்டுத் தேரும், விளை யாட்டு 'டமாரமும்' அவளைப் பைத்தியமாகவே ஆக்குகின்றனவாம். இவை இரண்டையும் காணுந் தோறும் மைந்தனை மீட்டும் நினைக்கிறது அத் தாய் மனம். முன்னர்க் கூறப்பெற்றபடி பார்த்தால் ஒழிய*

கவிஞருடைய இப் பாடலுக்குப் பொருள் அமைதி யடையாது. இறந்தவர் பயன்படுத்திய பொருள்கள் இவ்வாறு மேலும் துயரத்தை அதிகப்படுத்தும் என்ற மனநூலார் கருத்தைப் பழந்தமிழர் கண்ட உண்மையைக் கவிஞர் இவ்வாறு புனைந்துள்ளார். இத்தகைய கவிஞர்கள் இறப்பதில்லை. அவர்கள் உடல் மறைகிறது; ஆனால், அவர்கள் என்றும் நம் உள்ளங் களில் வாழ்கிறவர்கள்.

# 14

# பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்து

## 1. தோற்றுவாய்

*சங்கமருவிய நூல்களுள் ஒன்று எனப்படும் பதிற்றுப்பத்தினுள் ஐந்தாம் பத்து, 'கடல்பிறக் கோட்டிய குட்டுவனை' ஆசிரியர் பரணர் பாடியதாம். இக் குட்டுவனே இளங்கோவடிகளின் முன்னவன் என்ற கருத்தில் பதிகம் பேசுகின்றது. செங்குட்டு வனுடைய வீரச்செயல்கள் எனப் பலவற்றைச் சிலப்பதிகாரம் பேசுகிறது. அவ்வீரச்செயல்கள் பலவற்றுள்ளும் தலையாயது அவனுடைய வடநாட்டுப் படையெடுப்பு எனக் கூறலாம். 'மாதவி மடந்தை கானல்பாணி கனகவிசயர்தம் முடித்தலை நெரித்தது' (சிலம்பு, 27:50) என்று சிலம்பு புகழும் அதுவே செங்குட்டுவனின் வெற்றிகளுட் சிறந்தது என்பதில் தடையொன்றுமில்லை.*

## 2. பெருவெற்றி

*எனினும், செங்குட்டுவனுடைய இப் பெரு வெற்றி பதிற்றுப்பத்தில் இடம் பெறாமற் போனது வியப்பே! ஒருவேளை பதிற்றுப்பத்துப் பாடப்பெற்ற பின்னர், செங்குட்டுவன் வடநாடு போந்தான் என்று அமைதி கூறலாமா? அவ்வாறு கூறுவதாயினும்*

அதனால் விளையும் இடர்ப்பாடுகள் பல. அவற்றுள் தலையாய ஒன்றைக் காண்போம். ஐந்தாம் பத்தைப் பாடியவர் பரணர் என்று பதிகம் பேசுகிறது. சங்கப் புலவர் வரிசையில் பரணர் சாதாரணமான புலவ ரல்லர். கபிலபரணர் என்று உம்மைத் தொகைக்கு உதாரணம் காட்டக்கூடிய அளவிற்கு இவர்கள் பெயர் கள் நாட்டவர்களால் நன்கு அறியப்பட்டிருந்தன. அத்தகைய பெரும்புலவரால் குட்டுவன் பாடப் பட்டுள்ளான். புலமை நயந்தெரி பரணர், செங்குட்டு வன் உடன்பிறந்த பெரும்புலவராகிய இளங்கோவை ஏனோ மறந்துவிட்டார்! புலமையற்றவராயினும் அரசனின் இளவல் துறவு பூண்டார் என்பது குறிக்கத்தக்க நிகழ்ச்சியாகப்படவில்லையா? சிலப்பதிகாரத்தை ஒத்த பெருங்காவியத்தைப் பின்னர்ப் பாடக்கூடிய பேராற்றல் வாய்ந்த இளங் கோவின் ஆற்றல் இளமையில் வெளிப்படாதிருந்தது என்பதும் பொருத்தமுடையதாகத் தெரியவில்லை. பின்னர் ஏன் பரணர் இளங்கோவைப்பற்றி ஒரு குறிப்பும் தராமல் விட்டுவிட்டார்?

அதுதான் போகட்டும். பதிற்றுப்பத்துப் பாடப் பட்டதன் பின்னர் இளங்கோ சிலப்பதிகாரத்தை இயற்றினார் என்றே வைத்துக் கொள்வோம். அவர் ஏன் பரணரைப்பற்றித் தம் பெருநூலுள் யாண்டுங் குறிப்பிடவில்லை? வித்துவத்காய்ச்சல் என்று பிற்காலத்தார் கூறுவது காரணமாமோ? சிலப்பதிகார ஆசிரியரிடம் இத்தகைய குற்றத்தை ஏற்ற நினைப்பதும் தீதன்றோ? பரணரைப்பற்றிப் பாட விருப்பம் இன்றேனும், தம் தமையனாகிய செங்குட்டுவன் பரணருக்குத் தந்த பரிசிலையேனுங் குறித்திருக்கலாமே அடிகள்! ஐந்தாம் பத்தின் பதிக ஆசிரியர்

கூறுகின்றபடி பார்த்தால் பரணருக்கு உம்பற்காட்டு வாரியையும், தன் மகன் குட்டுவன் சேரலையும் செங்குட்டுவன் கொடுத்தான் என்றல்லவோ ஆகிறது. இத்துணைப் பெரிய பரிசிலைத் தந்த குட்டுவனுடைய வள்ளன்மையைப் பாராட்டவில்லையே இளங்கோ அடிகள்!

## 3. மாடலன் வாய்ப்புகழ்

சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவன் பெருமை பேச வேண்டிய இடத்தில் அடிகளின் இடர்ப் பாட்டை நன்கு அறிகிறோம். தம்முடைய தமையன் புகழைத் தாமே பறைசாற்றுவது இயைபுடைத் தன்று. எனவே, 'மாடலன்' என்ற மறையவனைப் படைக்கின்றார் அடிகள். மாடலன் கூற்றாகவும் ஏனைய பாத்திரங்களின் கூற்றாகவும் குட்டுவன் பெருமை பேசப்படினும், மாடலனே அடிகட்கு மிகவும் உகந்தவனாகக் காணப்படுகிறான். இதோ அவன் பேசுகிறான்:

"........................குறையாக் கேள்வி
மாடலன் எழுந்து மன்னவர் மன்னே!
வாழ்கநின் கொற்றம் வாழ்கஎன் றேத்திக்
கறிவளர் சிலம்பில் துஞ்சும் யானையில்
சிறுகுரல் நெய்தல் வியலூர் எறிந்தபின்
ஆர்புனை தெரியல் ஒன்பது மன்னரை
நேரி வாயில் நிலைச்செரு வென்று
நெடுந்தேர்த் தானையொடு இடும்பில்புறத் திறுத்துக்
கொடும்போர் கடந்து நெடுங்கடல் ஓட்டி
உடன்றுமேல் வந்த ஆரிய மன்னரைக் •
கடும்புனல் கங்கைப் பேர்யாற்று வென்றோய்"

(சிலம்பு : நடுகல் காதை)

*செங்குட்டுவன் வாகைகளை வரிசைப்படுத்த அடிகள் மாடலமறையோனையே பாத்திரமாக் கொள் கிறார். இவ் வெற்றிகளுள் நெடுங்கடல் ஓட்டிய வெற்றியையே பதிற்றுப்பத்துப் பகுதியும் பேசுகிறது. பதிற்றுப்பத்துப் பலபடியாகப் பேசும் வெற்றியை மாடலமறையோன் இரண்டே சொற்களுள் அடக்கி விடுகிறான்.*

## 4. கடல்வென்றி

'படுதிரைப் பனிக்கடல் உழந்த தாளே'

(பதிற்று. 41)

'தேரொடு சுற்றம் உலகுடன் மூய
மாயிருந் தெண்கடல் மலைதிரைப் பௌவத்து
வெண்டலைக் குரூஉப் பிசிர் உடையத்
தண்பல வரூஉம் புணரியிற் பலவே'

(பதிற்று, 42)

இனியா ருளரோநின் முன்னும் இல்லை
மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது
விலங்குவளி கடவும் துளங்கிருங் கமஞ்சூல்
வயங்குமணி இமைப்பின் வேலிடுபு
முழங்குதிரைப் பனிக்கடன் மறுத்திசி னோரே'

(பதிற்று. 45)

'கோடுநரல் பௌவங் கலங்க வேலிட்டு
உடைதிரை பரப்பிற் படுகடல் ஓட்டிய
வெல்புகழ்க் குட்டுவற் கண்டோர்'

(பதிற்று. 46)

'கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்
கடலொடு உழந்த பனித்துறைப் பரதவ'

(பதிற்று. 48)

என, இத்துணை இடங்களில் ஐந்தாம் பத்துப் பாடல் களினாற் பாராட்டப்பெற்ற செங்குட்டுவனுடைய கடற்போர், மாடலனால் இரண்டு சொற்களால் ஓதுக் கப்படுதல் காண்க.

## 5. பதிகமுறை

செங்குட்டுவனுடைய வெற்றிகள் என்று சிலப் பதிகாரம் குறிக்கின்ற பலவற்றைப் பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்துக் குறிக்கவில்லை என்பது உண்மையே! அதனால் பரணர் குறித்த குட்டுவனும் இளங்கோ குறித்த குட்டுவனும் வெவ்வேறானவர் என்று நிலை நாட்ட முற்படுகின்றனர். அவர்கள் காட்டும் முடிவை ஏற்றுக்கொள்வதாயினும், காட்டப்பெறும் காரணங் கள் நேர்மையுடையனவாகத் தெரியவில்லை. ஆனால், இவ்வழி மேற்கொள்பவர் பதிகப்பாட்டில் குறிக்கப் பெற்றுள்ள செய்திகளில் சிலவற்றை மறுத்துவிட்டுச் சிலவற்றை அப்படியே ஏற்றுக்கொள்கின்றனர். ஒவ்வொரு பத்தின் பின்னரும் காணப்படும் பதிகங்களே அப் பத்தைப் பாடினவர் பெயர், அப் புலவர் பெற்ற பரிசில் முதலியவற்றைக் குறிக்கின்றன. ஐந்தாம் பத்தில் காணப்பெறாத குட்டுவன் செயல்கள், பரணராற் பாடப்படாத செயல்கள், ஏன் பதிகத்தில் இடம்பெற்றன? பரணர் கூறாச் செயல்கள் பதிகத்திலிருப்பதால் பதிகம் பொய்யுரைக்கின்றது; சிலப்பதிகாரத்திலிருந்து தன் கருத்துகளைப் பதிகம் கடன் வாங்குகிறது. இன்றேல் சிலப்பதிகார ஆசிரியரே பதிகத்தையும் பாடி இருக்கலாம் என்றெல்லாம் கூறுகின்றார்கள் சில அறிஞர்கள்.

பரணர், குட்டுவன் காலம் முழுவதும் வாழ்ந் திருந்தார்; அவனுக்குப் பின்னரும் வாழ்ந்திருந்தார்.

எனவே, அவர் குட்டுவனுடைய வீரச்செயல்களாகச் சிலவற்றைக் கூறவில்லையாயின், அவை அவர் காலத்து நிகழவில்லை என்பதே முடிபென்று கூறுகிறார்கள். இவ்வாறு கூறுவதால் உண்டாகும் இடர்ப் பாட்டைப் பின்னர்க் காண்போம்.*

இவ்வளவு கருத்துவேற்றுமைக்கும் காரணம் பதிகம்தானே! பதிகம், புனைந்துரை பல கூறுகிற தாகலின் அதனை முழுவதும் ஒதுக்கிவிடுவதே முறை. பதிகத்தை முற்றிலும் ஒதுக்கிட அவர்களும் முனைந்து நிற்பர். ஆனால், ஒரு சிறிய இடையூறு! பதிகத்தை ஒதுக்கிவிட்டால் ஐந்தாம் பத்தை யார் பாடினார் என்பதை அறிய முடியாதே! பரணர் பாடினார் என்று கூறுவதே பதிகத்தின் துணை கொண்டுதானே! பதிகம் கூறும் பல செய்திகளை நாம் மறுத்து இதுவொன் றினை மட்டும் ஏற்றுக் கொள்வது யாங்ஙனம்? ஒரே பாட்டில் தமக்குத் தேவையானதை மட்டும் ஏற்றுக் கொண்டு ஏனையவற்றை ஒதுக்குவது திறனாய்வு முறையன்று.

பதிகம் முழுவதையும் ஒதுக்கும்பொழுது பரணரும் ஒதுங்கிவிடட்டும். பதிகம் கூறும் செய்திகள் நம்பத் தகுந்தனவாக இல்லை என்பதும், நூலுட் கூறப் பெற்றவற்றிற்கும் பதிகம் கூறுவதற்கும் மாறுபாடுகள் உள்ளன என்பதும் உண்மைதாம். பின்னர் வழி யாது? பதிகம் யாரோ ஒருவரால் பிற்காலத்தில் எழுதப் பெற்றது என்பதை அனைவரும் நம்புகின்றனர் இந்தப் பதிகங்களை நம்பிக்கொண்டு தாமே பாடினோர் பற்றிய வரலாறுகளும் தொங்குகின்றன. "கெடலருந் தானையொடு கடல்பிறக்கோட்டிய செங்குட்டு

* 157ஆம் பக்கத்தில் சேரர் மரபு என்னும் தலைப்பைக் காண்க.

வளைக்கரணம் அமைந்த காசறு செய்யுட் பரணர் பாடினார் பத்துப் பாட்டு" என்று பதிகந்தானே கூறுகிறது. இது தவிர உள்ளேயுள்ள பாடல்களில் யாண்டும் யார் பாடினார் என்று கூறத்தக்க சான்றுகள் ஒன்றும் இல்லையே! எனவே, பரணரே இதனைப் பாடினார் என்று கொண்டு ஆய வேண்டிய கடப்பாடு யாது?

இப் பதிகங்கள் அனைத்தும் ஒருவரே பாடியுள்ளார் என்பதும் அனைவரும் ஒப்புகிற ஒன்றுதான். எனவே, ஒரு பதிகம் அடிபட்டால் ஏனையபதிகங்களும் நில்லா. இப் பதிகங்களைக் கொண்டு சேரர் மரபுமுறை கூறுவதும் பொருந்துமாறில்லை. இவற்றை நம்பி மரபுமுறை கூறப்புகுந்து இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் மகன் கடல்பிறக் கோட்டிய குட்டுவன் என்று கொள்கிறார்கள். இம்மரபிற் சேராத அந்துவஞ் சேரலிரும் பொறை மரபில் செல்வக்கடுங்கோவாழி யாதன் என்றொருவன் வருகிறான். இவ் விரு மரபினரும் அடுத்தடுத்து ஆட்சி செய்தனாரா என்று அறியவும் வாய்ப்பில்லை. இவர்களுள் உள்ள உறவு முறை யாது என்றும் பதிகந் தவிர வேறு வழியால் அறிய இயலவில்லை. ஆனால், செங்குட்டுவனைப் பரணரும், செல்வக்கடுங்கோவைக் கபிலரும் பாடியதாகப் பதிகங்கள் கூறுகின்றன.

## 6. கபிலபரணர்

வேறு ஆதாரங்கள் கொண்டு கபிலரும் பரணரும் ஒரு காலத்தவரென முடிவுசெய்ய முடிகிறது. அவ்வாறாயின், இவ்விரு வேறு அரசர்களையும் சமகாலப் புலவர்களாகிய இவ்விருவரும் எவ்வாறு பாடினர்? அன்றியும், இப்பதிகங் கூறும் உறவுமுறை

உண்மையானால், இரண்டாம் பத்தின் சேரலாதனுக்கு மூன்றாம் பத்தின் செல்கெழு குட்டுவன் தம்பி யென்றும், நான்காம் பத்தின் நார்முடிச் சேரல் ஒரு மகன் என்றும், ஐந்தாம் பத்தின் குட்டுவன் இரண்டாம் மகன் என்றும், ஆறாம் பத்தின் ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் மூன்றாம் பத்தின் செல்கெழு குட்டுவன் தம்பியென்றும், நான்காம் பத்தின் நார்முடிச் சேரல் ஒரு மகன் என்றும், ஐந்தாம் பத்தின் குட்டுவன் இரண்டாம் மகன் என்றும், ஆறாம் பத்தின் ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் மூன்றாம் மகன் என்றும் ஆகிறது.

ஐந்தாம் பத்தைப் பாடிய காசறு செய்யுட் பரணர் எனப்படுபவர் அப்பத்தின் தலைவனுக்கு ஒரு அண்ணனும் ஒரு தம்பியும் உண்டென்பதை ஏனோ பாடவில்லை? இளங்கோ என்ற ஒரு தம்பி இருந்தது கற்பனை என்று அறிஞர் முடிவு கட்டினாலும் நார்முடியானையும் ஆ. சேரலாதனையும் ஏன் பாடவில்லை? இவர்களிருவரும் முறையே 4, 6 ஆம் பத்துகட்குரிய பெருமைவாய்ந்தவர்களாயிற்றே! இருவருடைய வெற்றிகளும் 4, 6 ஆம் பத்துகளிற் புகழப்படுகின்றனவே. தந்தை, தம்பி மக்கள் மூவர் என்ற முறைவைப்பு உண்மையா யிருக்குமாயின், ஒரு வரைப் பற்றிய குறிப்பு மற்றவற்றில் ஏன் வரவில்லை? ஐந்தாம் பத்துப் பாடும்பொழுது பரணர் இவர்களை மறந்துவிட்டாலும், தாம் பாடிய பிற பாடல்களி லேனும் குறிப்பிட்டிருக்கலாமே! ஊர் பெயர் தெரியாத சிற்றரசர்களை யெல்லாம் பாடும் பரணர் ஏன் இவர்களைப்பற்றி ஒரு குறிப்பும் தரவில்லை? எனவே, பதிகங்களை நம்பி இவ்வுறவுமுறை கூறுதல் அத்துணைப் பொருத்தமுடையதா என்பதும் ஆய்தற் குரியது.

## 7. திறனாய்வு

இலக்கியத் திறனாய்வு முறை இக்காலத்தில் வளர்ந்துள்ளது; ஒரு கவிஞனுடைய சில பாடல்கள் கிடைக்குமாயின் அவற்றைக் கொண்டு அவன் பெயரில் வழங்கும் பிற பாடல்களை ஓரளவு ஆயலாம். இம்முறையில் காணின் பரணருடைய பாடல்கள் புறநானூறு, அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய தொகுப்புகளிற் காணப் பெறுகின்றன. பதிற்றுப் பத்து நீங்கலாகப் பரணர் பெயரில் காணப்பெறும் பாடல்கள் 75. புறத்தில் 13–ம், அகத்தில் 34–ம், குறுந் தொகையில் 16–ம் நற்றிணையில் 12–ம் அவராற் பாடப் பெற்றவை என வழங்குகின்றன.

இவை அனைத்திலும் காணப்பெறும் நடைக்கும் பதிற்றுப்பத்தில் காணப்பெறும் நடைக்கும் வேறுபாடு உண்டா என்று காண்டல் வேண்டும். மேலும், இப் பாடல்களிற் கூறப்பெறும் பிற செய்திகளையும் ஆய்தல் வேண்டும். பதிற்றுப்பத்தில் அவர் பாடிய மன்னனின் சிறப்பியல்புகளை வேறு இடங்களில் நினைவு கூர்ந்துள்ளாரா என்றுங் காண்டல் வேண்டும்.

## 8. பாட்டொப்பு

சங்க நூல்கள் ஓரளவு பயிற்சி உடையாரும் ஓர் உண்மையை எளிதில் அறியலாம். ஏனைய சங்கப் பாடல்களின் நடைக்கும் பதிற்றுப்பத்தின் நடைக்கும் வேறுபாடு மிக்கிருத்தலைக் காண்டல்கூடும். அகப் பட்ட எட்டுப் பத்துகளையும் பாடியவர்கள் எனப் பதிகம் கூறும் புலவர்களின் பெயரால் பிற பாடல் களும் உளவே. சங்கப்பாடல் தொகுப்பில் மிகுதியான பாடல்களைப் பாடிய கபிலர் பெயரால் ஒரு பத்தும்,

கபிலரின் அடுத்த படியில் நிற்கும் பரணர் பெயரால் ஒரு பத்தும் காணப்பெறுகின்றனவே. பரணருடைய புறம், அகம், குறுந்தொகை, நற்றிணைப் பாடல்களை யும் படித்துவிட்டுப் பதிற்றுப் பத்துப் பாடல்களையும் உடன் படித்தால் என்ன தோன்றுகிறது? பரம்பரை யாகக் கூறிவந்த முடிவுகட்கு எதிராக நினைக்கவும் அச்சம் ஏற்படுகிறது. ஆனால், வேறுபாட்டை வெளிக் கூற எத்துணை அஞ்சுபவர்கட்குங்கூட இப் பாடல்களின் இடையேயுள்ள வேறுபாடு புலனாகாமற் போகாதே! ஏனைய பாடல்களிற் காணப்படும் ஓசை நயமும், சொல்லாட்சிச் சிறப்பும் ஐந்தாம் பத்தில் காணப்படுகின்றனவா? பதிற்றுப்பத்தில் அதிகம் பயிலாமல் பரணருடைய பிற பாடல்களில் மிக்குப் பயின்ற ஒருவரிடம் ஐந்தாம் பத்தின் சில பாடல் களைக் காட்டினால் இவை பரணர் பாட்டு என்று கூறுவாரா?

பதிற்றுப்பத்துப் பாடல்களைப் படிக்கும் பொழுது வேண்டுமென்றே பிடிவாதத்திற்குப் பாடின வைபோல ஓர் உணர்ச்சி தோன்றக் காரணம் யாது? பதிற்றுப்பத்துப் பாடல்கள் புறப்பாடல்கள் தாமே! சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போரிட்டு இருவருமே போர்க்களத்து வீழ்ந்தார்களாம். இருவரும் இறந்தமை குறித்துப் பரணர் பாடிய பாடலைக் காண்க. இங்குப் பரணராற் பாடப் பெற்ற குடக்கோ நெடுஞ்சேரலாதன் யார்? இவனே இரண்டாம் பத்தின் தலைவன் என்று எளிதாகக் கூறிவிடுகிறார்கள். அவ்வாறாயின், அவன் சாவிற்கு இத்துணைக் கவலைப்படும் பரணர் குட்டுவனைப் பாடும் பொழுது ஏன் இதுபற்றிக் கூறவில்லை?

"எனைப்பல் யானையும் அம்பொடு துளங்கி
விளைக்கும் வினையின்றிப் படையொழிந் தனவே;
விறற்புகழ் மாண்ட புரவி யெல்லாம்
மறத்தகை மைந்தரோ டாண்டுப்பட் டனவே;
தேர்தர வந்த சான்றோர் எல்லாம்
தோல்கண் மறைப்ப வொருங்குமாய்ந் தனரே;
விசித்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்
பொறுக்குநர் இன்மையின், இருந்துவிளிந் தனவே;
சாந்தமை மார்பின் நெடுவேல் பாய்ந்தென
வேந்தரும் பொருதுகளத் தொழிந்தனர்; இனியே
என்னா வதுகொல் தானே – கழனி
ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
பாசவல் முக்கித் தண்புனற் பாயும்
யாணர் அறாஅ வைப்பின்
காமர் கிடக்கைஅவ ரகன்றலை நாடே ?"

(புறம். 63)

*இனிப் பரணர் பாடியதாகக் கூறப்பெறும் ஐந்தாம் பத்தின் ஏழாம் பாடலும் கீழே தரப்படுகிறது. இவை இரண்டின் ஓசை, சொல்லாட்சி, இழும் (rythm) என்பவற்றிடைக் காணப்பெறும் வேறு பாட்டையுங் காண்க.*

அட்டானானே குட்டுவன்; அடுதொறும்
பெற்றா னாரே, பரிசிலர் களிறே;
வரைமிசை இழிதரும் அருவியின் மாடத்து
வளிமுனை அவிர்வருங் கொடிநுடங்கு தெருவில்
சொரிசுரை கவரும் நெய்வழிபு உராலின்
பாண்டில் விளக்குப் பரூஉச் சுடரழல
நன்னுதல் விறலிய ராடும்
தொன்னகர் வரைப்பின் அவனுரையா னாவே !"

(பதிற்று. 47)

'Style reveals the man' என்ற பழமொழி ஒன்றுண்டு மேனாட்டில். தனித்து இரண்டு பாடல்களை மட்டும் எடுத்துக் காண்பதால், இவற்றிடை வேறுபாட்டை நன்கு காண முடியாமலும் இருக்கலாம். பல பாடல்களையும் ஒரே நேரத்திற் படித்துப் பார்த்தால் உண்மை விளங்கும்.

## 9. கடற்போர் கூறாமை

இது ஒருபுறம் இருக்கப் புறம் 369ஆம் பாடல் கடல் பிறக்கோட்டிய வேல் கெழுகுட்டுவனைப் பரணர் பாடியதாக அமைந்துள்ளது. அப் பாடல் முழுவதும் அவனுடைய போர்த்திறமையை வியந்து பாராட்டுவதுதான்; எனினும், என்ன வேற்றுமை? குட்டுவனுக்கு அடைமொழியாக அமைந்த கடற் போரைப் பற்றி இப் பாடல் ஒரு வரியாயினும் கூற வில்லை! அவன் செய்த நிலப்போரையே பாராட்டு கிறது இப்பாடல்.

"பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு
கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளம் தழீஇ
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள !"

(புறம். 369)

பதிற்றுப்பத்தில் குட்டுவன் மிகுதியாகப் போற்றப் படுவது அவன் செய்த கடற்போரின் பொருட்டேயாம்.

'படுதிரைப் பனிக்கடல் உழந்த தாளே'

(பதிற்று. 41)

'மாயிருந் தெண்கடன் மலிதிரைப் பௌவத்து
வெண்டலைக் குரூஉப்பிசி ருடையத்
தண்பல வரூஉம் புணரியிற் பலவே'

(பதிற்று. 42)

'பிணம்பிறங் கழுவத்துத் துணங்கை யாடி
... ... ..... ......
முழங்குதிசைப் பனிக்கடல் மறுத்திசி னோரே ?'

(பதிற்று. 45)

'கோடுநரல் பௌவங் கலங்க வேலிட்டு
உடைதிரை பரப்பிற் படுகடல் ஓட்டிய
வெல்புகழ்க் குட்டுவன்'

(பதிற்று. 46)

என்ற எடுத்துக்காட்டுகளால் அவனுடைய கடற் போர்ப் பெருமை பேசப்படுகிறது. இப்பாடல்களில் அவனுடைய பிற போர்களும் பேசப்பட்டாலும், அவன் கடற்போரே அதிகச் சிறப்பு வாய்ந்தது என்பதை 45ஆம் பாடல் தெளிவாகக் கூறுகிறது.

'சிலைவிசை யடக்கிய மூரி வெண்டோல்
அனைய பண்பின் தானை மன்னர்
இனியா ருளரோ ? நின் முன்னும் இல்லை'

என்ற அடிகள் இக் கருத்தை வலியுறுத்தும்.

இத்துணைப் பெருமையுடையதாகப் பதிற்றுப் பத்தில் பாராட்டப்படும் இக் கடற்போர் புறநானூற்றிற் காணப்படும் குட்டுவன்பற்றிய ஓரே பாடலிற் பேசப்படாதது வியப்பினும் வியப்பே! இது ஒருபுறம் நிற்க, பரணரால் புறம் முதலிய நூல்களிற் பாடப்பெற்ற 75 பாடல்களில் எத்துணைச் செய்திகள் இடம்பெறுகின்றன? ஒருமுறை இப்பாடல்களைப் படிப்பவரும் இப் புலவர்பெருமானின் பரந்துபட்ட அறிவையும் நுண்மாண் நுழைபுலத்தையும் பாராட்டாமல் இருத்தல் இயலாது. தம் காலத்தும் தமக்கு முற்காலத்தும் வாழ்ந்த மன்னரைப்பற்றியும் அவர்களுக்கும் நிகழ்ந்த போர்களைப் பற்றியும் இவர்

கூறும் செய்திகள் படிப்பார்க்கு வியப்பை விளக்காமல் இரா. மருதத்திணையை மிகுதியும் பாடுபவர் பரணராகலின், அவரைப் பேசும்பொழுதெல்லாம் இரண்டு அரசர் போரிட்டதைக் குறிப்பிட்டு, 'அப்பொழுதெழுந்த ஆர்ப்பினும் பெரிதால் இவ் வலர்' என்று குறிப்பிடுகிறார்.

## 10. பரணரால் பாடப்பெற்றவர்

இவரால் குறிக்கப்பெறும் அரசர்பற்றி ஒரு சிறிது காண்பாம்.

ஆட்டனத்தி, ஆதிமந்தி வரலாற்றை மிகுதியாகப் பாடுகிறார். அகநானூறு 76, 135, 236, 376, 396 பாடல்களில் இந் நிகழ்ச்சி பேசப்பெறுகிறது. இதனையடுத்து அன்னி மிஞிலி என்பானை இவர் கூறுவதைப் பார்த்தால், அவன் காலத்தேதான் இவர் வாழ்ந்தாரோ என்றும் நினைக்கவேண்டியுளது. அவனை அகநானூறு 142, 181, 262, 396 பாடல்களிலும், நற்றிணை 265ஆம் பாடலிலும் குறிப்பிடுகிறார்; அடுத்துக் கரிகாலனை அகம் 125, 135, 246, 376 பாடல்களிற் குறிப்பிடுகிறார். இவர்கள்பற்றி மிகுதியான குறிப்புகள் வருகின்றன எனினும், பிறரும் பலர்பற்றியும் குறிப்புகள் வருகின்றன.

பழையன்பற்றி அகம் 186, 226-லும்; அஃதை பற்றி அகம் 76, குறுந்தொகை 298-லும்; தித்தன் பற்றிப் புறம் 352, அகம் 122, 152, 226-லும்; திதியன் பற்றி அகம் 196, 322-லும்; நன்னன்பற்றி அகம் 152,356, குறுந்தொகை 73, 292, நற்றிணை 272-லும் அதிகன்பற்றி அகம் 162-லும்; பேகன்பற்றி அகம் 262, புறம் 141, 142-லும்; பசும்பூண் பாண்டியன் பற்றிக் குறுந். 393-லும்; எவ்வி பற்றி அகம்

*266, குறுந். 19-லும்; அழிசிபற்றிக் குறுந். 258-லும்; ஓரி பற்றி நற்றிணை 6, 265-லும்; தழும்பன்பற்றி நற்றிணை 300-லும்; பாணன், கட்டி என்பவர்பற்றி அகம் 226-லும்; உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி பற்றிப் புறம் 4-லும்; குடக்கோநெடுஞ்சேரலாதன் பற்றிப் புறம் 63-லும் பாடுகின்றார். குறைந்த அளவு இருமுறையும், நிறைந்த அளவில் ஆறு இடங்களிலும் ஒவ்வொருவரும் பேசப்படுகின்றனர்.*

*இத்துணைப் பேர்களைப்பற்றி ஓடுகிற ஓட்டத்தில் குறிப்பிட்ட பரணர் பெருமான் குட்டுவனையும் குறிப்பிடுகிறார். அகநானூற்றில் ஒரே ஓர் இடத்தில் - அங்குதான் - அவனுடைய கடற்போர் பேசப் படுகிறது. அது வருமாறு:*

"படைநிலா இலங்குங் கடல்மருள் தானை
மட்டவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்
பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ் சிறந்து
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
ஓங்குதிசைப் பௌவம் நீங்க ஓட்டிய
நீர்மாண் எஃகம் நிறத்துச் சென்று அழுந்தக்
கூர்மதன் அழியரோ நெஞ்சே!

(அகம். 212)

## 11. பண்டைச் செயல்

*குட்டுவன் என்ற பெயரும் அவன் கடல் பிறக் கோட்டிய செய்தியும் இப்பாடலின்கண் தெளிவாகப் பேசப்படுதல் உண்மைதான். ஆனால், 'ஓட்டிய நீர்மாண் எஃகம்' என்ற தொடர் கூர்ந்து நோக்கற் குரியது. பண்டொருநாள் நடைபெற்ற செயலைக் குறிப்பதுபோல் அமைந்துள்ளன அல்லவோ இச்சொற்கள்! இவ்வொரு முறை குட்டுவன் செயலைக்*

குறிப்பிட்டது தவிர மேலே குறிப்பிட்ட வரிசையில் குட்டுவன் பெயர் யாண்டுங் குறிப்பிடப்படவில்லை. தாம் பாடிய 34 அகப்பாடல்களில் ஆறு இடங்களில் அன்னி மிஞிலியைக் குறிப்பிட்ட பரணர் ஏன் குட்டுவனை ஒரே இடத்தில்மட்டும் குறிப்பிட வேண்டும்? பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்து இவர் பாடியதாகவிருப்பின் அத்துணைப் பெரிய சிறப்பு இன்னும் பலவிடங்களிற் குறிக்கப்பெற்றிராதா? ஆதிமந்திக்கும் கரிகாலனுக்கும், ஏன் பெண் கொலை புரிந்த நன்னுக்கும் கொடுத்த அளவுகூடக் குட்டுவன் பெறாமற்போனது ஏன்? மோகூர்ப் பழையனைப் பரணர் அகம் 186, 326 பாடல்களிற் குறிப்பிடினும், குட்டுவன் அவனை வென்றதைக் கூறினாரல்லர்.

இவ்வொரு பாடலில் குட்டுவனைக் குறிப்பிட்ட காரணத்தால் அவன் காலத்தேதான் பரணர் வாழ்ந் தார் என்று வாதிட்டால், அவரால் குறிக்கப் பெற்ற மேலே கூறப்பெற்ற அனைவரும் சமகாலத்தவர் என்றே கருத நேரிடும்.

இக் குறிப்புகளும் இருவகைத்து. ஒரு மன்னனுடைய பெயரைக் குறிப்பிட்டு அவனுடைய இன்ன ஊரை ஒத்த இவள் நலம் கெடினும் என்று வரு மிடங்கள் உறுதியாக ஒன்றை அறிவுறுத்தும். புலவர்கள் ஓர் ஊரைக் குறிப்பிடும்பொழுது அப்பொழுது வாழும் மன்னனைக் குறிப்பிடுவார்களே தவிர, முன்னர் வாழ்ந்த மன்னனைக் குறிப்பிடுதல் மரபன்று; முறையுமன்று.

## 12. உவமை காட்டும் உண்மை

"பல்வேல் மத்தி கழாஅ ரன்ன." (அகம்: 6)
". . . . . . . . . . . . . . . . பொறையன்
அகல் இருங்கானத்து கொல்லி போல" (அகம்: 338)

நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்
கல்முதிர் புறங்காட்டு அன்ன (அகம்: 122)
"சுடர் மணிப் பெரும்பூண் ஆஅய் கானத்து."
(அகம்: 69)
"பழையன், காவிரி வைப்பிற் போஒர் அன்ன."
(அகம்: 186)
"அன்னி மிஞிலியின் இயலும்." (அகம்: 196)
"ஆஅய் நன்னாட்டு அணங்குடைச் சிலம்பின்
கவிரம் பெயரிய உருகெழு கவாஅன" (அகம்: 198)
"ஓரி, பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி."
(அகம்: 208)
"பேகன், கொண்டல் மாமலை நாறி." (அகம்: 262)

*இவ் வுவமைகள் அனைத்தும் ஒவ்வோர் ஊரைப் பற்றியும் அதனோடு தொடர்புடைய அரசனைப் பற்றியுங் கூறலான், புலவர் தம் காலத்து வாழ்ந்த அரசனையே குறிக்கின்றார் என்று கூறத் தடை யாது? தம் காலத்து வாழும் அரசனை விட்டுவிட்டு முன்னர் வாழ்ந்த அரசன் பெயரொடு ஊரைச் சேர்த்துப் புலவர் கூறினார் என்றல் பொருந்தாதன்றோ? எனவே, ஊருடன் சேர்த்து ஓர் அரசனைக் குறிப்பிட்டு அவ்வூரை ஒத்த அழகு என்று புலவர் கூறினால், அவ்வரசன் அவர் காலத்தே வாழ்ந்தவன் என்று கூறுவதிற் பிழை ஒன்றும் இல்லை. இக் கருத்தை மனத்துட்கொண்டு கீழ்வரும் அடிகளைக் கவனித்தல் வேண்டும். இப் பாடலும் பரணர் பாடியதே!*

ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவில் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி அன்னஎன் நலந்தந்து சென்மே."

(அகம்: 396)

*ஆரிய மன்னர்மேல் படையெடுத்துச் சென்று, அவரை வென்று, இமயமலையில் விற்கொடியைப் பொறித்து மீண்ட ஒரு சேரனைக் குறிக்கின்றது இப் பாடல். அவனுடைய ஊர், வஞ்சி என்றும் குறிக்கிறது; இத்தகைய பெருவீரன் பெயர் குறிப்பிடப்படவில்லை. இது பரணர்பாடிய பாட்டேயாகும். இவரால் பதிற்றுப் பத்துப் பாடப்பட்டிருப்பின், அப்பாடல் குறிக்கும் குட்டுவன் இச் செயலைச் செய்யதிருப்பின், இதனைப் பரணர் ஆண்டுக் கூறி இராரா? குட்டுவன் இச் செயலைச் செய்யவில்லையாயின் இதனை யார் செய்தனர்? குட்டுவன் தந்தை என்று பதிற்றுப் பத்தின் பதிகம் கூறும் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் நிகழ்த்திய பெரு வீரச்செயல் என்றேனும் கூறலாமா?*

## 13. உயர்வு நவிற்சி

*சேரலாதனைப்பற்றிக் குமட்டூர்க் கண்ணனார் என்ற புலவர் பாடியனவாகப் பத்துப் பாடல்கள் இரண்டாம் பத்தில் அமைந்துள்ளன. ஆனால், அப் பத்துப் பாடலுள் யாண்டும் அவன் வடநாடு சென்றதாக ஒரு குறிப்பும் இல்லை.*

> "ஆரியர் துவன்றிய பேரிசை இமயந்
> தென்னங் குமரியொடு ஆயிடை
> மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே."

(பதிற்று. 11)

*என வரும் அடிகள் உயர்வுநவிற்சி யணியாய் இமய முதல் குமரிவரை ஆண்டான் என்று கூறுகின்றனவே தவிர, அவன் படையெடுப்புப்பற்றி ஒன்றுங் கூறிற்றிலது. இதேபோலக் குட்டுவனைப்பற்றிய ஐந்தாம் பத்து 3ஆம் பாடலும்,*

"கடவுள் நிலைஇய கல்லோங்கு நெடுவரை
வடதிசை எல்லை இமயம் ஆகத்
தென்னங் குமரியொ டாயிடை அரசர்
முரசுடைப் பெருஞ் சமம் ததைய ஆர்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவின் அழித்த
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ"

(பதிற்று. 43)

*என்று கூறிச் செல்கிறது. எனவே, அகம் 396ஆம் பாடல் நெடுஞ் சேரலாதனைக் குறிக்கவில்லை என்பதும் வெள்ளிடைமலை. மேலும், இவ்வகப் பாடலில் 'பிணித்தோன் வஞ்சியன்ன' என வருஞ் சொற்களால் இவ்வரசன் புலவர் காலத்தே வாழ்ந்தவன் என்பதும் நன்கு விளங்கும்.*

## 14. பரணர் அல்லர்

*இவ்வாறாயின், அகநானூறு 396ஆம் பாடலில் பரணர் காலத்து வாழ்ந்த அரசன் ஆரியர் அலறத் தாக்கிய செய்தி யாரைக் குறிக்கும்? யாரைக் குறித்தாலும் பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தின் தலைவன் நெடுஞ்சேரலாதனையும், ஐந்தாம் பத்தின் தலைவன் குட்டுவனையும் குறிக்கவில்லை என்பது தெளிவு. அது தெளிவாகவே, ஐந்தாம் பத்தின் ஆசிரியர் பரணர் அல்லர் என்பதும் நன்கு விளங்கும்.*

*மற்றொன்றும் நோக்கற்குரியது. இரண்டாம் பத்தில் நெடுஞ்சேரலாதன் புகழ் பாடும்பொழுது அவன் செய்த கடற்போரே பெரிதாகப் பேசப்படுகின்றது.*

"வரைமருள் புணரி வான்பிசி ருடைய
வளிபாய்ந் தட்ட துளங்கிருங் கமஞ்சூல்
நளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி

அணங்குடை அவுணர் ஏமம் புணர்க்கும்
சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறு ஊர்ந்தாங்கு"

(பதிற்று. 11)

என்று முருகப்பெருமான் செய்த கடற்போரை உவமிக்கின்றார், சேரலாதன் செய்த கடற்போருக்கு. அன்றியும்

"நுங்கோ யாரென வினவின் எங்கோ
இருமுந்நீர்த் துருத்தியுள்
முரணியோர்த் தலைச் சென்று
கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின முன்பின்
நெடுஞ் சேர லாதன்"

(பதிற்று. 20)

என்றும் அவன் புகழ் பேசப்படுகிறது. எனவே, நெடுஞ் சேரலாதன் கடற்போர் செய்தலில் இத்துணைச் சிறந்தவனாயின், அவனை ஒரு புலவன் இவ்வளவு சிறந்த முறையில் பாராட்டியும் பாடினான் எனில், பின் வந்தவர்க்கு இது தெரியாமலா போய்விடும்? ஐந்தாம் பத்தின் தலைவன் குட்டுவனை யார் பாடினாலும் அவன்தான் முதன் முதலில் கடற்போர் புரிந்தவன் என்ற கருத்தில்

"அனைய பண்பின் தானை மன்னர்
இனியார் உளரோ முன்னும் இல்லை
................. .......................... ..........
முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசி னோரே"

(பதிற்று. 45)

என்று பாடுவதன் நோக்கம் யாது? தந்தை செயலை மகனைப் பாடும் வேகத்தில் மறந்துவிட்டாரா புலவர்? முன்னும் என்ற உம்மையால் பின்னரும் வரப்போவதில்லை என்று பேசும் அளவிற்குக் குட்டுவனிடம்

அன்பு பூண்டுவிட்டாரா அப் புலவர்? இவ்வாறு தந்தை முதலாகச் செய்த செயலை மறைத்து மகனே செய்ததுபோலப் பாடுபவரையா 'காசறு செய்யுள் புலவர்' எனப் பாராட்டுவது? பரணரை ஒத்த புலவர் இத்தகைய பெரும் பிழையைச் செய்திருப்பாரா? எனவே, இதனாலும் ஐந்தாம் பத்தைப் பரணர் பாடவில்லை என்ற கருத்தே வலியுறல் காண்க. இப்பத்தைப் பரணர் பாடவில்லை என்பது ஒருபுறம் இருக்க, நெடுஞ்சேரலாதனும் குட்டுவனும் தந்தையும் மகனும் அல்லர் என்பதும் இதனால் வெளிப் படுகிறதன்றோ! தம்முள் தொடர்பற்றவராக இவ்விருவரும் இருந்தாலொழிய இவ்வாறு முன்னவன் செயலை மறந்து பின்னவனைப் பாடக் காரண மில்லை, யார் இப்பத்தைப் பாடி இருப்பினும்.

## 15. சேரர் மரபு

இது நிற்க, சேரமான் குடக்கோ நெடுஞ்சேர லாதன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியோடு பொருது மாய்ந்தான் என்று பரணர் பாடுகிறாரே அவன் யார்? பல புலவர்கள் எளிதான முறையில் இவனை இரண்டாம் பத்தின் நெடுஞ்சேரலாதன் எனக் கூறி விடுகின்றனர். அவர்கள் கூற்றை அப்படியே ஒப்புக் கொள்வதாயின் விளையும் பயனைக் காண்போம். பதிற்றுப்பத்துள் காணப்படும் சேரர் உரிமை வழி. (பக்கம் 158ல் காண்க.)

இப் புலவர் பாடிய அகம் 62ஆம் பாடலில் வரும் 'கயிறுகெழு தானைப் பொறையன் கொல்லி' என வரும் அடி 8ஆம் பத்தின் தலைவனாய தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைக் குறிப்பது என்பர் அறிஞர். வேறு காரணங்களால் கொல்லி இவன்

## (க). உதியஞ் சேரல்




## (உ) அந்துவஞ்சேரல் இரும்பொறை வழி



காலத்தில்தான் சேரர் கைவசம் வந்தது எனவும் அறிய முடிகிறது. பதிற்றுப்பத்தை நீக்கிக் கண்டாலும், பரணர் புறம் 63ஆம் பாடலில் நெடுஞ்சேரலாதனையும், புறம் 369-ல் கடலோட்டிய குட்டுவனையும், எட்டாம் பத்தின் தலைவனாகிய தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும் பொறையை அகம் 62ஆம் பாட்டிலும் பாடினார் என்று ஆகிறதே. இந் நிலையில் பதிற்றுப் பத்தின் மரபுவழியை ஒப்புக்கொண்டு குடக்கோ நெடுஞ் சேரலாதன் என்பவன் இரண்டாம் பத்தின் தலைவன் என்பதையும் ஒப்புக்கொண்டால், பரணர், 7 பேர் ஆட்சிசெய்யுங் காலம் முழுமையும் இருந்தார் என ஒப்ப நேரிடும். (எதிரேயுள்ள வமிசாவளியைக் காண்க.) இதனை மறுக்கவேண்டுமாயின், ஆட்சி செய்யாமல் உண்டு உடுத்து இருந்த அரச குமாரர் களைப் பாடினார் எனக் கூறநேரிடும். 7 பேர் ஆட்சிக் காலம்வரை ஒரு புலவர் இருப்பதாயின், அவரை 'வேத நூற் பிராயம் நூறைத்' தாண்டியவராகவே ஏற்க நேரிடும். இவ்வாறு கொள்ளாமல் இருக்க வேண்டு மாயின், பரணரால் குறிக்கப்பெற்ற இம் மூவரும் அடுத்தடுத்தும் சமகாலத்தும் வாழ்ந்தவர் என்றும் கொள்ள வேண்டும். கொள்ளவே, பதிகங் கூறும் உறவு முறை வீழ்ந்துவிடுதல் கண்கூடு.

## 16. ஆய்விலா நம்பிக்கை

இத்துணைப் பெரிய தொல்லைகளும் ஏன் விளைகின்றன? பதிகத்தில் கூறப்பெற்றவற்றை அப்படியே உண்மை என்று ஏற்றுக்கொள்வ தனாலேயேயன்றோ? பழந்தமிழ் நாட்டில் ஒரு நல்ல பழக்கம் இருந்துவந்துள்ளதை யாரே மறுக்க முடியும்? 7ஆம் நூற்றாண்டின் பாடப்பெற்ற பாண்டிக்

கோவையை எடுத்து ஆளும் இறையனார் களவியல் உரையாசிரியரைச் சங்கச் சான்றோராகிய நக்கீரர் என்று இதுவரை இந்நாடு ஏற்றுவந்தது. அப்படியே நக்கீரர் முதலில் வாய்மொழியாற் கூறினார்; பின்னர் வந்தவர்கள் பாண்டிக் கோவைப் பாடல்களையே உரையாசிரியர் மேற்கோளாக எடுத்து ஆண்டு பேசுவதையும் காணலாம். அன்றியும், உரை கூறிய நக்கீரர் தமக்குப் பின்னர் வரும் ஆறு தலைமுறையார் களையும் யார் யார்ரிடமிருந்து உரையைக் கற்றார் என் பதனையும் முன்னரே கூறிவிடுதல் வியப்பினும் வியப்பே! யாரோ ஒரு சிறந்த புலவர்தாம் இவ்வுரையை எழுதியிருத்தல் வேண்டும். எனினும், இத்துணைப் பெரிய நூலுக்குத் தாம் உரையிட்டதாகக் காட்டிக்கொள்ள வேண்டாத அப்புலவர் பெருந்தகை நக்கீரர் பெயரை அதற்குச் சூட்டியும் இருக்கலாம்! அன்றேல், அவருடைய பெயரும் நக்கீரர் என்றே இருந்திருக்கலாம். இறையனார் களவியல் நூல், தொல் காப்பியத்தினும் ஓரளவு மாறுபட்ட கொள்கை யுடையது. எனவே, தொல்காப்பியத் பொருளதி காரத்தினும் புறம்பாக அந்நூல் ஏன் தோன்றிற்று என்பதை மனத்துட்கொண்டு, யாரோ ஒருவர் ஆலவாயின் அவிர்சடைக் கடவுளே இந் நூற்பாக் களை இயற்றினான் எனக் கதை கட்டி விட்டார். அவர் அவ்வாறு கதைகட்ட வாய்ப்பாக இருந்தது களவியல் நூலாசிரியர் பெயரும் 'இறையனார்' என்று இருந்த ஒற்றுமை!

இதேபோலத்தான் ஐந்தாம் பத்தைப் பரணர் இயற்றினார் என்று கூறும் கூற்றும் ஆம். பரணர் என்ற

பெயரையுடைய பிற்காலப் புலவர் ஒருவர் இதனை இயற்றியும் இருக்கலாம். அஃது எவ்வாறாயினும், புறம், அகம், நற்றிணை, குறுந்தொகை முதலிய தொகுப்பு நூல்களிற் காணப்பெறும் பாடல்களை இயற்றிய பரணருக்கும் ஐந்தாம் பத்தைப் பாடிய பரணருக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை, பெயர் ஒற்றுமை தவிர. (அதுவும் அவருக்குப் பரணர் என்ற பெயர் உண்மையில் இருந்திருந்தால்.) பதிற்றுப்பத்து முழுவதையும் ஒரு முறை கற்பாரும் எட்டுப் பத்துகளிலும் காணப்படும் சொல் ஆட்சி முதலியவற்றில் ஓர் ஒற்றுமையைக் காண்டல் கூடும். இவை அனைத்தும் ஒருவர் பாடியனவோ என்றுகூட நினைக்கத் தோன்றுகிறது. தக்க ஆதாரங்கள் கிடைக்கும் துணையும் இக் கருத்தை வலியுறுத்த வேண்டா.

பதிகத்தை நம்பி ஐந்தாம் பத்தைப்பற்றித் தொங்கிக் கொண்டிருக்கும் — ஐந்தாம் பத்தின் ஆசிரியர் பரணர் என்ற — கொள்கையை விட்டு விட்டால் இரண்டு நன்மைகள் ஏற்படும். முதலாவது, சேரன் செங்குட்டுவனும், கடல் பிறக்கோட்டிய குட்டுவனும் ஒருவனே என்று கூறத் தேவை இல்லை. ஒன்று எனக் கூறுவதால், செங்குட்டுவன் இளங்கோவடிகளின் கற்பனையில் உதித்தவன் என்று கூறுமளவிற்கு ஆராய்ச்சி நீண்டு விடுகிறது. ஏன்? பரணர் பாடிய பாட்டுதான் ஐந்தாம் பத்து எனக் கொண்டால் இம் முடிபு சரியானதே; ஆனால், அக் கோட்பாடு எத்துணை இடையூறுகளை விளைவிக்கிற தென்பதைக் கண்டோம். பரணர் என்ற பெயரை உடைய ஒரு பிற்காலப் புலவரோ, அன்றி வேறு பெயரையுடைய ஒருவரோ அப் பத்தை இயற்றி யிருத்தல் வேண்டும்.

## 17. வடநாட்டுப் போர்

*மற்றொருவகையில் நோக்கினாலும் இக் கருத்து வலியுறுதலைக் காணலாம். அகம் 212ஆம் பாடலில் குட்டுவன் பெயரைக் குறிப்பிட்டு. அவன் கடற் போரைக் குறிப்பிடுகிறார் உண்மைப் பரணர். அதற்கு முன்னர் குறிப்பிட்ட 75 பாடல்களிலும் அரசர்களைக் குறிப்பிட நேர்ந்தால் அவர்கள் ஊரையும், பெயரையும், போர் செய்த இடத்தையும் குறிப்பிடு கிறார். ஐயம் ஏற்பட்டால், மேலே எண்ணிக்கை கொடுக்கப் பெற்றுள்ள பாடல்களைப் புரட்டிப் பார்க்கலாம். அவ்வளவு தூரம் கருத்துடன் அரசன் பெயரைத் தவறாமல் குறிப்பிடும் பரணர் பெருமான்,* **அகம் 396**ஆம் *பாடலில் அரசன் பெயரைக் குறிப்பிடவே இல்லை. ஆனால், அவன் ஒரு சேர மன்னன் என்பதைமட்டும் விற்கொடியைக் குறிப்பதால் குறிப்பிடுகிறார். மீட்டும் ஒருமுறை பாடலைக் காண்போம்:*

"ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசை
தொன்றுமுதிர் வடவரை வணங்குவில் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி யன்னவென் நலந்தந்து சென்மே."

*என்னும் பாடலைக் கூர்ந்து நோக்குவோமாக.*

*"ஆரியர் அலறத் தாக்கி" என்றதாலேயே ஆரிய மன்னர்களுடன் போரிட்ட செய்தியைக் கூறிவிட் டாரே கவிஞர்; அவ்வாறிருக்க, மீட்டும் 'வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்' என்று கூறவேண்டிய இன்றியமையாமை யாது?*

ஆரியரை அலறத் தாக்கிய செயல் வேறாகவும், வெஞ்சின வேந்தரைப் பிணித்த செயல் வேறாகவும் இருந்தால்தான் இப் புலவரைச் சிறந்த புலவர் என்று கூறல் கூடும். எனவே, மூன்று செயல்கள் இப் பாடலிற் குறிப்பிடப்படுகின்றன: (1) சேரன் ஒருவன் ஆரியர் அலறத் தாக்கினான்; (2) பேரிசை இமயத்தில் விற்கொடியைப் பொறித்தான்; (3) அப்போரில் பேரிசை மன்னர் சிலரைப் பிணித்தான். இம் மூன்றாம் செய்தி ஓரளவு எண்ணவூட்டுச் (Suggestion) செய்வதாக உளதன்றோ! ஆரிய மன்னரைப் போரில் வென்று இமயத்தில் விற்கொடியைப் பொறித்து, ஆரிய மன்னர் இருவரைக் கட்டி அவர் தலைமேல் கல்லை ஏற்றி ஒரு சேரன் கொண்டு வந்ததை நினைவூட்டுவபோல அன்றோ உள்ளன இப்பாடலின் அடிகள். அத்தகைய ஒரு சேரனைத் தானே சிலப்பதிகாரம் குறிக்கிறது? அவ்வாறாயின், ஏனைய மன்னர்களை விடாமற் பெயர் குறித்த இப்புலவர் இம் மன்னனின் பெயரைக் குறிப்பிடவில்லை! ஏன்?

இக் கேள்வி சிறந்ததுதான். ஆனால், விடையும் ஊன்றி நோக்கினாற் கிடைக்கும். ஏனைய அரசர்கள் செய்த போரெல்லாம் தமிழ்நாட்டில் செய்தவையே. தமிழர் தமிழருக்குள் போரிட்டு மண்டையை உடைத்துக் கொண்ட கதைதான்; சங்கப் பாடல்களிற் பரக்கக் காண்கின்ற செய்தி. எனவே, அவர்கள் தம்முள் போரிட்டுக்கொண்டதைக் குறிப்பிடும் பொழுது பெயர்களைக் குறிப்பிடாவிடின் குழப்பமே விளையும். கரிகாலன் என்ற பெயருடைய இருவரையும் திருமாவளவன் என்ற பெயருடைய ஒருவனையும் நன்கு விளங்கிக்கொள்ளாமல் எத்தனை குழப்பம் விளைவித்துவிட்டோம். எனவே, தமிழ் நாட்டில்

*தம்முள்ளேயே போரிட்ட மன்னர்கள் பெயர்களை விடாமற் குறிக்கிறார் கவிஞர். ஆனால், வடநாட்டிற் சென்று ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசை இமயத்தில் விற்கொடி பொறித்தவர் எத்தனை சேரர்? ஒருவன் தானே! எனவே, அவன் பெயரைக் கூறாமலே விட்டு விட்டார் பரணர், தமிழ்நாடு முழுவதும் அறிந்த பெரும்புகழ் படைத்தவன் அவனாகலான்.*

*வஞ்சியைக் குறிக்கும்பொழுது 'வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன் வஞ்சி' என்று கூறுவதனால், அச் சேரன் வெற்றிபெற்று மீண்ட காலத்தையடுத்து இப் பாடல் தோன்றி யிருக்கலாம் என்று நினைப்பதில் தவறு இல்லை. கடற்போர் செய்த குட்டுவனை நிலப் போரில் மிக்கவனாகப் புகழ்தல் எத்துணைப் பொருத்த மற்றது? புறம் 369ஆம் பாடலில் இவ் வருணனை வருகின்றது காணலாம்:*

"இருப்புமுகஞ் செறித்த ஏந்தெழில் மழைக்கண்
கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த
வாள்மின் னாக வயங்குகடிப் பமைந்த
குருதிப் பலியா முரசுமுழக் காக
அரசராப் பனிக்கு மணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
ஈரச் செறுவயின் தேர்ஏ ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
.... ..... .......... .........."

(புறம்: 369)

*என வரும் அடிகள் அம் மன்னனுடைய போரைப் பற்றிய உருவகமாகும். கடல் பிறக்கோட்டியவன்*

ஒருவனைப்பற்றி இத்தகைய கற்பனையும் உருவகமும் தோன்றக் காரணமில்லை. எனவே, இப் பாடல், அகப் பாடலில் அப் புலவர் பெயர் குறிப்பிடாமல் கூறிய மன்னனைப்பற்றியதே ஆகும் என நினைப்பதில் தவறில்லை எனத் தோன்றுகிறது. பரணரால் இவ்விரண்டு (அகம், 396; புறம், 362) பாடல்களிலும் குறிக்கப்பெற்றவன் செங்குட்டுவனைப் புகழ்ந்த புலவர் பரண ரல்லர் என்பதை வலியுறுத்தவே இதுகாறுங் கூறப்பெற்றது. இதை ஏற்றுக்கொண்டால் பதிகம் கூறும் அனைத்தும் பொருத்தமற்றவை, புலவர் பெயர் கூறுவது உட்பட என்பது நன்கு விளங்கும்.

## 18. முடிபுண்மை

பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தைப் பாடிய புலவரின் பெயரை நாம் அறிய முடியவில்லை ஆயினும், அதிற் புகழப்படும் குட்டுவன் சிலப்பதி காரக் குட்டுவன் என்று நினைந்து இடர்ப்பட வேண்டியதில்லை. இதில் குறிக்கப்பெறுபவன் பெயரும் குட்டுவன்தான். அவன் செய்த வீரச்செயல் கள் இரண்டு. முதலாவது அவனியற்றிய கடற்போர். ஆனால், பதிற்றுப்பத்துக் கூறுவதுபோல் அவனுக்கு முன்னும் பின்னும் கடற்போர் இயற்றியவர் இல்லை என்று கருதுதல் தவறு. அவனுக்கு முன்னோ பின்னோ நெடுஞ்சேரலாதன் என்பவனும் கடற்போர் செய்துள்ளான் என்பதை அதே பதிற்றுப்பத்தின் மற்றொரு பகுதியால் (2ஆம் பத்து) அறிகிறோம் இப் பதிற்றுப்பத்தைப் பல புலவர்கள் பாடியிருப்பின், இவ்வாறு முரணும்படி பாடமாட்டார்கள். ஒரே புலவன் பாடியிருப்பின், முன்னரே குறிப்பிட்டோமே என்ற கருத்தால், இவ்வாறு நெடுஞ்சேரலாதன் செயலை விட்டுவிட்டுக் குட்டுவனைப்பற்றி மட்டும்

பாடியிருத்தல்கூடும். இவ்வகை முரண்பாடும் இப் பாடல்களை ஒரே புலவன் இயற்றினானோ என்ற ஐயத்தை வளர்க்க உதவுகிறது.

கடற்போரையன்றி இக் குட்டுவன் செய்ததாக மற்றொரு வீரச்செயலும் பேசப்படுகிறது. பதிற்றுப் பத்தில். அறுகை என்பவனுக்கும் மோகூர் மன்னன் ஒருவனுக்கும் போர் நிகழ்ந்திருக்கிறது. அப் போரில் குட்டுவன் நண்பனாகிய அறுகை தோற்று ஓடி ஒளித் துக்கொண்டான். தனக்கு வந்து உதவுமாறு அவன் குட்டுவனை வேண்டவுமில்லை. அவ்வாறிருந்தும், அறுகைக்காகப் பரிந்துகொண்டு குட்டுவன் மோகூர் மன்னன்மேல் படையெடுத்துச் சென்று அவனை வென்றான். இச் செய்தியை 4ஆம் பாடல் குறிக்கின்றது.

"நுண்கொடி உழிஞை வெல்போர் அறுகை
சேணன் ஆயினுங் கேளென மொழிந்து
புலம்பெயர்ந் தொளித்த களையாப் பூசற்கு
அரண்கள்தா வுறீஇ யணங்குநிகழ்ந் தன்ன
மோகூர் மன்னன் முரசங் கொண்டு
நெடுமொழி பணித்தவன் வேம்புமுத றடிந்து"

(பதிற்று. 44)

இதனால் நண்பனாகிய அறுகை தன்னை அழைக்காதவிடத்தும் அவன்பொருட்டுச் சென்ற குட்டுவன் நண்பு பாராட்டும் இயல்பு நன்கு வெளிப் படுகின்றது.

இதுகாறுங் கூறியவாற்றால் சில உண்மைகள் வெளிப்படும். ஐந்தாம் பத்தின் ஆசிரியர் பரணர் அல்லர். பதிகம் முற்றிலும் தள்ளத்தக்கதேயன்றிக் கொள்ளத்தக்கதன்று. சங்கப் பாடல்கள் பாடிய பரணரின் வேறானவர் ஐந்தாம் பத்தின் ஆசிரியர் என்றால், ஏன் செங்குட்டுவன் செய்தி இதில் இடம்

பெறவில்லை என்ற வினாவிற்கே வழி இல்லையாய் விடும். இப் பத்தின் தலைவன் குட்டுவன் என்ற பெயருடைய ஒரு சேரன். இவன் நெடுஞ்சேரலாதன் என்ற இரண்டாம் பத்தின் தலைவனுக்கு மைந்தன் என்பதும் (பதிகம் தவிர) ஆதாரமில்லாக் கூற்றேயாகும். ஒரு மன்னனைப் புகழ வேண்டுமாயின், அவன் வீரச் செயல் ஒன்றும் நிகழ்த்தாவிடத்தும் அவன் முன்னோர் செய்த வீரச்செயலைப் பெரிதாகக் கூறி அது செய்தான் மகனே! மருகனே! வழித் தோன்றலே! என்று கூறும் புறப்பாடல்களை யாரே அறியார்? அவ்வாறிருக்க, நெடுஞ்சேரலாதன் மகனாகக் குட்டுவன் இருப்பானேயாகில், அவன் தந்தையின் கடற்போர்த் திறனை எந்தப் புலவன்தான் விட்டு வைப்பான்? அது பழந்தமிழ்க் கவிஞர் மரபுமன்று. எனவே, இவர்கள் தந்தையும் மைந்தனும் என்று கூறுவதும் பொருத்தமற்றதே.

சேரநாட்டில் கிடைக்கும் செப்பேடுகளிற் பரணன் கானம், கண்ணன்காடு, காக்கையூர் என்ற பெயருடைய ஊர்கள் காணப்படுதலின், ஐந்தாம் பத்தைப் பரணர் பாடினார் என்று இத்துணை முரண் களையும் பொருட்படுத்தாமற் கூறவேண்டிய கடப் பாடின்று.

இப் பதிற்றுப்பத்துப் பாடல்கள் யாரால் பாடப் பெற்றிருப்பினும், இப் பாடல்கள் ஓரளவு கவிதை நயம் பொருந்தியவைதாம். ஏனைய சங்கப் பாடல்களில் காணப்பெறும் ஓசைநயமும், சொல்லாட்சிச் சிறப்பும், கற்பனைத்திறமும் இப் பாடல்களிற் காணப்பெற வில்லை. எனினும், பிற்காலப் பாடல்கள் பலவற்றை நோக்க இவை நல்ல கவிதைகள் என்றே கூறலாம். ஒவ்வொரு பாடலிலும் காணப்படுகிற நல்ல அடி

ஒன்றை எடுத்து அப் பாடலின் தலைப்பாக மிகவும் பிற்காலத்தில் யாரோ இட்டிருக்கின்றனர்.

'சுடர்வீ வேங்கை' என்ற முதற் பாட்டின் தலைப்பு 'வரைசேர்பு எழுந்த சுடர்வீ வேங்கை' என்ற அடியிலிருந்து எடுக்கப்பெற்றுள்ளது. யானைக்கும் புலிக்கும் என்றுமே பகைமை உண்டு. சில சந்தர்ப் பங்களில் வேங்கை மரத்தின் பூக்களையே வேங்கைப் புலி என்று யானை நினைந்துகொள்வதுண்டு. 'மருண்டவன் கண்ணிற்கு இருண்டதெல்லாம் பேய்' என்ற முதுமொழிக்கிணங்க வேங்கையினிடம் சினங் கொண்ட யானைக்குக் காணுமிடந்தோறும் வேங்கைக் காட்சியே கிடைக்கிறது. எனவே, தன் பகையாகிய வேங்கைப்புலி மரத்தின்மேல் இருக்க நியாயமில்லை என்பதைக்கூட மறந்துவிட்டுப் பூக்கள் நிறைந்த வேங்கை மரத்தின் கிளைகளைத் தன் துதிக்கையால் வளைத்து ஒடித்துத் தலையின்மேல் வைத்துக்கொண்டு பிளிறுகிறதாம். அது போர் மறவர்கள் போர்ப்படை தாங்கிப் போர்க்களத்தில் நின்று ஆரவாரஞ் செய்வது போல் இருக்கிறதாம். இவ்வழகிய உவமை முதற் பாடலில் இடம் பெறுகிறது:

"மறப்புலிக் குழூஉக்குரல் செத்து வயக்களிறு
வரைசேர்பு எழுந்த சுடர்வீ வேங்கைப்
பூவுடைப் பெருஞ்சினை வாங்கிப் பிளந்துதன்
மாயிருஞ் சென்னி அணிபெற மிலைச்சிச்
சேஎ ருற்ற செல்படை மறவர்
தண்டுடை வலத்தர் போரெதிர்ந் தாங்கு
வழையமல் வியன்காடு சிலம்பப் பிளிறும்"

(பதிற்று. 41)

பகையரசர் தலைகளைத் தோமரத்தால் இடிப்பதை உவமை கூறவந்த கவிஞர், மிளகை

உலக்கையால் இடிப்பதை உவமிக்கின்றார். இவ்வுவமை பாடியகாரணத்தாலேயே இப் புலவரைச் சேரநாட்டைச் சேர்ந்தவரென்றும் பரணர் அல்லரென்றும் கூறி விடலாம்.

"................................தெவ்வர்
மிளகெறி யுலக்கையின் இருந்தலை யிடித்து"

(பதிற்று. 41)

என்பதால், சேரநாட்டில் பிறந்தவர்கட்கே இயல்பாய் வருவது இவ்வுவமை என்பதைத் திறனாய்வாளர் அறியலாம்.

தமிழ்நாட்டின் பிறபகுதிகளிற் காணப்படாத 'மிளகு எறி உலக்கை' பற்றிப் பாடிய இவ்வாசிரியர் மற்றொரு புதிய பழக்கத்தையும் இரண்டாம் பாடலில் குறிப்பிடுகிறார். நல்ல பூக்களை மாலையாகத் தொடுத் தணிதல் தமிழ்நாட்டு மரபாயினும், இஞ்சியை இம் மாலையுள் வைத்துத் தொடுத்தல் வேறு பாடல்களிற் காணாத புதுமையாம். பத்துப்பாட்டிற் பல விடங்களிற் பேசப்படினும், இஞ்சி, மாலையில் இடம் பெற்றிலது ஆனால், இரண்டாம் பாட்டில் 'இஞ்சி விராய பைந்தார் பூட்டி' என்று இவ்வாசிரியர் பாடுவது இவர் தமிழ் நாட்டைச் சேர்ந்தவரல்லர் என்பதையே குறிக்கிறது.

மகளிரை வருணிக்கும் 6ஆம் பாட்டின் முதல் 4 வரிகளும் சிறந்த ஓசைநயம் பெற்றுள்ளன. மெல்லிய தன்மையுடைய மகளிர் என்று சொல்லால் கூறாது சொற்களின் ஓசையால் அக் கருத்தைப் பெற வைப்பது சிறந்த கவிதையின் இலக்கணங்களுள் ஒன்று.

"இழையர் குழையர் நறுந்தண் மாலையர்
சுடர்நிமிர் அவிர்தொடி செறித்த முன்கைத்

திறல்விடு திருமணி இலங்கு மார்பின்
வண்டுபடு கூந்தல் முடிபுனை மகளிர்"

(பதிற்று. 46)

இப்பகுதியின் முதலடியில் வரும் 'ழ'கர ஒலியால் அவர்கள் மென்மைத் தன்மையைப் பெறவைக்கின்றார் ஆசிரியர். 'சுடர்நிமிர் அவிர்தொடி செறித்த முன்கை' என்ற அடியில் வரும் வல்லோசையால் அவர்கள் அணிந்திருந்த வளையல்களின் ஓசையைக் காட்டுவதோடு, கடினமான பொன்னால் செய்யப் பெற்றுக் கையில் இறுக்கமாக அணியப்பெற்றிருந்தன அவை என்ற குறிப்பையும் பெறவைக்கின்றார். சொற் பொருளாலன்றி ஓசையால் இப்பொருளைக் குறிப்பாகப் பெறவைப்பதைக் கவிஞன் வன்மைகளுள் ஒன்றாகக் குறிப்பிடுவர் திறனாய்வாளர்.

கடலின் ஓசை தூரத்தே இருந்து கேட்டால் ஒரு வகையாகவும் கேட்கும். தூரத்தே இருந்து கேட்கும் பொழுது 'ஓ' என்ற ஒலியும் அணித்தே நிற்கையில் அலைகள் வீழ்ந்து உடைவதால் 'கடபட' என்ற ஒலியும் கேட்கும். இவ்வொலி வேறுபாட்டை இரண்டு அடிகளில் தெரிவிக்கிறார் கவிஞர்.

"கோடுநரல் பௌவங் கலங்க வேலிட்டு
உடைதிரை பரப்பில் படுகடல்......."

(பதிற்று. 46)

என்ற பகுதியில் 'கோடுநரல்', 'வேலிட்டு' என்று முதலும் முடிபுமாக உள்ள சொற்கள் 'ஓ' ஒலியையும் 'உடைதிரை', 'படுகடல்' என்ற சொற்கள் 'கடபட' ஓசையையும் தருதல் இசையுணர்வுடையார்க்குப் புலனாம்.

ஐந்தாம் பத்துப் பாடல்களிலும் இங்ஙனம் பல அழகுகளைக் காண்டல் கூடும்.

# 15

## இலக்கியப் பண்பு

மன்னா உலகத்து மன்னுதல் குறித்து ஆன்றோர்கள் இயற்றிய நூல்கள் அனைத்தும் இலக்கிய மென்றே கூறப்படும். இலக்கியம் என்ற சொல்லின் கண் பாடல், வசனம், நாடகம் என்ற அனைத்தும் அடங்கும். இவை மூன்றும் இதனுள் அடங்குமேனும், இவற்றுள் சிறந்து நிற்பன செய்யுட்களே. ஏனைய இரண்டனையும்விடச் செய்யுட்கள் சிறப்படையப் பல காரணங்கள் உள. சுருங்கக் கூறல், விளங்கவைத்தல், உணர்ச்சி யூட்டல், இராகத்திற்கு ஒத்து வருதல் முதலியன அவற்றுட் சிலவாம். இச்செய்யுட்களையும் இரண்டு வகையாகப் பிரித்தல் கூடும். முதல் வகையைப் 'பாடல்கள்' என்றும் இரண்டாம் வகையைச் செய்யுட்கள் என்றுங் கூறலாம். பாடல்கள் என்று அழைக்கப்படுவனவும் செய்யுட்களும் உருவத்தானும் வடிவத்தானும் ஒத்திருப்பினும், மேலே கூறிய காரணங்களால் தம்முள் மாறுபாடுடையன. முன்னையது பாடவேண்டும் என்றதொரு கட்டுப்பாட்டுக்கு இணங்கிப் பாடப் படுவதன்று. செய்து தீரவேண்டுமென்றவிடத்துச் செய்யப்படுவதே செய்யுளாம். முன்னையது யாம் கூறியபடி அமைவதோடன்றிப் பாடுகின்ற ஆசிரியனது மன

நிலையையும் பொறுத்து வெளிவருவதாம். இதனைத் தான் நாவின் வேந்தர் நன்குணர்ந்து 'உளங்கனிந்த போதெலாம் உவந்து உவந்து பாடுமே' எனக் கூறினார். எனவே, பெரிதும் கவிஞனின் மன நிலையை ஒட்டி வெளிவரும் இப் பாடல்கள் என்று கூறின மாத்திரையானே, அவை கட்டுப்பாட்டிற்கு அடங்காதவை என்ற உண்மை தானே பெறப்படு கின்றதன்றோ! ஆகவே, இப் பாடல்களையும் செய்யுட் களையும் உணர்வோடு படிப்போர்க்கு இவற்றிடையே உள்ள வேற்றுமை தெற்றென விளங்கும்.

உணர்வோடு படிப்பதாவது என்னையெனின், பாடல்களை அவற்றிற்காகவே பயில்வதாம். வேறு பயன் கருதிக் கற்றவழிக் கவிஞனின் உட்கோளை உணர முடியாதுபோய்விடும். அதாவது, சிறந்த பாடல்களைப் படிப்பதால் உண்டாம் இன்பமே படிப் பதன் கைம்மாறாம். எனினும், மனப்பண்பை மாற்றி யமைத்தல் முதலிய பிற தொழில்களும் பாடல்கட்கு உண்டேனும், சிறந்ததாகக் கருதப்படுவது, படிக்கும் பொழுது தன்னை மறந்து அனுபவிக்கும் இன்பமேயாம். இது மேலைநாட்டாருக்கும் ஒப்ப முடிந்த தொன்றாம். இக் கருத்தையே வலியுறுத்துவான் வேண்டிக் கம்பநாடரும் 'செஞ்சொற் கவியின்பம்' எனக் கூறியிருத்தல் காண்க.

இத்தகைய பாடல்களைப் பயிலும்போது, படிப்போர் மனம், அவர் காலத்திய உலகம், நடை உடை பாவனைகளில் ஈடுபட்டிருக்குமேயானால், அப் பாடலுலகிற் புகுந்து முழு இன்பத்தை அடைய முடியாதென்பது ஒருதலை. காவியம் என்பதே ஒரு தனி உலகாக, ஏனைப் புறவுலகின் துணை வேண்டப்

படாத நிலையில் இருப்பதாகலின், அதன்கட் புக விரும்புவோர் மனத்தைத் தூய்மைப்படுத்தி அக்காவிய உலகிற் புகினன்றி அதனை அனுபவித்தல் இயலாதாம்.

பாடல்களுக்குரிய மேலே குறிக்கப்பட்ட தன்மையுடைய பாடல்கள் எதுவாயினுஞ் சரி, அவை பெருமை பெறுவது எதனால் என்று ஆராயப் புகின், அது சற்று இயலாத காரியமேயாம். உதாரணமாக, 'அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவின்' (112)என்ற புறப்பாட்டை நோக்குவோமாயின், அதன்கண் உள்ள சுருங்கக் கூறி விளங்கவைக்கின்ற அழகும், தந்தையை இழந்து வருந்தும் மங்கையர் துயராம் அவலச் சுவையும், 'வென்றெறி முரசின் வேந்தர்' என்ற வஞ்சப் புகழ்ச்சியும் படிப்பாரது மனத்திற்பட்டு உருக்காமற்போகா: ஆனால், மேலே கூறிய பொருள், பாடலின் எப் பகுதியில் உள்ளது? சொற்களோ யாரும் அறிந்த மிக எளிய சொற்கள். கூறப்பட்ட செயலோ யாவரும் அறிந்ததே. பெரிய கதையோ, காப்பியப் பொருளோ ஒன்றும் ஆண்டில்லை. அவ்வாறாக, இத்தனை அழகும் யாண்டுத் தோன்றியது? அது பாடுவோரின் திறத்தில் தோன்றிற்று என்று கூறுவதே ஒருவகை விடையாம். அவ்வாறின்றி மேலே கூறிய ஒன்றால் இப் பாடல் சிறப்படைந்ததெனக் கொள்ளின், அது தவறாகும். பாடப் படுகின்ற பொருளால் பாடல் சிறப்படைகின்றது. எனக் கூறுவதும் பொருந்தாது. மேலே கூறிய பாடலே இதற்குச் சான்றாம். பெரிய பொருளை வைத்துங்கூடச் சாதாரண மனிதன் சாதாரணச் செய்யுளைத்தான் செய்வான். ஆனால், கவிஞன், பொருளெனப் பிறரால் மதிக்கப்படாத சிறிய பொருளை வைத்தும் யாவரும் வியக்கத்தக்க பாடலைப் பாட இயலும். அதனாலே இத்தகைய பாடல்களில், சொல்லமைப்போ, அன்றி

வேறெதுவோ சிறப்பைத் தருவதில்லை. உண்மையைக் கூறுமிடத்து, இப்பாடல்களில் மேலே கூறிய பாகுபாடு கள் செய்வதும் இயலாத காரியம். 'இடைப்படக் குறுகுறு நடந்து சிறுகை நீட்டி இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும் நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்' (188) என்ற அறிவுடை நம்பியின் பாடலைப் படிக்கும் பொழுது, உண்மையாகவே குழந்தை இல்லாதவரும் தமக்கு ஒரு குழந்தையைக் கற்பனை உலகிலேனும் உண்டாக்கிக்கொண்டு, அது மேலே கூறியபடி செய்வதாக நினைத்து மகிழ்வர். இவ்வெண்ணங்கள் படித்துச் செல்லும்போதே உண்டாகின்றனவேயன்றி, ஒவ்வொரு சொல்லையும் படித்துப் பிறகு கண்ணை மூடிக்கொண்டு அச் சொல்லின் பொருளைச் சிந்தித்து யாரும் உணருவ தில்லை. இத்தகைய பாடல்களில் ஒரு சொல்லை மாற்றி யமைத்தோ, அன்றி அடியைப் பெயர்த்தோ கூறிப் பார்க்கின் உண்மை விளங்கும். உண்மைப் பாடல்களை நன்கு பழகிய செவிகள் அம் மாற்றத்தை ஏற்றுக்கொள்வதில்லை. இசையில் 'அபசுரம்' என்பது தோன்றும் பொழுது என்ன மனோநிலை உண்டாகிற தோ, அதுவே ஈண்டும் உண்டாகக் காணலாம். சொற் களின் ஓசையும் பொருளமைதியும் ஒருங்கே ஈண்டுத் தோன்றுவதனால்தான் இவற்றைப் பாடல்கள் எனக் கூறுகிறோம். அக் கவிஞனையல்லாது வேறு யாரும் அங்ஙனம் அமைக்கவியலாது என்றும் கூறுகிறோம். அத்தகைய பாடல்களைப் படிக்கையில், கவிஞன் கூறவந்த பொருளைப் பிறர் உணருமாறு கூறிவிட்ட தான ஓர் உணர்ச்சியும், 'இதுவே நாம் தேடி அலைவது, அதனை ஈண்டுக் காண்கின்றோம்' என்றதோர் உணர்ச்சியும் தோன்றுகின்றன. காரிகை கற்றுக் கவி

பாடி, எதுகை மோனைக்கு இடருற்று, சதுரகராதியின் உதவியைத் தேடி அமைக்கப்பட்டனவும் செய்யப் பட்டனவுமான செய்யுட்கள் பிறரைக் கவராததன் காரணம் இதுவே.

கடவுளைக் கூறவந்த ஒரு கவிஞன், 'கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு' என்று கூறினான். அவனுக்குப் பிறகு 2000 ஆண்டுகள் கழிந்து படிக்கும் நாம், படித்த உடனே மனத்தில் தேடியதைக் கண்ட மகிழ்ச்சி அடைகின்றோம். மேலே கூறிய நான்கு சீர்களை எத்தனை சொற்களாலே வேண்டுமாயினும் கூறிப் பார்ப்போம். அப் பொருளமைதியை, அச் சொல்லமைதியின் பண்பை நாமடைதல் இயலாத காரியம். அங்கேதான் உண்மைப் பாடலின் பண்பை யும் அதனை இயற்றிய கவிஞனது மன அமைதியையும் காண்கின்றோம். நம்மை ஒத்த மனிதனாகப் பிறர்க்கு அவன் காணப்படினும், உண்மையில் நம்மைவிடப் பல படிகள் மேலே இருப்பவன் அவன் என்ற உண்மை விளங்குகிறது.

இத்தகைய சிறந்த பாடல்கள் அப் புலவன் மனத்தில் முன்னமேயே கருக்கொண்டிருந்த பெருங் கருத்தின் உருவம் எனக் கொள்வோமேயானால், அது பொருத்தமிலாக் கூற்றாய் முடியும். பாடல்களைப் பாடுவதன்முன் உருவகிக்க முடியாது பனிப்படலம் போன்று கவிஞன் மனத்துட் கிடக்கின்ற உணர்ச்சியே, பிறகு அவனது ஆக்குந் திறத்திற்கேற்ப ஒரு சொற் போர்வை போர்த்து வெளிவருகிறது. முன்னரே அவன் பாடற் பொருளை உணர்ந்திருப்பானாயின் அதனைப் பாடியே இரான். தன்னைச் சிறுவன் என நினைத்து எள்ளி, ஏழு அரசர்கள் தன் நாட்டை வளைத்தனர்

பாடி, எதுகை மோனைக்கு இடருற்று, சதுரகராதியின் உதவியைத் தேடி அமைக்கப்பட்டனவும் செய்யப் பட்டனவுமான செய்யுட்கள் பிறரைக் கவராததன் காரணம் இதுவே.

கடவுளைக் கூறவந்த ஒரு கவிஞன், 'கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு' என்று கூறினான். அவனுக்குப் பிறகு 2000 ஆண்டுகள் கழிந்து படிக்கும் நாம், படித்த உடனே மனத்தில் தேடியதைக் கண்ட மகிழ்ச்சி அடைகின்றோம். மேலே கூறிய நான்கு சீர்களை எத்தனை சொற்களாலே வேண்டுமாயினும் கூறிப் பார்ப்போம். அப் பொருளமைதியை, அச் சொல்லமைதியின் பண்பை நாமடைதல் இயலாத காரியம். அங்கேதான் உண்மைப் பாடலின் பண்பை யும் அதனை இயற்றிய கவிஞனது மன அமைதியையும் காண்கின்றோம். நம்மை ஒத்த மனிதனாகப் பிறர்க்கு அவன் காணப்படினும், உண்மையில் நம்மைவிடப் பல படிகள் மேலே இருப்பவன் அவன் என்ற உண்மை விளங்குகிறது.

இத்தகைய சிறந்த பாடல்கள் அப் புலவன் மனத்தில் முன்னமேயே கருக்கொண்டிருந்த பெருங் கருத்தின் உருவம் எனக் கொள்வோமேயானால், அது பொருத்தமிலாக் கூற்றாய் முடியும். பாடல்களைப் பாடுவதன்முன் உருவகிக்க முடியாது பனிப்படலம் போன்று கவிஞன் மனத்துட் கிடக்கின்ற உணர்ச்சியே, பிறகு அவனது ஆக்குந் திறத்திற்கேற்ப ஒரு சொற் போர்வை போர்த்து வெளிவருகிறது. முன்னரே அவன் பாடற் பொருளை உணர்ந்திருப்பானாயின் அதனைப் பாடியே இரான். தன்னைச் சிறுவன் என நினைத்து எள்ளி, ஏழு அரசர்கள் தன் நாட்டை வளைத்தனர்

என்ற செய்தியைக் கேட்ட அரசக் கவிஞன் மனத்தில் இன்னது பாடவேண்டும் என்ற எண்ணம் கருக் கொண்டிருக்க முடியாது. அவனை உணர்ச்சி ஆட் கொண்டு இருந்தது. ஓரிரண்டு சொல்லும் பொருளும் அவன் மனத்தில் தோன்றியிருத்தல் கூடும். அவ்வுணர்ச்சி சிறிது சிறிதாகச் சொல் வடிவங் கொண்டு வெளிவருகின்ற நிலையில்தான் பின்னர் வர வேண்டிய கருத்துகள் தோன்றும். ஆகவே, 'நகுதக்கனரே நாடு மீக்கூறுநர்' *(72)* என்று கூறிய பிறகே, அவர்கள் நகுதற்குரிய காரணமும், அவர்கள் கூறிய சொற்களும், அதற்குத் தான் அளிக்கும் விடையும், தான் இனி ஆற்றவேண்டிய செயலும் ஒன்றன்பின் ஒன்றாய்த் தோன்றுகின்றன. இத்தகைய பாடல்களைப் படித்தவுடன், இவை கவிஞன் உள்ளத்தில் பொள் ளெனப் பொங்கிய பாடல்கள் என்பதும் ஏனைய பாடல்களைப் போல முயற்சி செய்து இயற்றப் பட்டவை அல்ல என்பதும் தெற்றென விளங்கும். இதனை ஷெல்லி என்ற மேலை நாட்டுக் கவிஞர், 'Spontaneous outburst' என்றும், 'Unpremeditated art' என்றுங் கூறுவர். இதனையே Dr. Bradley, 'It is a creation and not a manufacture and they possess the magical effect which decoration cannot produce' என்று கூறுகிறார். எவ்வளவு அணிகளை வைத்தாலும் செய்யுள் செய்யுளே. யமகம், திரிபு முதலிய செய்யுட்களிடத்து இத்தகைப் பேரானந்தத்தைக் காணவியலாது. அதற்கு மாறாக ஆசிரியனது வன்மையை வியக்கின்றோம். அதனோடு நின்று விடுகிறோம். இப் பாடல்களைப் படிக்கையில் ஆசிரியனை மறக்கின்றோம். அப் பாடல்களின் எதிரே தலைகுனிந்து வணங்கி மகிழ்ந்து அதனை ஏற்றுக் கொள்கிறோம்.

இத்தகைய அருங்கருத்துகளைக்கூட வசனத்தில் கூறின், அவை இத்துணைப் பெருமை அடைய இயலாது. பாடல்கள் மட்டுமே பொங்கி எழும் கருத்து களைக் கொண்டு வருகின்றன. உணர்ச்சியைத் தட்டி எழுப்பி உணர்ச்சி வடிவாகவே வெளிவரும் தன்மை பாடல்களுக்கு மட்டுமே உண்டு. மனித மனம் எவ்வளவு உயரம் செல்ல முடியுமென்பதை அறிய வேண்டின், பாடல் வழியாகவே காண இயலும். பாடல்கள் எனப்படுபவை ஏனையோர் கண்டுங் காணாத பொருள்களைக் காணுமாறு செய்வதாம். எனவே, மனப்பண்பை மாற்றம் செய்தல், உணர்ச்சி யூட்டுதல், தளர்ச்சி யடைந்த மனத்திற்கு ஊக்கம் அளித்தல் முதலான தொழில்களைச் செய்வதும் பாடல்களின் இரண்டாவதான தொழில்களாம். இவற்றையெல்லாம் செய்வதால், பாடல்கள் வாழ்க் கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடி எனக் கூறுதல் மிகையாகாது. வாழ்க்கை எத்தகையதா யிருக்கவேண்டும் எனக் கூறும் பெரும் பாடல்கள் எல்லாம் பாடுவோனது மனத்திட்பத்தால் பெருமை யடைவனவேயாம்.

இதுகாறும் பொதுவாகப் பாடல்களைப்பற்றிய பண்புகளிற் சில கண்டோம். இனி, புறநானூற்றிற் காணப்பெறும் உண்மைகளிற் சிலவற்றைக் காண்போம். புறத்தைப்பற்றி முன்னர்ச் சில உண்மை கள் அறியப்பட்டுள்ளன. இவற்றிற் காணப்படும் பாடல்கள் எல்லாம் பாடல் வகையிற் சேர்ந்தன வேயாம். இவற்றைப் பாடியவர் பலர். பல ஊர்களைச் சேர்ந்தோர். ஒவ்வொருவரும் காவிய உள்ளம் படைத்தவராயினும் பல காலத்து வாழ்ந்தவராவர். இவருட் சிலரே ஒரு காலத்து வாழ்ந்தவர். இவர்கள்

பாடிய அளவாற் சிறியனவும் பெரியனவுமான இப் பாடல்கள் நாம் என்றுங் கண்டுங் காணாத பொருள் களையும் அவற்றின் தன்மைகளையும் எடுத்து விளக்கு வனவாகும். பாடலுண்மை (Poetic truth) என்று சொல்லப்படும் பண்பு இப் பாடல்களில் யாண்டும் மிளிரக் காணலாம். அதாவது, இயற்கையின் தன்மையையோ, அமைப்பையோ, தோற்றத்தையோ, அல்லது மனித மனத்தின் இயற்கையையோ எடுத்து விளக்க வருங்கால் அவற்றின் உண்மைத் தன்மைக்கு மாறுபடாதபடி புலவன் கூற்று இருத்தல் வேண்டு மென்பதாம். இது ஏன் சிறந்ததாகக் கருதப்படு கின்றதென ஆராயின் அதன் உண்மை விளங்கும். பாடல்கள் அடிப்படையில் வாழ்க்கையின் நிறைவு குறைவு கூறும் ஒரு கருவியாய் முடியும். பாடல்கள் பெருமையடைவதெல்லாம், வாழ்க்கையின் ஓயாத வினாவாகிய எவ்வாறு வாழவேண்டுமென்பதற்குத் தரப்படுகின்ற விடையைப் பொறுத்ததேயாம். அது புலவனுடைய அறிவு, ஆராய்ச்சி, அனுபவம், கருவில் திருவுடைய தன்மை (genius), விசால நோக்கம், மனப்பான்மை, மன ஆழம் முதலியவற்றைப் பொறுத் துள்ளது. ஆகவே, இவற்றால் நிரம்பப் பெற்றவனும் வாழ்க்கையின் சிக்கை அறுக்க முயல்பவனும் ஆகிய ஒருவன் பாடல்கள் இயற்ற முற்படுவானேயாயின், அவை பெருமையுடையனவாய்த் திகழும். மேலும், வாழ்க்கையின் வினா, உலகந் தோன்றிய காலந்தொட்டு இருந்துவருகிறது. இதுகாறும் அதற்கு முடிந்த ஒரு விடைகண்டார் யாருமிலர் என்றே துணிந்து கூறலாம். தீர்க்கதரிசிகளும் கவிகளும் அவரவர்கள் தன்மைக்கேற்ப இவ் வினாவின் ஒவ்வொரு பகுதிக்கே விடை தந்து போயினர். எனவே,

அவருள் சிறந்தவரை எவ்வாறு பொறுக்குவோம் என ஆராயின், அவர்கள் விடை எவ்வளவுக்கெவ்வளவு உண்மையின் பக்கத்தில் வருகிறதோ அவ்வளவுக் கவ்வளவு அவர்களது பெருமை விரியும். ஆகவே, கால வேற்றுமையால் இவர்கள் பெருமை உண்மையிற் குறைவதில்லை. அதற்கு மாறாக, அது என்றும் நின்று தனது பெருமையை எக் காலத்தும், எந் நாட்டிலும் உணர்த்திக்கொண்டே யிருக்கும். எனவே, அப்படிப் பட்ட சிறப்புடையன இப் புறப்பாடல்கள் என்னலாம்.

எனவே, பலர் இயற்றிய இவற்றை 'objective poetry' என்று மேலைநாட்டார் கூறும் தொகுதியில் ஒருவகையாகச் சேர்க்கலாம். இப் பாடல்கள் எல்லாம் ஆசிரியப் பாவால் ஆனவை. ஆசிரியப்பாவிற்குள்ள தனிச் சிறப்பென்னவெனின், தாளம் முதலிய கட்டுப்பாட்டிற்கு உள்ளடங்கி நடவாது மனிதனின் எண்ணம் எவ்வாறு விரைந்தெழுகின்றதோ அதன்வழி வருவதாகும். தன் மனத்தில் கருவுற்றிருக்கும் கருத்தை ஆசிரியன் வெளியிட முற்படுகையில் இசைக் கட்டுப் பாடும், தாளக் கட்டுப்பாடும், எதுகை மோனைக் கட்டுப்பாடும், இலக்கணக் கட்டுப்பாடும் அவை தடையின்றி வெளிவருவதற்குத் தடை செய்வனவாய் உள. ஆகவே, அவ்வகைக் கட்டுப்பாடுகள் மிகுதியும் இல்லாததும் பெரிதும் எண்ணம் செல்கின்றவழியே செல்வதுமான ஆசிரியப்பாவால் இப் பாடல்கள் அமைந்தது மிகுதியும் நோக்கத்தக்கது. ஒரோவழிச் சொல்லடுக்கு முதலியன காணப்படுமேயன்றி, யாண்டும் பொருளழகின் பொருட்டே சொற்கள் அமைந்திருப்பதைக் காணலாம். பிற்காலத்துத் தோன்றிய யமகம், திரிபு முதலிய பாடல்களில் சொல் லழகின் பொருட்டுப் பொருளமைதி இழக்கப்படு

கின்றதைக் காண்கிறோம். எனவே, இவையெல்லாம் இல்லாத செவ்விய ஆசிரியப்பா முறையில் திகழ் கின்றன புறப்பாடல்கள். மேலும், உணர்ச்சிப் பெருக்கும், கற்பனைப் பெருக்கும், விவகாரப் பெருக்கும் (narrative) ஆசிரியப்பாவிலேயே இயன்றனவாம். ஏற்ற இடத்தில் ஏற்ற சொல்லை உபயோகிப்பதால் உண்டாகின்ற நிறைவுத்தன்மை (Precision in poetry) பாடல்களில் மிகுதியும் வேண்டப்படுகிறது. இதை நன்கு நோக்குமிடத்து, இசையையும் தாளத்தையும் தனதுறுப்பாய்க்கொண்டு நடைபெறும் இசைப் பாடல்களில் இது மிகுதியும் இயலாத காரியம் என்பது நன்கு விளங்கும். உதாரணமாக, 'கெடுகசிந்தை கடிதிவள் துணிவே' (279) என்ற பாடலை நோக்குவோமாக. தன் தமையனையும் கணவனையும் அணித்தே இழந்தாளொரு தாய், மற்றோர் நாளும் செருப்பறை கேட்கின்றாள். தன் மகனை அழைத்துப் போருக்கு அனுப்புகிறாள். அவ்வடிகள் வருமாறு:

> **"இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி**
> **வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇப்**
> **பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி**
> **ஒருமக னல்ல(து) இல்லோள்**
> **செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே !"**

யாண்டும் எளிய சொற்களே காணப்படுகின்றன. எனினும் என்ன? ஒரு சொல்லை எடுத்துவிட்டுப் பிறி தொரு புதுச் சொற் புணர்த்துப் பார்ப்பின் உண்மை விளங்கும். புலவன் மனோதத்துவம் நன் குணர்ந்தவன். முன்னொரு நாள் தன் உயிரினுமினிய கணவனையும் இழந்த தாய்க்கல்லவா, மறுநாள் செருப்பறை கேட்பதன் மனோநிலை தெரியும். அதனை

நன்குணர்ந்த புலவன் 'இன்றும்' என்ற சொல்லில் வைத்த உம்மையால் தாயின் மனோநிலையைமட்டு மன்று அப் பாடலைப் பயில்வோர் மனோநிலையை யும் ஒருவாறு விளக்கிவிட்டான். இனி, அந் நிலைக்குப் பிறகு தாய் என்ன நினைத்தாள்? வீர மறக்குடி மகளாகலின் போரிடத்து விருப்பங் கொண்டாள். எனினும் தனது கைம்மையையும் ஒரே மைந்தன் குலவிளக்காக உள்ளானென்பதனையும் நினைத்தாள். உடனே தன்னையுமறியாது ஒரு மயக்கம், மருட்சி கொண்டாள். என்றாலும் என்ன! கடமையின் முன்பு எது தான் நின்று போராட முடியும்? ஆதலால், மைந்தனை அழைத்து இன்னது சொல்வதென்று அறியாது வேலைக் கையிற் கொடுத்தாள். மைந்தன் குறிப்பறிந்து செல்லப் புறப்பட்டான். அப்பொழுது தான் தனது கனவுலகிலிருந்து மீண்ட தாய், அவனது ஆடை புழுதி படிந்திருப்பதைக் கண்டாள். உடனே 'வெளிது விரித்து' உடுத்தினாள். உடனே தாயினது மனப்பான்மை ஒரு முத்தமிடுமாறு செய்திருக்கும். அதனை ஆசிரியர் கூறாமற் கூறுகிறார். முத்தமிட்ட நிலையில் அவனது குஞ்சி திருத்தப்படாத நிலையி லிருப்பதைக் கண்டாள்போலும். உடனே 'பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவினாள்.' பிறகும் தாழ்ப்பின் தன் மனத்தையே தான் நம்பாதவள் போலத் தன் கலக்கத் தையும் வெளிக்காட்டாது, 'செருமுகம் நோக்கிச் செல்க' எனக் கூறினாள். இவளது துணிவை மனக் கண்ணால் காணுகின்ற ஆசிரியனுக்கும்கூட இச்செயல் துணுக்கத்தை உண்டாக்குகிறது. தான் நேரே காணுவதுபோல் நினைந்து 'ஒரு மகனல்லதில்லோள்' என்ற நான்கு சொற்களாலும் தன் மனத்திற்றோன்றிய அவலச் சுவையைக் கொட்டிவிட்டான். இக்

கருத்தையும் இச் சொல்லோவியத்தையும் மனத்துட் கொண்டு பாடலை மறுபடியும் படிப்போமானால் உண்மை விளங்கும். ஓர் எழுத்தையேனும் சொல்லை யேனும் மாற்றவோ, எடுத்து வேறு போடவோ இயலாதென்பது தெற்றென விளங்கும். மேலும், கூறப்பட்ட செயல்கள் எல்லாம் மிக மிக விரைவில் நடைபெறுகின்றன. அதனை ஆசிரியன் இத்தகைய ஓசைநலமுடைய பாட்டானன்றிக் கலி முதலிய ஓசையால் பாட இயலாது. பாடினாலும் இப்பயனை அது விளைக்காது என்பது திண்ணம். இதனைத்தான் அதன்கண் நிறைவுத் தன்மை என வியக்கின்றோம். இதனை ஆசிரியர் தொல்காப்பியனார் 'நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும், மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக் குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்' என்ற செய்யுளியற் சூத்திரப் பகுதியால் விளக்கினார். முதுமொழி என்ற பகுதிக்கே மேற்குறித்த இலக்கணஞ் சாலும் எனக் கொள்ள வேண்டுவதின்று.

உலகிடைத் தோன்றிய எல்லாப் பொருள்களை யும் நடைபெறும் எல்லாச் செயல்களையும் யாவரும் காண்கிறோம். ஆனால், காணுவோனது மனோ நிலைக்கு ஏற்ப அப் பொருள், செயல்களினது உண்மைக் கருத்துத் தோன்றும். பெரியோர்களது பாடல்களும் அத்தன்மையனவே. பயில்வோரது மனப்பண்பு, பரந்த நோக்கம் முதலியவற்றிற்கேற்ப அப் பாடல்களின் பொருளும் நயமும் விளங்குகின்றன. ஆகவே, சிறந்த கவிஞன் ஒரு செயலைக் காணுவா னாயின், ஏனையோர் காணும் காட்சிக்கும் அவன் காணும் காட்சிக்கும் வேற்றுமை உண்டு. பொருளின் உட்கருத்தைக் காணக்கூடிய வன்மை அவனிடம் உண்டு. காண்பதோடில்லை; தான் கண்ட பேருண்மை

களைப் பிறர் காணுமாறு காட்டும் அரிய ஆற்றலும் அவன் பாலுண்டு. உலகியலையும் மக்கள் வாழ்க்கையையும் நீண்டகாலம் ஒரு புலவன் காண்கின்றான். அதன்கண் உள்ள நிறைவுகுறைவு களையும் நன்கு ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வருகின்றான். தான் வந்த முடிபு இயற்கை வாழ்வோடு ஒத்ததாயிருத்தல் வேண்டுமென்பதே அவனது குறிக்கோள். ஏனைய மக்கள் எல்லாரும் அவனைப் போலவே வாழினும் வாழ்க்கையின் உட்கோளை உணரும் பெற்றி அவர்மாட்டு இல்லை. ஆனால், புலவனிடம் அவ்வன்மை நிரம்பியிருக்கின்றது. ஆதலால், தான் காணும் பேருண்மைகளைப் பிறருக்கு எடுத்துக்காட்ட முற்படுகின்றான். இன்று உலகம் போர் மயக்கத்தில் மூழ்கி உய்வழியின்றிச் சுழல்கிறது. மனித மனத்தின் இயல்பு மாறுகின்றவரை உலகிடைப் போர் நிற்கப்போவதில்லை எனப் பலருங் கூறக் கேட்கின்றோம். ஆனால், அம் மனமாற்றத்திற்குரிய வழியைக் கூறும் வீரர் ஒருவரை இதுகாறும் உலகம் காணவில்லை. இத்தகைய போர்களின் அடிப்படையான காரணம் என்ன? எக் காரணம் அறுபடின் அதன் காரியமாகிய இப் போர்கள் ஒழியும் என்ற வினாக்கள் யார்மாட்டும் நிகழாமல் இருப்ப தில்லை. சிலர் அஃது இன்றியமையாத ஓர் செயல் என்றுகூட எண்ணுவர். போர்நிறுத்தம் என்பது பகற்கனவு என்ற எண்ணமும் பலர்மாட்டுத் தோன்று கிறது. ‘இடைக்குன்றூர்கிழார்’ என்ற ஒரு புலவர் இத்தகைய எண்ணமுடையார். இஃது புறநானூற்றின்,

**ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்**
**புதுவ(து) அன்(று)இவ் வுலகத்(து) இயற்கை (76)**

என்ற அவரது பாடலால் தெரிகிறது. எனினும், இன்னுஞ் சிலர் அதனினும்மேம்பட்ட அறிவு முதிர்ச்சி யால் இவ்வுண்மைகளை ஆராய முற்பட்டனர். போர் முதலிய புற நிகழ்ச்சிகட்குக் காரணமாயிருப்பன மனத் துட்டோன்றுகிற வெறுப்பு முதலியவே யாமன்றோ! 'யான் பெரியன்' முதலிய ஆணவ விளைவால் போர் நிகழலாம். அன்றேல், தனக்குப் பிறர் தீங்கு செய்ததாக நினைப்பின், அதனை மறுப்பான் வேண்டிப் போர் நிகழலாம். இனிக் கீர்த்தி முதலியன பெறற்குக் காரணம் போரே எனக் கருதியும் போர் நிகழலாம். எனவே, மேற்கூறிய மூன்று காரணங்களில் பெரும் பாலும் பகைமையின் வித்துகளும் அதன் விளைவாகிய போரின் வித்துகளும் அடங்கக் காணலாம். இவ்வாறு உண்மை இருப்பதைத் தன் கூரிய அறிவால் கணியன் பூங்குன்றன் என்ற புலவர் பெருமான் காண்கின்றார். இங்ஙனம் உண்மை காணுவதே பிறர் அறிய இயலாத ஒரு சிறப்பாகும். ஆனால், புலவன் இவ்வுண்மைகளைக் கண்டதோடு நிற்கவில்லை. இவற்றை நீக்குதற்கும் வழி கண்டான். மூன்று அரிய உண்மைகளை எடுத்துக்காட்டி மேலே கூறிய மூன்று காரணங்களையும் அடித்துவிடுகின்றான். முதலாவதாக உள்ள காரணம் 'யான் பெரியன்' 'ஏனையோர் ஆளப்படவேண்டியவர்', 'என்மாட்டு அடங்கி நடத்தற்கு உரியர்' என்ற தவறான எண்ண மாகும். இதற்கு விடையாகப் புலவன் 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்று கூறினான். யாதும் நம்முடைய ஊர் என்ற எண்ணம் நன்கு மனத்தில் பதியுமானால், 'இடஞ் சிறிதென்னும் ஊக்கந் துரப்பப்' பிறநாட்டைக் கைப்பற்ற வேண்டும் என்னும் எண்ணம் அற்றுவிடும். மேலும், யாவரும் கேளிர் என நினைக்கும் ஒப்பற்ற

மனோநிலை கைவரப்பெறின், கேளிருள் போர் தொடுத்தல் கேவலமானது என்ற எண்ணமும் தோன்றிப் போர் இல்லாது செய்துவிடும். இனி, ஒருவேளை கேளிருள்ளும் போர் நிகழக் காண்டுமால். அஃதங்ஙனமாகப் புலவன் இவ்வாறு கூறியது பொருந்துமோவென ஐயுறுவார்க்குப் பின்னடியால் விடையிறுக்கின்றான். அக் கேளிருள் போர் நிகழக் காரணம் என்னையோவென நோக்கின், தனக்குத் தீங்கிழைத்தான் என அது முடியும், பிறன் தீங்கு செய்தான் என நினைத்தமாத்திரத்தானன்றிக் கேளிருள் இப் போர் நிகழ ஏதுவில்லை. ஆதலால், அங்ஙனம் தீங்கிழைத்தான் எனக் கருதும் ஒருவனை நோக்கிக் கவிஞர் பெருமான், 'தீதும் நன்றும் பிறர்தர வாரா, நோதலும் தணிதலும் அவற்றோரன்ன' என அமைதி கூறுகின்றார். ஆதலால், உலகில் ஒருவர்க் கொருவர் தீங்கிழைத்தலென்பது இயலாத காரியம் என்பதை உணர்ந்து, வரும் துன்பங்கள் தம் வினைப் பயனாலேயே வருகின்றன என்பதையு முணர்ந்து விடின், மேலே கூறிய காரணத்தால் போர் நிகழ்தலும் பகைமை மூளுதலும் இல்லையாம். இனி, உடற்கு நேரே ஒருவன் ஊறு செய்வானாயின் அதை விதியின் காரணமாக விளைந்தது என்றால் எங்ஙனம் பொருந்து மென வினவுவாரை நோக்கி, ஊறு விளைப்பினும் அது துன்பஞ் செய்வதாக நினைப்பதும் நினையாது விடுவதும் மனமாகலானும், அம் மனத்தாலதுவும் வினைப்பயன் என உணர்தல் கூடுமாயின் ஆண்டுப் பகைமை மூளுதலும் இல்லையாம், இனி, உடற்கு நேரே ஒருவன் ஊறு செய்வானாயின் அதை விதியின் காரணமாக விளைந்தது என்றால் எங்ஙனம் பொருந்து மென வினவுவாரை நோக்கி, ஊறு விளைப்பினும் அது

துன்பஞ் செய்வதாக நினைப்பதும் நினையாது விடுவதும் மனமாகலானும், அம் மனத்தாலதுவும் வினைப்பயன் என உணர்தல் கூடுமாயின் ஆண்டுப் பகைமை விளைதல் இல்லை எனக் கூறுவாராகி, 'நோதலுந் தணிதலும் அவற்றோரன்ன' எனக் கூறினார். மேலும், பிறர் விளைத்தாகக் கருதப்படும் துன்பம் சாக்காட்டையே பயப்பினும் அதுவும் தனது வினைப்பயனால் விளைந்ததென்று கொளல் வேண்டுமே தவிர வேறு நினைதல் ஆகாதென்றும், அச் சாவும் அஞ்சத்தக்கதன்றென்றுங் கூறுவார், 'சாதலும் புதுவதன்று' என்று கூறுவதோடு அப் பேராசிரியர் அமைந்தாரல்லர். வாழ்க்கையின்மாட்டுத் தோன்றிய அன்பாலேயே சாவில் அச்சம் உண்டாதல் இயற்கை. இப் பேருண்மையைப் பிறர் காணவியலாதிருக்கக் கவிஞர்பிரான் காணுகின்றார். ஆதலின், அதனைப் பரிகரிக்கவேண்டி 'வாழ்தல் இனிதென மகிழ்ந்தன்று மிலமே' எனவும் கூறினார். இனி, இவற்றை எல்லாம் நன்கு உணர்ந்தவழியும் வாழ்க்கையில் வெறுப்பு, கோபம் என்ற உணர்ச்சிகட்கு இடங்கொடுப்பின் பின்னர் மேலே கூறியவற்றைப் பாதுகாத்தல் இயலாது என்பது ஒருதலை. எத்துணை நீதிகளைக் கற்றிருப்பினும் இவை இரண்டு உணர்ச்சிகளையும் வளரவிடின், பிறகு பகைமையின் காரணங்களை ஆய்ந்து உண்மையில் பகைமை என்பது இருத்தற் கில்லை என உணரும் அறிவு தன் வேலையைச் செய்ய இயலாதாகலின், அவ்வுணர்வுகளையே அடியோடு கல்லவேண்டுமென்பார் 'முனிவின் இன்னாதென்றலு மிலமே' என்றுங் கூறினார்.

இனி, மூன்றாவதாகக் காணப்படுவது கீர்த்தி கருதிப் போர் விளைத்தலாம். கீர்த்தி என்பது

ஏனையோரால் தரப்படும் புகழே. ஆதலால், பிறர் ஒருவரைப் பற்றிய புகழ்ந்து பேசுமளவும் தனிப்பட்ட மனிதன் அப் புகழை அடையவே முயலுவான். ஆதலால், மக்களை நோக்கி ஆசிரியர் யாரையும் அவ்வாறு புகழவும் வியத்தலும் வேண்டா எனக் கூறுகின்றார். அவ்வாறு காரணம் இன்றிக் கூறின் அதனை உலகம் ஏற்றுக் கொள்ளாதாகலின், ஏற்ற காரணங்களைத் தருகின்றார்.

உலகியலை நன்கு உணர்ந்த பூங்குன்றனார் ஏனையோர் கண்டுங்காணாத ஒருண்மையைக் காணுகின்றார். உண்மையாகவே செயற்கருஞ் செய்கை செய்து உலகிற்குப் பெரும் பயன் விளைக்கின்றார், யாதொரு புகழையும் அடையாது போகவும், போலியான செயல்களைச் செய்து மக்களினத்தை ஏமாற்றுகின்றவர் பெரும்புகழ் அடைதலை வியப்போடு காண்கின்றார். அவ்வாறு இருப்பதன் காரணத்தை ஆராய்ந்து ஆசிரியர் ஒரு முடிவிற்கு வருகின்றார். அஃதாவது, உலகிடைப் புகழ்பெறுதலும் அதற்கு மறுதலையான இகழைப் பெறுதலும் அவரவர் வினைப்பயனேயாம் என்பதாம். ஆற்றிடைப்பட்ட புணை தன்வழிச் செல்லுமாற்றலின்றி ஆற்று நீர் செல்லும் வழியில் ஏகுதல்போல, உயிர்கள் தங்கள் விருப்பம்போல் புகழையும் இகழ்யும் அடைதல் இயலாதென்றும் வினைப்பயன் உள்ள வழியே அது இயலுமென்றும் கூறுவாராயினார். இம்மட்டோ? அருஞ் செயல்கள் செய்து தீருதலும் அவரவர் விருப்பம்போல் இயலுவதன்று என்றும் அதுவும் வினைவழி இயலுவதாகலின் அங்ஙனம் செயற்கருஞ் செயல் செய்தாரை வியத்தல் ஒருவகையில் தவறுடையதே என்ற முடிபிற்கும் வருவாராயினார்.

ஆதலால்தான்,

"..........................பேரி யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉ மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை இகழ்தல் அதனினு மிலமே !'

என்று ஆணித்தரமாக எடுத்தோதினார். இவ்வுண்மையை நன்கு மனத்திற் பதிப்பார்களாயின் உலகத்தார் வீணாக ஒருவரைப் புகழ்தலினின்றும் தவிர்வார்களாதலால், அதன் பயனாகப் புகழ் கருதிப் போரிடும் நொய்மையாளர்கள் போரிடுவதினின்றும் நீங்குவரென்றும் அறிகிறோம்.

எனவே, இதுகாறுங் கூறியவற்றான் சிறந்த புலவன் ஏனையோர் காணுகின்றதைவிட அப்பாற் காணக்கூடியவனென்பதும், அவ்வாறு தான் கண்ட பேருண்மைகளைப் பிறர் காணுமாறு காட்டும் வன்மையுடையவனென்பதும் பெற்றாம்.

உலகில் வழங்கும் எம் மொழியாயினும் சரியே, அச் சிறந்த மொழியின் இலக்கிய உலகில் இவ்வளவு அரிய சிறப்புப் பொருந்திய பாடல் ஒன்றைக் காணுவது அருமையினும் அருமையே. அத்தகைய சிறப்புத் தமிழ் மொழிக்கே உண்டு. அதினும் அதன் கண் வழங்கும் தலையாய இலக்கியங்களிற் சிறந்த புறநானூற்றுத் தொகுதியில் இப் பாடலிருப்பது முற்றிலும் சால்புடைத்தே.

மக்களினத்தின் அறியாமையைப் போக்கி அறிவு கொளுத்தல் முதலான தொழில்களைச் செய்ய வேண்டுவதும் பாடல்களின் வேலையே. மேலை நாட்டார் படிக்கும்போது உண்டாம் இன்பத்தையே

குறிக்கோளாகக் கொண்டிருக்கும் பாடல்களை ஒரு பகுதியாகவும், ஒழுக்கம் கற்பிக்கும் பாடல்களை மற்றொரு பகுதியாகவும் கொண்டனர். பின்னையதை 'Didatic Poetry' என்று கூறுவர். அத்தகைய வேறுபாடு தமிழ்ப் பாடல்களில் காணுவது இயலாத தொன்றாம். ஈண்டுக் காணப்படும் எல்லாப் பாடல்களும் இன்பமூட்டல், கற்பித்தல் என்ற இரு தொழில்களையும் செய்வனவாகும்.

இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகன் ஆயலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன்(று) அவன்கை வண்மையே (134)

என்ற பாடலின் பாடல் நயமெலாம் ஒருபுறமிருக்க, மக்களிற் பெரும்பாலோர் செய்யுந் தவற்றைப் புலவர் எவ்வளவு அழகாகக் கண்டிக்கின்றார் என்பது நோக்கற்பாலது. வண்மைத் தன்மையுடையார் மறுமைப் பயனாய கைம்மாற்றைக்கூட எதிர் பார்ப்பின் அது வண்மையாகாதென்ற பேருண்மையை எடுத்து விளக்கும் அழகு நோக்கற் பாலது. இனி, அரசனொருவனை நோக்கி, நால்வகைப் படையும் உடையராய

மண்கெழு தானை ஒண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே
எம்மால் வியக்கப் படூஉ மோரே
சீறூர் மன்ன ராயினு மெம்வயிற்
பாடறித் தொழுகும் பண்பி னோரே!

எனக் கூறுகின்றார். உண்மைக் கவிஞன் கேவலம் வயிற்றுப் பிழைப்புக்குப் பாடுகின்றவனலன் என்பது இதனாற் றெளியப்படுகின்றதன்றோ! இனி,

'செல்வத்துப் பயனே ஈதல், துய்ப்பே மெனினே தப்புந பலவே' என்றும் 'ஈயென, இரத்தல் இழிந்தன்று அதனெதிர் ஈயே னென்றல் அதனினுமிழிந் தன்று, கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்றதனெதிர் கொள்ளே னென்றல் அதனினு முயர்ந்தன்று' என்றும் வரும் பாடல்கள் தமிழ் நாட்டிற்கு மட்டுமல்ல; உலக முழுதுக்கும், எக்காலத்துக்கும், எவ்வகை நாகரிக முடைய மக்கட்டொகுதிக்கும் பயன்படும் நீதிகளாம்.

இலக்கியத்தில் பெரிதும் விரும்பப்படுவது சுவைகள். அச் சுவைகள்தாமும் எண்வகைப்படும். அவை யாவும் இப் பாடல் தொகுதியுள் யாண்டும் பரக்கக் காணலாம். விரிவஞ்சி ஒன்றிரண்டு காட்டிச் செல்கின்றாம். நகையாகிய சுவை பயக்கும் பல பாடல்களுள் 'நள்ளி வாழியோ... மாலை மருதம் பண்ணிக் காலைக்கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணிவரவெமர் மறந்தனர்' (149) என்ற மடமை காரணமாக நகை பிறந்த பாடலும் ஒன்று. அவலச் சுவையில் 'பூத்தலை... பாரி மகளிர்' (200) என வரும் பாடலும், 'அளிய தாமே சிறுவெள்ளாம்பல்.... அல்லிப் படூஉம் புல்லாயினவே' (248) என்ற பாடலும், இன்னும் (63) போன்ற பாடலும் காணத்தக்கன. இளிவரல் என்ற சுவைக்கு 'தொடித் தலை விழுத்தண்டூன்றி' (243) என்ற பாடலும், மருட்கை என்ற சுவைக்கு 'நினைக்குங்காலை மருட்கை யுடைத்தே' (217) என்ற ஒப்பற்ற பாடலும் உதாரணங் களாம். அச்சமாகிய சுவை 'களரி பரந்து...... பகலுங் கூவுங் கூகையொடு, பிறழ்பல் ஈம விளக்கிற் பேய்மகளி ரொடு, அஞ்சுவந்தன்றிம் மஞ்சுபடு முதுகாடு' (356) என்பது போன்ற பாடல்களாலும், பெருமிதம் என்ற உயர்ந்த சுவை 'இரவலர் புரவலை நீயுமல்லை' (162) என்பது போன்ற பாடல்களாலும் விளக்கப்

படுகின்றன. இனி, வெகுளி என்ற சுவை 'வரிவயம் பொருத வயக்களிறு போல, இன்னும் மாறாது சினனே' (100) என்பது போன்ற பாடல்களிடத்தும் பரக்கக் காணலாம். உவகை என்ற சுவை 'ஆதல் நின்னகத்தடக்கிச் சாதல் நீங்க எமக் கீத்தனையே... நீலமணி மிடற்றொரு வன்போல, மன்னுக பெரும நீயே' (91) என்பது போன்ற பாடல்களிடத்துக் கிடைக் கின்றது.

இத்தனை சுவைக்கும் நிலைக்களனாயுள்ள இப் பாடற்றொகுதியில் இலக்கிய அழகுகள் இன்னும் எத்தனையோ உள. ஓர் இலக்கியம் அக்கால மக்களின் வாழ்க்கையை, வாழ்க்கையின் குறிக்கோளை, மக்கட் பண்பை எடுத்து விளக்கும் கண்ணாடியாயிருக்க வேண்டுமென்பது இலக்கிய ஆராய்ச்சியாளர் முடிபாம். அம் முறையில் கிறிஸ்துநாதர் தோன்று தற்குப் பன்னூறாண்டுகட்கு முன்னர் வடவேங்கடம் தென்குமரியாயிடை வாழ்ந்த மக்களின் மனோ நிலையை, இத் தமிழ் நாட்டில் பல்வேறிடங்களிற் றோன்றிய இப் புலவர் பெருமக்கள் நன்கு எடுத்துக் காட்டியுள்ளனர். அப் பலதிறப்பட்ட பாடல்களுள் இரண்டை ஈண்டு எடுத்து ஆராய்வோம். இவற்றுள் முதலாவது ஒருசாரார் சிறுபாலான மக்கள் தொகுதி யின் மனோ நிலை. அது உயர்ந்த நிலை என்பதைக் காட்ட வரவில்லை. அதன் மறுதலையான தாழ்ந்த மன நிலை யுள்ளாரின் படமது. இன்னார் பிறர் துன்பங் கண்டு அதனால் மகிழ்வும், அத் துன்பத்திற்கு ஒரு சிறிது தாங் காரணராயின் அதனால் பெருமிதமுங் கொள்வர். இதனைப் புலவன் ஏற்றுக்கொள்கிறான் எனக் கூறுதற்கில்லை. எனினும், தன்முன் காணும் மக்களுள் ஒரு கூட்டத்தாரின் பண்பைப் படம்

பிடித்துக் காட்டவேண்டிச் செய்த செய்யுள் இது எனக் கூறலாம்.

கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனைஅவர் நனந்தலை நல்லெயில்
புள்ளின மிமிழும் புகழ்சால் விளைவயல்
வெள்ளுளைக் கலிமான் கவிகுளம் புகளத்
தேர் வழங்கினை (15)

என்ற இப் பாடலால் மக்கட் பண்பின் இழிந்தோர் செய்கை வெளியர்கின்றது. இவ்வகை மக்கள் அன்றும் இன்றும் என்றும் உள்ளனர். இத்தகையோர் இருப்ப தனாலேயே சான்றோர் பெருமை தெற்றென விளங்கு கிறது. 'எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்' எனக் கூறும் சீரிய மரபும் நன்கு விளங்குகிறது.

இனி, பெரிதும் மேம்பட்ட மக்கட் கூட்டத்தா ரின் மனப் பண்பை வெளியிடும் பாட்டு ஒன்றை நோக்குவோம். மனப்பண்பு சிறக்கச் சிறக்க உயிர்த் தொகுதியின் விரிவும் அவ் விரிவில் காணப்படும் ஒற்றுமையும் நன்கு விளங்கும். கேவலம் விலங்கினங் களும், தம்மை ஒத்த உயிரும் இயல்பும் உடையன என நினைக்கும் ஒப்பற்ற மனோநிலையை இப் பாடலால் அறிகின்றோம். அதுவும் எழுத்து வாசனை அறியாத ஒரு வேட்டுவப் பெண் மனத்துட்டோன்றும் கற்பனைக் காவியத்தை ஈண்டுக் காண்கின்றோம். இப் பாடலின் கருத்து மிகவும் எளிமையானதே. ஒரு வேட்டுவப் பெண் குடிசை வாயிலில் தினை உலர்த்தி யுள்ளாள். அதனண்மையில் ஒரு கலைமான் பெடை யோடு விளையாடுகிறது. அவளது கணவனும் அதனருகே வேட்டையாடிகளைப்பால் மெய்ம்மறந்து

உறங்குகின்றான். இந் நிலையில் தினையைக் கோழி தின்கின்றது. இத் தினையைத் தவிர (இரவுக்கு) வேறு ஆகாரம் இல்லை. இச் சமயத்தில் கோழியை ஓட்ட வேண்டும். ஆனால், அவள் அதனைச் செய்யவில்லை. அதன் காரணத்தை ஆசிரியர் மொழியாலேயே காணு வோமாக.

> 'கைம்மான் வேட்டுவன் கனைதுயின் மடிந்தெனப்
> பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்
> தீர்தொழிற் றனிக்கலை திளைத்துவிளை யாட
> இன்புறு புணர்நிலை கண்ட மனையோள்
> கணவ னெழுதலு மஞ்சிக் கலையே
> பிணைவயிற் றீர்தலு மஞ்சி யாவதும்
> இல்வழங் காமையிற் கல்லென வொலித்து
> மானதட் பெய்த வுணங்குதினை வல்சி
> கானக் கோழியோ டிதல்கவர்ந் துண்டென' (320)

எனவே, பெண்மானும் ஆண்மானும் இன்பந் துய்த்தலினின்று தவிரும் என அஞ்சிய அவள் தினையைத் தின்னும் கானக் கோழியை வெருட்டாது விட்டு விட்டாள் என்று ஆசிரியர் கூறுகிறார். சற்று நின்று ஆராய்வோமாயின் செயற்கையில் மூழ்கி வாழும் நமக்கு இப் பாடல் எவ்வளவு அறிவு கொளுத்தும் என்பதும் அக்கால மக்களின் உயரிய மனப்பான்மை எந் நிலையடைந்திருந்த தென்பதும் தெற்றென விளங்கும். இதனைவிட உயர்ந்த மனப்பான்மையைக் குறிக்கோளாகவேனும் கொண்டிருந்தனர் எனப் பிறநாட்டு இலக்கியங்களில் நாம் காணுமாறிலது.

எனவே, இதுகாறுங் கூறியவற்றான் இலக்கியத் துக்குரிய பண்பும் பாடலுக்குரிய பண்பும் பரந்து மிளிரும் தன்மையுடையது புறநானூறு என்பது விளங்கும். பொய்யாய நாகரிகத்தே புக்கழுந்தி

நாடோறும் உய்வழியின்றி வருந்துந் தமிழர்க்கு என்றுங் கலங்கரை விளக்காய் நின்று உதவுவது புறநானூறு என்பதும் வெள்ளிடைமலை. இத்தகைய அருநூலைக் காட்சியளவிற் கண்டு மகிழாது, தமிழனெனத் தருக்கி வாழும் ஒவ்வொருவனும் இதனைத் தவறாது கற்றல் வேண்டும் என்றுங் கூறி, இதனோடு இச் சிறு கட்டுரையை முடித்துக்கொள்கின்றேன்.

# 16

## இன்றும் இனியும்

ஆசிரியத் தொழிலை விட்டுப் போய்விட்டேன்; ஒரு தினுசாக முற்றிலும் விடைபெற்றுக் கொண்டேன். என்றாலும் பூ.சா.கோ. கல்லூரித் தலைவர் என்னை விட்டபாடில்லை. இரண்டு ஆண்டுகளிலே எவ்வளவு மறக்க முடியும் என்பதற்குச் சான்றாக இருக்கின்றேன். எதனைக் கேட்டாலும் எனக்கு இப்பொழுது புதுமையாக இருக்கின்றது. அந்தச் சூழ்நிலையிலே எதற்காக இங்கு என்னை அழைத்து உங்கள் முன்னர் நாடகம் ஆடவிட்டார் உங்கள் கல்லூரி முதல்வர் என்பது விளங்கவில்லை. என்றாலும் என்மாட்டு அவர்கள் கொண்டிருக்கின்ற அன்பை நன்கு அறிவேனாதலால் அந்த அன்பிற்குக் கட்டுப்பட்டு இங்கே நிற்கின்றேனே தவிர வேறு ஒன்றுமில்லை. கல்லூரி ஆசிரியனாக இருக்கின்றவரையிலாவது அன்றாடம் கொஞ்சம் கொஞ்சம் படித்துக் கொண்டு என்னுடைய அறிவை மழுங்கவிடாமல் பார்த்துக் கொண்டிருந்த சந்தர்ப்பமுண்டு. இப்போது அதற்கு வாய்ப்பே இல்லை. எனவே, என்னுடைய விடைகள் அவ்வளவு பொருத்தமுடையனவாக, அனைவரும் — அனைவரும் என்பது முடியாத காரியம் — மிகப் பலரும் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருந்த

இருக்கின்ற ஒரு சூழ்நிலை இல்லை. எனவே, இது ஒருவனுடைய கருத்து என்ற அளவிலே மதிப்புக் கொடுப்பீர்களேயானால் அது போதுமானது. அப்படி ஏற்றுக்கொள்ள முடியாதவற்றை ஒதுக்கிவிட வேண்டா. ஏனென்றால், கல்லூரியிலிருக்கின்ற வரையில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள மாணவர்களுடைய மனோநிலையை, வளர்ச்சியை அறியக்கூடிய வாய்ப்பு இருந்தது. இன்று நான் இருக்கின்ற அலுவலில் அன்றாடம் தமிழ் நாட்டினுடைய வளர்ச்சியை ஓரளவு அறிய முடிகின்றது. எல்லாவகையான வளர்ச்சியையும் அறிய முடிகின்றது. குறுக்கு வளர்ச்சி - நெடுக்கு வளர்ச்சி - தவறான முறையிலே வளருகின்ற புற்று நோய் வளர்ச்சி என்றிருக்கின்றதே - கட்டி வளர்ச்சி, அதைக்கூட அறிந்துகொள்ளக்கூடிய ஒரு சூழ்நிலையில் இருக்கின்றேன். இனி, உங்கள் கேள்விகளைத் தொடங்கலாம்.

**வினா:** வளர்ச்சி என்பதற்குத் தாங்கள் கொள்ளும் பொருள் என்ன? அந்தக் கொள்கைப்படி நோக்கினால், தமிழ்மொழியும் தமிழினமும் தற்காலத்தில் பெற்றுள்ள நிலை என்ன? எதிர்காலத்தில் பெறக்கூடிய நிலை எத்தகையது?

**விடை:** "வளர்ச்சி என்பதற்குத் தாங்கள் கொள்ளும் பொருள் என்ன?" நல்ல கேள்விதான். நீங்கள் கேட்கின்ற வளர்ச்சி இருக்கிறதே அதனை இரு வகையாக நான் கொள்ளுகின்றேன். ஒன்று, பரந்து செல்கின்ற வளர்ச்சி; மற்றொன்று ஆழ்ந்து செல்கின்ற வளர்ச்சி. இந்த இரண்டு வளர்ச்சிகளும் ஒருசேர ஏற்பட்டால் அஃது உண்மையான பயனுடைய

வளர்ச்சி என்று கருதலாம். பல சமயங்களிலே ஒருபக்கமான வளர்ச்சி ஏற்படுகின்ற காரணத்தால் அது விரும்பத் தகாததாய், தீமை பயப்பதாயும் முடிந்து விடுகின்றது. அகல வளர்ச்சி தமிழிலே இன்று ஏற்பட்டுள்ளது என்பதற்கு எந்தவிதமான தடையுமில்லை. ஆனால், ஆழ வளர்ச்சி ஏற்பட்டதா என்பது இலக்கியம் கற்கின்றவர்கள் சந்தேகிக்கக்கூடிய ஒன்று. 16, 17 ஆண்டுகள் இலக்கிய வரலாற்றைக் கற்பித்த ஒரு காரணத்தால் என்னையுமறியாமல் என்னுள் சில சந்தேகங்கள் புகுந்துள்ளன. அவற்றிற்கு இதுவரையிலே என் மனம் தக்கமுறையில் விடை காணவில்லை. தமிழில் அகன்ற வளர்ச்சி நிறைய ஏற்பட்டுள்ளது என்பதிலே ஐயப்பாடு இல்லை. 2000 ஆண்டுகளுக்கு முன் இருந்த என் மூதாதையரைவிட இன்று என்னுடைய அறிவு பரந்து விரிந்து அகன்று சென்றிருப்பதை நன்றாக அறிகின்றேன். எந்தத் துறையிலே எடுத்துக்கொண்டாலும், அவர்களைக் காட்டிலும் அதிகமான அனுபவம் பரந்து உள்ளதை நன்றாக அறிவேன். எந்த ஒரு துறையிலேயும் அவர்களுடைய அறிவு ஆழ்ந்து சென்றதைப்போல ஆழ்ந்து சென்றுள்ளதா என்றால், இல்லையோ என்று ஐயுறுகின்றேன். முடிந்த முடிவாக நான் ஒன்று சொல்லவில்லை என்பதை மறுபடியும் உங்களுக்கு நினைவூட்டுகின்றேன். தனிப்பட்ட ஒருவனுடைய கருத்துகள் இவை; அவ்வளவுதான் அவற்றின் மதிப்பு. என்னைப் பொறுத்தமட்டிலே, எந்தத் துறையாக இருப்பினும் அங்கே அறிவு பரந்து விரிந்து சென்றதுபோல, ஆழ்ந்து சென்றுள்ளதா என்பது ஐயப்பாட்டிற்குரியதாக இருக்கின்றது. அதற்குரிய காரணங்கள் சில.

சங்ககால இலக்கியமாகட்டும் அதற்குப் பின்னர்த் தோன்றிய இடைக்கால இலக்கியங்களாகட்டும், அங்கே நீங்கள் காணுகின்ற அறிவின் ஆழம் — அல்லது அனுபவத்தின் ஆழம் — அல்லது அனுபவத்தின் தெளிவு — இவை பிற்கால இலக்கியங்களில் உள்ளனவா என்று ஆராய்ந்து பார்ப்பீர்களேயானால், கொஞ்சம் சந்தேகம் தட்டத்தான் செய்யும். பழைய இலக்கியங்களில் எந்த ஒரு புலவனும் எந்த ஒரு பொருளைக் காண்பதாக இருப்பினும் கண்ட பொருளினிடத்துத் தன்னுடைய மனத்தைச் செலுத்தி, அதன் பின்னே அறிவையும் செலுத்தி, பிறகு அந்தப் பொருளோடு இரண்டறக் கலந்து, அனுபவித்து, அந்த அனுபவத்திலிருந்து தான் தனியே பிரிந்து புறத்தே இருந்து கொண்டு, பொருளை நோக்கி, அனுபவத்தை வெளியிடுவதனைத்தான் காண்கின்றோம். இன்றைக்கு நம்முடைய வாழ்க்கைமுறை செல்லுகின்ற ஒரு சூழ்நிலையில், அதாவது, எல்லாவற்றிலும் அவசரம், எல்லாவற்றிலும் எண்ணிக்கை என்ற முறையிலே செல்கின்ற காரணத்தால், எதனையும் நின்று ஆழ்ந்து சிந்திக்கின்ற மனோநிலையோ சூழ்நிலையோ இல்லாமற் போய்விட்டது நமக்கு. இது இன்று நேற்றுத் தோன்றிய குறையன்று. 3 அல்லது 4 நூற்றாண்டுகளாகவே தமிழர்களைப் பொறுத்தமட்டில் மட்டும் அல்லாமல் உலகத்தில் இன்னும் நம்மோடு சேர்ந்த பலருக்கும் தோன்றியுள்ள குறை இது. பரந்து விரிந்து செல்லச் செல்ல நம்மையுமறியாமல் ஆழம் குறுகிக் கொண்டே வந்துவிட்ட ஒரு சூழ்நிலையில்தான் இன்று வளர்ச்சி இருக்கின்றது என்று கருதுகின்றேன்.

தமிழ்மொழியும் தமிழினமும் இக் காலத்திற் பெற்றுள்ள நிலை என்ன? அதை அன்றாடம் பார்த்துக்

கொண்டிருக்கின்றேன்! எத்தனை எத்தனை சூழ்நிலையில் நம்முடைய வளர்ச்சி இருக்கின்றது? வெறும் உணர்ச்சி வடிவில் இருந்த கவிதைகளைத் தவிர வேறு ஒன்றும் இல்லாதிருந்த சங்ககாலச் சூழ்நிலையிலே இருந்து, வானவெளிப் பயணத்தைப் பற்றித் தமிழில் நூல் ஆக்கித் தருகின்ற அளவிற்கு வளர்ச்சி அடைந்தோம் என்றால் தவறு ஒன்றுமில்லை. சங்ககாலப் பாடல்கள் அனைத்தையும் புரட்டிப் புரட்டிப் பார்த்தாலும் உணர்ச்சி உலகம் ஒன்றுக்கு அப்பால் செல்லக் காணோம். அந்த ஒரு சூழ்நிலையிலிருந்து இன்று பரந்து விரிந்து வளர்ந்து, எந்தக் கலையாக இருப்பினும் அவற்றையெல்லாம் நம்முடைய மொழியிலேயே சொல்லலாம் என்கிற அளவிற்கு நாம் வளர்ச்சி அடைந்திருக்கிறோமென்றால், இதனை வளர்ச்சி என்று சொல்லாமல் வேறு எதனைத்தான் வளர்ச்சி என்று சொல்லப் போகின்றோம்? நிச்சயமாக இது நம்முடைய மொழி பெற்ற வளர்ச்சிதான். அப்படிச் சொல்லும்போது நாம் பெற்ற வளர்ச்சியும் உள்ளே இருக்கின்றது என்பதை மறந்துவிட வேண்டா. நம்மையல்லாமல் மொழி தனியே இயங்குவதில்லை; நாம் வளர்ச்சியடையாமல் மொழி மட்டும் வளர்ச்சியடையப் போவதில்லை. எனவே, மொழி வளர்ந்தது என்று கூறினால் ஓரளவு இனம் வளர்ந்ததாகவும், இனம் வளர்ந்தது என்று கூறினால் மொழி வளர்ந்ததாகவும், பெரும்பாலும் கொள்ள வேண்டும். ஏன் பெரும்பாலும் என்று சொல்கிறேனென்றால், சிறுபான்மை அதில் வேறுபாடு வரும். அதனைப் பின்னர்க் கேள்விகள் வருகின்ற பொழுது அதற்கு விடை கூறுகின்ற முறையில் சொல்கின்றேன். எனவே, உணர்ச்சி உலகிலிருந்து,

அற்புதமான கவிதைகளை வடித்த ஒரு சூழ்நிலையிலிருந்து இன்று ஏனைய நாட்டார்கள் அறிவுத் திறமையில் கண்ட பேருண்மைகளை எல்லாம் எடுத்து நம்முடைய மொழியிலே சொல்லக்கூடிய அளவிற்கு வளர்ச்சி பெற்றோமென்றால், அது சிறந்த வளர்ச்சி தான் என்பதில் ஐயப்பாடு இல்லை. ஆனால், அந்த வளர்ச்சி உண்மையான வளர்ச்சியா? இல்லை, போலி வளர்ச்சியா? என்பதைக் கொஞ்சம் காண வேண்டும். விஞ்ஞானம் படித்த உங்களுக்கு உண்மை ஆழமும் தோற்ற ஆழமும் (real depth and apparent depth) என்ற இரண்டும் நினைவுக்கு வரலாம் என்று நினைக்கின்றேன்; உண்மை ஆழம் ஒன்று; போலி ஆழம் ஒன்று. பல சமயங்களிலே போலியாக இருக்கின்ற இந்த வளர்ச்சி, உண்மை வளர்ச்சியைப் போல நம்முடைய மனத்திலே ஒரு கற்பனையைத் தோற்றுவித்து விடுமானால், கொஞ்சம் அஞ்சத் தகுந்ததாக முடிந்து விடும் அது.

20 நூற்றாண்டுகளாக வளர்ந்துகொண்டு வருகின்ற நம்முடைய தமிழ்மொழி, அன்று உணர்ச்சி ஒன்றை மட்டும் வெளியிடக்கூடிய தகுதி உடையதாக இருந்தது. அறிவுலகத்தில் உள்ள எதனையும் வெளியிடக்கூடிய சூழ்நிலை தமிழ்மொழிக்கு இருந்ததாகத் தெரியவில்லை. எங்கோ ஒன்றிரண்டு பாட்டில் விஞ்ஞானம் பேசியிருக்கலாம். புறநானூற்றிலே, "மண் திணிந்த நிலனும், நிலனேந்திய விசும்பும், விசும்பு தைவரு வளியும், வளித்தலைஇய தீயும், தீ முரணிய நீரும்" என்ற பாடலில், இன்றைக்கு மேல்நாட்டு விஞ்ஞானிகள் இதுதான் என்று முடிவு செய்ய முடியாத ஈத்தரைப்பற்றி எடுத்து மிக அழகாகப் பேசுகின்றான் புறநானூற்றுப் புலவன். "நிலன் ஏந்திய

விசும்பு" என்று சொன்னான். எல்லாக் கோளங்களும் அந்த வானவெளி மண்டலத்திலே மிதந்து கொண்டிருக்கின்றன என்று இன்றைய விஞ்ஞானி பேசுகின்ற பேச்சை, அன்று இரண்டு சொற்களில் பாட்டிலே பாடிவிட்டுப் போகின்றான் முரஞ்சியூர் முடிநாகராயன். "மண் திணிந்த நிலன்" என்று செறிவைப் பற்றிப் (density) பேசுகின்றான். திணிவு என்ற சொல்லைத்தான் இன்று பயன்படுத்துகின்றோம். விசும்பு தைவரு வளியும் என்று கூறும்போது காற்று மண்டலம் பூமியைச் சுற்றி ஓரளவு தூரம் நிறைந்திருப்பதையும் பூமி சுற்றும்பொழுது இக் காற்று மண்டலம் பூமியைத் தடவிக் கொண்டிருத்தலையும் கூறுகின்றான் கவிஞன். இத்தனை விஞ்ஞானமும் தமிழன் பேசியதுதான்; நான் ஒன்றும் புதுமையாகச் சொல்லவில்லை.

> மண்திணிந்த நிலனும்
> நிலனேந்திய விசும்பும்
> விசும்புதைவரு வளியும்
> வளித்தலைஇய தீயும்
> தீமுரணிய நீரும் (புறம் – 2)

என்று விஞ்ஞானக் கருத்தைப் பாடியதுபோல ஒன்றிரண்டு பாடல்கள் இருக்கலாம். ஆனால், பெரும் பான்மையான பாடல்கள் அறிவுலகத்தை விட்டு உணர்வுலகில் நின்று பாடிய பாடல்கள்தாம்.

அப்படி இருந்த மொழி இன்று இவ்வளவையும் வாங்கிக்கொள்ளக்கூடிய அளவிற்கு வளர்ச்சி பெற்று விட்டது. இதைவிட வேறு வளர்ச்சி தேவையா என்று கேட்கலாம். என்னைப் பொறுத்தமட்டில் ஒரு சிறிய சந்தேகம். உண்மைதான்; வளர்ச்சி என்று ஒப்புக்

கொள்கிறேன். ஆனால், இந்த வளர்ச்சி பரந்து விரிந்திருப்பதைப் போல ஆழ்ந்து அகன்று செல்லுமே யானால் மகிழ்ச்சி அடைவேன். அந்தப் பரந்து விரிந்து இருக்கின்ற சூழ்நிலையில் மட்டும் நின்றுவிடுமானால் ஏனைய மொழிகளுக்கு ஏற்பட்ட நிலை என் தமிழ் மொழிக்கும் ஏற்பட்டுவிடுமோ என்று அஞ்சுகிறேன். இன்று விஞ்ஞான உலகத்தை இலத்தீன் வார்த்தை களும் கிரேக்க வார்த்தைகளும் தாம் நிரப்பிக் கொண்டிருக்கின்றன. இல்லை என்று சொல்வதற் கில்லை. பெரும்பாலான கலைச்சொற்களும் இலத்தீன், கிரேக்க மொழிகளிலிருந்து எடுக்கப்பட்டவைதாம். என்றாலும் என்ன? அந்த மொழிகள் இன்று எங்கே? உலகத்தை எல்லாம் ஆட்சி செய்ததாகிய அந்த கிரேக்க நாகரிகம், எங்கே? 'எல்லாப் பாதைகளும் ரோம் நகருக்கே செல்லும்' (All roads lead to Rome) என்ற பழமொழி செய்தார்களே அந்த ரோமானியர்கள் எங்கே? அந்த நாகரிகம் எங்கே? ஏன் அவையெல்லாம் பொய்யாக் கனவாய்ப் பழங்கதையாய்ப் போய் விட்டன? விஞ்ஞானச் சொற்களுக்கெல்லாம் தாயகமாக இருந்த இலத்தீன், கிரேக்க மொழிகள் இன்று ஏட்டளவிலே நின்று விட்டனவே! ஆகவே, இவற்றிற்கெல்லாம் தாயகமாக இருப்பதுடன் எல்லாச் சொற்களையும் பெற்றிருக்கின்ற ஒரு காரணத்தால் மட்டும் ஒன்றை வளர்ச்சி என்று சொல்லப் போகிறீர்களா?

இன்று பல பெரியோர்கள், "ஏனையா இவ்வளவு கவலை. எல்லாம் வடமொழியிலிருக்கிறது; அள்ளிக் கொள்ளுங்கள்" என்று சொல்லுகிறார்கள். அள்ளிக் கொள்ளலாமே! ஏன் அள்ளக்கொள்ள முன்வர வில்லை? அறுவை மருத்துவத்தில் கிராஃப்டிங்

(grafting) என்ற ஒன்றுண்டு. ஓர் இடத்திலுள்ள சதையை மற்றோர் இடத்தில் எடுத்து வைத்துத் தைக்கிறார்கள். ஆனால், செத்துப்போன உடம்பிலே யிருந்து எடுத்து வைக்க முடியாது சதையை. இறந்த உடம்பிலிருந்து சதையை எடுத்து உயிருள்ள உடம்பில் வைத்துத் தைப்பீர்களானால் 'கிராஃப்டிங்' (grafting) நடைபெறாது. வழக்கில் இல்லாத மொழிகளில் இருந்து கலைச் சொற்களைப் பெற்றுக்கொண்டால் இறந்த உடம்பிலிருந்து சதையை எடுத்து உயிருள்ள உடம்பில் வைத்துத் தைப்பது போலத்தான். ஆகவேதான், இந்த வளர்ச்சியைப் பற்றி ஐயமடைகிறேன். உணர்ச்சியை மட்டும் வெளியிடக்கூடிய தகுதி உடையவர்களாக இருந்த நாம், இன்று இவ்வளவு தூரம் வந்து விட்டோமே, இது வளர்ச்சி இல்லையா என்றால், ஆம் என்று கூற மனம் இடம் கொடுக்கவில்லை. பரந்தோம், விரிந்தோம் உண்மை! மணி ஒன்றுக்கு 4 மைல் வீதம் நடந்து கொண்டிருந்த நாம், இன்று ஜெட் விமானத்தில் 592 மைல் வேகத்தில் லண்டனில் காப்பி சாப்பிட்டு விட்டு, நியூயார்க்கிலே மத்தியானச் சாப்பாட்டிற்குப் போய்ச் சேர்ந்து விடுகிறோம்! வளர்ச்சிதான்! யாரும் இல்லை என்று சொல்வதற்கில்லை. இன்னும் போரில் ஈடுபடுகின்ற ஜெட் விமானங்கள், 1,800 மைல் வேகம் போகின்றன. வளர்ச்சிதான்; இல்லை என்று சொல்வதற்கில்லை. என்றாலும், இதுதான் வளர்ச்சி என்று நீங்கள் கருதினால் அடியேன் அந்த வளர்ச்சிக்குக் கையெழுத்திடத் தயாராயில்லை.

இது வளர்ச்சியாக இருக்கலாம். ஆனால், இத்தகைய வளர்ச்சி எங்கே கொண்டுபோய் மற்ற நாடுகளை விட்டது என்பதைப் படித்த காரணத்தால் அச்சம் தோன்றுகிறது. ஆனால், தமிழனைப் பொறுத்த

மட்டில் நல்ல வேளையாக இதை வளர்ச்சி என்று கருதவில்லை. மணிக்கு 4½ மைலிலிருந்து 4,000 மைல் வேகம் போனாலும் அதை வளர்ச்சி என்று சொல்ல வில்லை அவன். போகிறவன் மனோநிலையை வைத்து வளர்ச்சியைக் கணக்கிட்டான் தமிழன். 4½ மேல் வேகத்தில் போனாலும் 4,000 மைல் வேகத்தில் போனாலும், புவிஈர்ப்புச் சக்தியை வெல்வதற்காக 25,000 மைல் வேகத்தில் போனாலும் அதைப்பற்றிக் கவலை இல்லை. 25,000 மைல் வேகம் போனால் பூமியினுடைய ஈர்ப்புச் சக்தியை வென்றுவிடலாம். அப்படி வென்றுவிட்டதோடு தீர்ந்து போனதா? எங்குப் போனாலும் திரும்பி வரவேண்டுமென்று தானே ஆசைப்படுகிறோம். ஆகவே, தமிழன் இவற்றை எல்லாம் விட்டுவிட்டு மனம் என்ற ஒன்றை வைத்துத் தான் வளர்ச்சியைக் கணக்கிட்டான். அந்த மனம்! அது வளர்ந்ததா? மொழி வளர்ந்தது — சொல் வளர்ந்தது — விஞ்ஞானம் வளர்ந்தது — கலைச் சொற்கள் வளர்ந்தன — எல்லாம் வளர்ந்தன; ஆனால் நாம் மட்டும் வளரவில்லை! அதுதான் வருத்தத்திற்கு உரியது. அன்றைய சூழ்நிலையிலே இவை எல்லாம் இன்றுபோல் வளராவிட்டாலும் தமிழன் மனம் வளர்ந்திருந்தது.

அன்றைத் தமிழன் ஒரே துறையில்தான் முன்னேறினான். சங்க காலத்தில் எல்லாத் துறையிலும் வளர்ந்து ஆகாயத்தை முட்டினான் என்று நான் சொல்லவே இல்லை. அவன் பிடித்தது ஒரே ஓர் உலகம். அந்த உணர்வுலகம்; இரண்டு அங்குலத் தந்தத்தில் திருவனந்தபுரத்தில் அழகான வேலைப்பாடு களுடைய பொம்மை செய்கிறார்களே அதுபோல, மனிதனிடத்தே உள்ள பல்வேறு பண்புகளிலே

ஒன்றாகிய உணர்ச்சியை மட்டும் எடுத்துக்கொண்டு தந்தத்திலே சிற்பம் செய்வதுபோல் அதற்கு வடிவு கொடுத்தான் அன்றைத் தமிழன். அவனுடைய பத்துப் பாட்டும் எட்டுத்தொகையும் அதற்குச் சான்றுகள். அதை விட்டு அப்பால் போகவில்லை அவன். ஆழ்ந்து ஆழ்ந்து சென்று, முக்குளித்து முக்குளித்து, மனித உணர்ச்சியிலேயே இத்தனை வேறுபாடு தாம் உண்டு என்பதை எடுத்துக்காட்டுவதுபோலக் காட்டி விட்டான். இல்லாவிட்டால் அகத்திணையைப்பற்றி இத்தனை நூல்கள் பாடமுடியும் என்று நினைக்கிறீர்களா? எத்தனை ஆயிரக்கணக்கான பாட்டுகள்? ஆனால், ஒரு பாட்டைப்போல ஒரு பாட்டு இருப்பதே இல்லை. தற்காலத்திலே பத்திரிகையில் வரும் கதை, கட்டுரை, கவிதை ஆகியவற்றைப் படிக்கும் போதெல்லாம் எங்கேயோ படித்ததுபோல் தோன்றுகிறதே, ஏன்? பிறர் எழுதியவற்றை அங்கொன்றும் இங்கொன்றுமாக எடுத்துப் புதிய வடிவம் தந்து தம்முடையது என்கிறார்கள்.

சங்கப்பாடல்களில் இருப்பவர் போயும் போயும் தலைவனும் தலைவியுந்தாம்; இதற்கு அப்பால் ஒன்றும் இல்லை. என்றாலும், இந்தத் தலைவனையும் தலைவியையும் வைத்துக்கொண்டு ஆயிரக்கணக்கான பாடல்கள் பாடிவிட்டார்கள். 3 வரியில் ஒரு பாட்டு, 300 வரியிலும் ஒரு பாட்டு. மூன்று வரியில் பாடின புலவனே 9 வரியில் பாடினான்; 12 வரியில் பாடினான்; 22 வரியிலேயும் பாடி வைத்தான். அவனுடைய அனுபவத்தின் ஆழம் எத்தகையதோ நாம் அறியோம். திருப்பித் திருப்பி அதைத்தான் சொல்லுகின்றான்; ஆனாலும், சலிப்புத் தட்டுவதில்லை என்றால், அந்த அனுபவத்தை — புறத்திலே

நிறுத்தி வைத்துப் பார்க்கின்றானே அந்தக் காட்சியின் ஆழத்தைத்தான் வளர்ச்சி என்று நான் கருதுகிறேன். அந்த வளர்ச்சியிலே விஞ்ஞானம் இருக்கிறதா என்று கேட்டால், இல்லாமல் இருக்கலாம்; அது பற்றி நான் கவலைப்படவில்லை. மணிக்கு 25,000 மைல் வேகத்திலே விண்வெளிக் கப்பல் மாதிரி போனார்களா? போகாமலிருக்கலாம். ஆனாலும், அன்றைத் தமிழன் அந்த வாழ்விலே ஒரு குறிக்கோளைக் கண்டான்; ஓர் அமைதியைக் கண்டான்; அதிலே இன்பம் அடைந்தான். 4½ மைல் வேகத்திலே போகும்போதும் அதில் இன்பத்தைக் கண்டு அமைதியைக் கண்டு வாழ்ந்தான். இன்று 4,000 மைல் வேகத்திலே போகும்போதும் நாம் அமைதியைக் காணவில்லை; இன்பத்தைக் காணவில்லை! அதை நீங்கள் அறிவீர்கள். ஆகவே, வளர்ச்சி என்பது நெடுநெடு என்று வளர்வதன்று. எல்லா உறுப்புகளும் சமமான முறையிலே வன்மையைப் பெற்றிருப்பதைத் தான் முழு வளர்ச்சி என்று கூற வேண்டும்.

வளர்ச்சி என்பது எல்லாத் துறையிலேயும் இருக்க வேண்டும். வளர்ச்சி என்பது ஆழ்ந்தும் அகன்றும் இருக்க வேண்டும். அப்படி இல்லாத வளர்ச்சி ரோம, கிரேக்க, எகிப்திய, மெசப்படோமிய, சுமேரிய நாகரிக வளர்ச்சிதான். கிரேக்கர்கள் வளர்ந்தார்கள்; இல்லை என்று நீங்கள் சொல்ல முடியுமா? சாக்ரடிசும், அரிஸ்டாட்டிலும், பிளேட்டோவும், அரிஸ்டோபொனீசும் தோன்றிய ஒரு மொழியை வளர்ச்சி இல்லாதமொழி என்றா நினைக்கிறீர்கள்? வளர்ச்சி இல்லாத நாகரிகம் என்றா நினைக்கிறார்கள்? ஏன் இன்று அவை எல்லாம் போய்விட்டன? அதனைச் சற்று ஆய வேண்டும்.

அரிஸ்டாட்டிலும் பிளேட்டோவும் பெரிய காரியம் செய்தார்கள். இல்லை என்று சொல்வதற்கில்லை. ஆனால், அவர்கள் காலத்திய மக்கள் எப்படி வாழ்ந்தார்கள் தெரியுமா? அரிஸ்டாட்டில் பெரிய நூல் எழுதிக்கொண்டிருக்கையில், கிரேக்க மக்கள் என்ன செய்தார்கள்? சாதாரண மனிதனை, உங்களைப் போல, என்னைப்போல ஆசாமியைச் சிங்கத்தினிடத்திலே தூக்கிப்போட்டு, அது அவர்களைக் குதறிக் கொன்று தின்பதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். பிளேட்டோ எழுதிய 'ரிபப்ளிக்' என்ற நூலில் சமுதாயமும் ஆட்சியும் எவ்வாறு இருக்க வேண்டும் என்று கூறினாரோ அதைப்போலச் சாதாரண மக்கள் வாழ்வு அமையவில்லை. புருஷனைக் கொண்டுபோய்ச் சிங்கத்தினிடம் போட்டு மனைவியை "வேடிக்கை பார்" என்று சொல்லினர் கிரேக்கர்கள். இது சாதாரண மனிதனுடைய வாழ்க்கை. ஆகவே, பிளேட்டோவின் எழுத்துக்கும் அன்று வாழ்ந்த மக்கள் வாழ்வுக்கும் தொடர்பே இல்லாமற் போய்விட்டது. அதன் பயனாக அந்த நாகரிகம் ஒன்றுமில்லாமல் ஆகிவிட்டது என்பதை மறந்துவிடாதீர்கள்! அரிஸ்டாட்டிலையும் பிளேட்டோவையும் வைத்து வளர்ச்சிக் கணக்குப் போட்டால், அந்த நாகரிகம் மிக மிக உயர்ந்ததுதான். சாதாரண கிரேக்க மனிதனை வைத்து வளர்ச்சிக் கணக்குப் போட்டால், மிகமிகக் கீழே போய் நிற்கும்.

ஆனால், தமிழனைப் பொறுத்தமட்டிலே அவ்வளவு ஏற்றத்தாழ்வு நிலை எப்போதுமே இல்லை. சாதாரண மனிதனுடைய வாழ்க்கையை ஒட்டித்தான் தமிழ் இலக்கியம் வளர்ந்தது. ஆகையினாலேதான், பி.டி. சீனிவாச ஐயங்கார், 'தமிழ் இலக்கியத்தை

வைத்துக் கொண்டே தமிழன் வரலாற்றை எழுதி விடலாம்' என்றார். பழந்தமிழ் இலக்கியம் சாதாரண மனிதனின் வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாக இருந்தது. பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் தோன்றிய இந்தத் தமிழ்நாட்டில் அதே தமிழைப் பேசுபவர்கள் என்று சொல்லிக் கொள்வதற்கான ஒரு நாகரிகத்தில் நீங்களும் நானும் இன்றும் இருந்து கொண்டிருக்கிறோம். மற்ற நாடுகளில் இந்த வளர்ச்சி ஒருபுறம் வளர்ந்து கொண்டே போயிற்று; ஆனால், மற்ற ஒரு பக்கம் தேய்ந்து கொண்டே வந்தது. அவர்களுடைய நாட்டிலே அரிஸ்டாட்டிலும், பிளேட்டோவும், அரிஸ்டோபொனீசும் என்னென்னவோ எழுதினார்கள். சாதாரண மக்கள் அவர்கள் கட்டிய கோபுரங்களை எல்லாம் அழித்துக்கொண்டே வந்தார்கள்.

தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டிலே வளர்ச்சி அப்படியில்லை. தமிழன் எல்லா உறுப்புகளும் சேர்ந்து வளர வேண்டுமென்றும் அதுவே வளர்ச்சி என்றும் நினைத்தான். மூளை வளர்ந்ததனாலே 'மண்திணிந்த நிலனும் — நிலனேந்திய விசும்பும்' என்று பாட்டுப் பாடினான். இருதயம் வளர்ந்ததனாலே... ஒன்றா இரண்டா? ஆயிரக்கணக்கான பாட்டுகள் பாடினான். 'உண்டாலம்ம இவ்வுலகம் இந்திரர் அமிழ்தம் இயைவதெனினும் இனிதெனத் தமியர் உண்டலும் இலரே' (புறம் - 182) என்று பாடினவன் இவன். அறிவு, உணர்வு என்ற இரண்டையும் வளர்த்தான். ஆதலால், தமிழன் அன்று வாழ்ந்தான் இன்றும் வாழ்கிறான். 2000 வருஷமாக இரண்டையும் வளர்த்தான்; இரண்டிலே எது முக்கியம் என்று பார்த்தான் அவன். அறிவைவிட உணர்வு கொஞ்சம் பலமாக இருக்க வேண்டும்.

ஆகையினால்தான், பத்துப்பாட்டிலும் எட்டுத் தொகையிலும் அம்மாதிரி விஞ்ஞானம் போன்ற அறிவுத்துறைப் பாடல்கள் கொஞ்சம். மனம் விரிந்தால் தான் நாடு வாழ முடியும்; அறிவு விரிந்தால் தன்னலத்தில், அகங்காரத்தில்தான் முடியும். எனக்கு இது பயன்படுமா என்றுதான் அறிவு தொடங்கும். அறிவின் துணைகொண்டு அணுவை உடைத்தான் விஞ்ஞானி. அதைப் பிறன்தலையில் போட்டுத் தான் மட்டும் வாழவேண்டுமென்று கருதினான் அரசியல் வாதி. ஏன்? மனம் விரியாமல் அறிவுமட்டும் விரிந்த ஒரே காரணத்தால்தான். இந்த மாதிரி வளர்ச்சியைத் தமிழன் அன்று விரும்பவில்லை. இன்று விரும்பினால்...? தமிழ்மொழியும் தமிழினமும் தற்காலத்தில் பெற்றுள்ள நிலை இதுதான். வளர்ச்சி அடைந்துகொண்டு வருகின்றோம். ஆனால், அது ஒருபக்க வளர்ச்சியாக இருக்கிறது. அது என்ன ஆகுமோ தெரியாது.

இப்பொழுதாவது கொஞ்சம் பழமையை நினைத்துப் பார்ப்போமேயானால், உணர்வைக் கொஞ்சம் வளர்ப்போமானால், ஒருவாறு வாழ முடியும். தமிழ் நாட்டின்மேல் பலர் படையெடுத்தும் ஒன்றும் செய்ய முடியவில்லை. காரணம், நல்ல வலுவாக ஆழமாக ஆணிவேரும் சல்லிவேரும் ஓடியிருந்தது. இன்றைக்கு நாம் என்ன செய்கிறோம்? ஆணிவேரும் சல்லிவேரும் கண்ணுக்குத் தெரியாத தனால் அவற்றை மறந்துவிட்டோம். வேர்கள் வலு இல்லையானால் என்ன ஆகும்? பிறர் படையெடுப்பு என்ற காற்றடித்தால் அனைத்தும் ஒழிந்துவிடும். அம்மாதிரி வளர்ச்சி வேண்டா. பின்னர் எது வேண்டும்? வானவெளிப் பயணமும் இருக்கட்டும்;

பண்பாட்டு வளர்ச்சியும் ஏற்படட்டும். பிறருக்கும் வாழ உரிமை உண்டு; பிறருக்கும் நினைக்க உரிமை உண்டு. பிறருக்கும் பேச உரிமை உண்டு என்று ஏட்டிலே கண்ட அளவோடு நில்லாமல், வாழ்க்கை முறையிலே வாழ்ந்து காட்டினான் அன்றைய தமிழன். ஆனால், இன்றோ? விண்வெளியைப் பற்றி எழுத முனைந்துவிட்டோம். பிற துறையில் நம்முடைய வளர்ச்சி நின்றுவிட்டது. தமிழும் தமிழினமும் என்ன ஆகும் என்று என்னைக் கேட்டுப் புண்ணியமில்லை! இப்படியே வளர்ந்துகொண்டுபோனால், அது ஒருபக்க வளர்ச்சியாக ஆகிவிடலாம் என்று மட்டும் சொல்லி நிறுத்திக் கொள்கின்றேன்.

**வினா:** சங்ககாலம் தொடங்கி இன்றுவரையில் தமிழ் வளர்ந்துகொண்டே வருகிறதா? வளர்ச்சிக்கோ, வளர்ச்சியின்மைக்கோ காரணங்கள் யாவை?

**விடை:** நன்றாக இருக்கிறது இவ் வினா! எனக்கு நல்ல தண்டனை என்று நினைக்கிறேன். பதினாறு ஆண்டுகள் இலக்கிய வரலாற்றுப் பாடம் நடத்துகையில் இத்தகைய வினாக்களை மாணவர் கட்குத் தருவது வழக்கம். எவ்வாறுதான் இந்தக் கேள்விகள் உங்களுக்கு உதயமாயின என்றுதான் தெரியவில்லை. இன்றுவரையில் தமிழ் வளர்ந்து கொண்டே வந்திருக்கிறதா? வளர்ச்சிக்கோ வளர்ச்சி யின்மைக்கோ காரணங்கள் யாவை? என்று எலிப் பொறியில் அடைப்பதுபோல் என்னை அடைக் கிறீர்கள். எந்தப் பக்கமும் போக முடியவில்லையே! ஆனால், நான் முதலிலேயே கூறியபடி யான் கூறப் புகுபவை தனிப்பட்ட என்னுடைய கருத்துகள் தாமே ஒழிய, இதில் காழ்ப்போ விரோதமோ இல்லை.

தமிழ் என்று எடுத்துக் கொண்டீர்கள். ஆகவே, தமிழ் இன வளர்ச்சியை வேறாகப் பிரித்துவிட்டுத் தமிழ்மொழி வளர்ச்சியை மட்டும் எடுத்துக் கொள்கிறேன்; மொழி வளர்ச்சியோடு இன வளர்ச்சியும் பின்னிக் கிடக்கிறது என்று முதல் வினாவிற்கு விடை கூறுகையில் கூறினேன். ஆனால், இப்பொழுது வேண்டும் என்றே பிரித்து விடுகின்றேன். மொழி வளர்ச்சி என்று இங்கே எதனை எடுத்துக் கொள்கின்றேன் என்றால், இலக்கிய வளர்ச்சியை. இலக்கிய வளர்ச்சி என்று எடுத்துக்கொண்டால் நம் இலக்கியம் நன்றாக வளர்ச்சி அடைந்துள்ளது. வெறும் அனுபவ உலகமாக இருந்த சங்ககாலப் பாடல் உலகம் கொஞ்சம் விரிந்து சென்று, காப்பிய உலகிலே சிலப்பதிகாரமாக, மணிமேகலையாக, சிந்தாமணியாக, பெருங்கதையாக வளர்ந்து, பின்னர் 9, 12ஆம் நூற்றாண்டுகளில் கம்பனாக — பெரிய புராணமாக — விரிந்து நின்றது. கூடவே நிகண்டு முதலான சிறு நூல்களும் வளர்ந்தன. ஆனாலும், தொல்காப்பியத் துக்கப்பால் இலக்கணம் வளராமல் ஓரளவு நின்றுதான் போயிருந்தது. அப்படியே நீண்ட அந்த வளர்ச்சி 12–ஆம் நூற்றாண்டில் ஏறத்தாழ முற்றிற்று என்று சொல்லிவிடவேண்டும். அப்பொழுதுதான் தமிழன் விழித்துக்கொண்டான். எவ்வளவுதான் இந்த உணர்ச்சி உலகை வைத்துக் கோட்டையாகக் கட்டினாலும் அது மணலில் கட்டிய வீடு என்பதைக் கண்டுபிடித்தான். அதற்குரிய காரணங்கள் பல. அதை ஆராய இப்போது நேரமில்லை. தமிழ்நாட்டிலே தோன்றிய சில புதிய கிளர்ச்சிகள், உணர்ச்சி உலகிலே கட்டப்பட்ட இந்தக் கோட்டையைப் பொடிசூரணமாக்கிவிட்டன. இன்றைக்கும் கூட அதைப்

பார்க்கலாம். புள்ளி விவரங்களைப் பற்றி எல்லாரும் நன்றாக அறிவீர்கள். இந்தப் புள்ளி விவரங்களைக் கொடுத்துப் பேச ஆரம்பித்தால், சாதாரண மக்கள் வாயைப் பிளந்துகொண்டு கேட்டுக் கொண்டிருப்பார்கள். இது மனித இயல்பு.

13, 14-ஆம் நூற்றாண்டுகளிலே ஒரே அறிவுலகம் தான். முன்னே கூறிய புள்ளி விவரங்களையும் மெய்ம்மைகளையும் அடிப்படையாகக் கொண்ட சாத்திரக்காலம் என்று சொல்லுவார்கள். சைவ சித்தாந்த சாத்திரங்களும், வைணவ சாத்திரங்களும், ஜைன சாத்திரங்களும் தோன்றிய காலம் அது. ஆச்சரியமென்னவென்றால், இன்றைக்கு நம்முடைய விஞ்ஞானிகள் எப்படி ஒரு சாக்குக்கட்டியும் ஒரு கரும் பலகையும் வைத்துக்கொண்டு உலகத்தையே அதற்குள் கொண்டுவந்து நிறுத்திவிடுகிறார்களோ, அது மாதிரித் தமிழனும் அன்று நிறுத்தினான். இவர்கள் கையில் அகப்பட்டது சாக்குக்கட்டியும் கரும்பலகையும். இதே மாதிரி அன்றைய தமிழன் கையில் அகப்பட்ட இரண்டு பொருள்கள் உண்டு. வேட்டி கட்டி இருந்தான்; அதற்குப் பெயர் படம். கையிலே சட்டி வைத்திருந்தான் சோறு உண்பதற்கு; அதற்கு கடம் என்பது பெயர். கடம், படம், கடபடம். இவை மூன்றும் அவனிடம் உள்ளவை. இவற்றை வைத்துக்கொண்டு எத்தனை சாத்திரங்கள் எழுதினார்கள் என்று நினைக்கிறீர்கள்? கடவுள் கொடுத்த 2 கண்கள்தாம் உண்டு. அவை நன்றாக இருந்தன. இதை வைத்துக் கொண்டு ஆகாயத்தைப் பார்த்தான்; பூமியைப் பார்த்தான். கையிலே சட்டி இருந்தது, இடுப்பிலே ...ட்டி இருந்தது – அவ்வளவுதான். கடம், படம் என்ற ...க் கொண்டு எத்துணை நுணுக்கமான தருக்க

நூல்கள் எழுதினார்கள். தருக்கம் என்று நினைத்தாலே அச்சமாக இருக்கும். தருக்க சங்கிரகம், அன்னம் பட்டீயம் முதலான நூல்கள். எப்படி இவர்களுக்கு இப்படிப்பட்ட தருக்க அறிவு ஏற்பட்டது என்று நினைக்கவே முடியவில்லை. ஆங்கிலம் படிக்கவில்லை; கிரேக்க சாத்திரம் படிக்கவில்லை. கையிலிருக்கிற சட்டி, கட்டி இருக்கிற வேட்டி இவ்வளவுதான். வேட்டி எங்கிருந்து வந்தது? பஞ்சிலிருந்து. பஞ்சு எங்கிருந்து வந்தது? இந்தமுறையில் கணக்கைப் போட்டு அறிவுறுத்தி விட்டார்கள். இத்துணை வளர்ந்தும் மறுபடியும் தமிழன் பண்ணிய தவறு யாது? ஒருபக்க வளர்ச்சி தான். உணர்ச்சியையே வளர்த்தான் 12 நூற்றாண்டு வரை. பின்னர் அது தவறு என்று அறிவை மட்டுமே வளர்க்கத் தொடங்கிவிட்டான். சாத்திரமாக எழுதிக் குவித்து விட்டான். ஆக மொத்தம் ஒன்று இந்தப் பக்கத்து வளர்ச்சி அல்லது அந்தப் பக்கத்து வளர்ச்சியாகப் போயிற்று! நடுவு நிலைமையை விட்டு விட்டான். அறிவையும் கொஞ்சம் வளர்க்க வேண்டும், இருதயத்தையும் கொஞ்சம் வளர்க்க வேண்டும் என்ற அந்தச் சூழ்நிலை போய்விட்டதனால்தான், 13, 14–ஆம் நூற்றாண்டுகளின் சாத்திர வளர்ச்சி பிறகு கொஞ்ச காலத்தில் புதைந்து போயிற்று. பெருநூல்கள் என்று சொல்லக்கூடிய ஒன்றும் இல்லாமற் போயிற்று. அந்த முறையிலேதான் இன்று இருந்துகொண்டு வருகின்றோம். இன்றைக்கு எத்தனை பத்திரிகைகள்? எத்தனை நூல்கள்? பஞ்சமே கிடையாது. ஆனாலும், ஐந்து ஆண்டுகள் நிலைக்கக்கூடிய நூல்கள் எத்தனை என்று கணக்குப் போட்டால், இரண்டு கைவிரல் களுக்குள் எண்ணி விடலாம்.

ஏதோ ஓர் அடிப்படையான குறையின் காரணமாக இந்த வளர்ச்சி நிலைபெற்றதாக இருக்க முடியவில்லை. தெலுங்கர் நம்மைவிட மிகுதிதான்; இருந்தாலும் நம்மிடமுள்ள பத்திரிகைகளில் நாலில் ஒரு பங்குகூடக் கிடையாது அங்கு. நாம் ஆண்டொன்றில் வெளியிடுகின்ற புத்தகங்களில் 10-ல் 1 பங்கு கிடையாது அங்கு. போற்றத்தகுந்ததுதான். ஆனால், இது அளவால் பெரிதென்று கூறத்தக்கதே. இதில் மகிழ்ச்சியடைவதாயின் அடையுங்கள். வேண்டா என்று சொல்லவில்லை. இத்தகைய வளர்ச்சியை ஊளைச்சதை வளர்ச்சி என்று கூறலாம். இந்த வளர்ச்சியை எல்லாம் ஒரு வளர்ச்சி என்று நினைக்கும் ஒரு மனப்பான்மை என்பால் ஏற்பட வில்லை. அதனால்தான் அஞ்சுகின்றேன். தமிழ் வளர்ந்துகொண்டே வருகிறதா? நன்றாக வளர்கிறது, மொழி வளர்ச்சி சமுதாய வளர்ச்சியாக - இன வளர்ச்சியாக ஆகாது என்பதற்குத்தான் சென்ற வினாவிற்களித்த விடையில் ரோம, கிரேக்க உதாரணங்களைக் காட்டினேன். தமிழ் நன்றாக வளர்கிறது; இல்லை என்று சொல்வதற்கில்லை. தமிழிலே நூல் எழுதுவதற்குக் கூடக் கற்றுக் கொண்டோம். அற்புதமாக, எவனும் படித்துக் குறை சொல்ல முடியாத அளவுக்கு எழுதக் கற்றுக் கொண்டோம். இந்த வளர்ச்சியோடு நம்முடைய வளர்ச்சி என்ன ஆயிற்று என்று சேர்த்துப் பார்த்தால்தான் அது முழு வளர்ச்சி என்று சொல்ல முடியும். ஆகவே, வளர்ச்சியின்மைக்குக் காரணங்கள் யாவை என்று கேட்காதீர்கள். நான் எதைச் சொல்லுவது? இத்துணை நேரம் சொன்னதுதான்.

தமிழன் என்றோர் இனமுண்டு
தனியே அவற்கொரு குணமுண்டு

என்று பாடினார் நாமக்கல் கவிஞர். எந்த நேரத்திலே பாடினாரோ, 'ஏவவும் செய்கலான், தான் தேரான்' என்ற குறளுக்குப் பொருத்தமாக அமைந்து விட்டமையே தமிழனின் தனிக்குணமாகிவிட்டது. தானாக எண்ணிப் பார்க்கமாட்டான் தமிழன்; பிறர் சொன்னதையும் கேட்கமாட்டான். இன்னொரு சிறந்த பண்பாடும் உண்டு. 'இந்திரர் அமிழ்தம் இயைவ தெனினும் இனிதெனத் தமியர் உண்டலும் இலரே' (புறம் 182) என்று கூறிய புறநானூற்றுப் புலவன் கருத்தை அடுத்தவனைப் பொறுத்தமட்டில் செய்து காட்டுபவன் தமிழன் என்றாலும், நம்மவன் வாழப் பொறுக்காது; நம்மவரைத் தவிர பிறர் எல்லாம் வாழப் பொறுத்துக் கொள்ளலாம். அமெரிக்காவைப் பார். ஆட்டுக்குட்டியைப் பார் — என்று சொல்லிக் கொண்டிருப்போமே தவிர, நம்மவன் ஒருவன் அறிவுடையவனாகவோ, பண்பாடுடையவனாகவோ, வசதியுடையவனாகவோ ஆனால், 'இருக்கட்டும்; எனக்குத் தெரியாதா அவன் வளர்ந்த வளர்ச்சி' என்று ஒதுக்கி எள்ளிப் பேசும் ஒரு மனோநிலை.

இந்த நாட்டிலும் சமயச் சண்டை இருந்தது. யாருக்குள்? இராமானுஜரும், ஞானசம்பந்தரும், நம்மாழ்வாரும் அடித்துக்கொள்ளவில்லை. இராமானுஜர் பேரைச் சொல்லிக்கொண்டு, ஞானசம்பந்தர் பேரைச் சொல்லிக்கொண்டு சிலர் அடித்துக் கொண்டனர். இதை ஏன் பெரிதுபடுத்துகிறீர்கள் என்று கேட்கின்றேன். அதைச் சொல்லிச் சொல்லிக் காலம் ஓட்டிக்கொண்டு, 'எங்களுடைய சமயம் மிக மோசம்; எங்களுடைய நாடு மிக மோசம்' என்று

சொல்லித் திரிய வேண்டா. கொஞ்சம் திரும்பிப் பார்த்தீர்களானால், இதை கதைதான் மேனாடு களிலும் இருக்கிறது. அங்கே எப்படி இவற்றை மறந்துவிட்டு மேலே வளர்ந்தார்களோ, அதுபோல நீங்களும் மறந்துவிட்டு மேலே வளருங்கள் என்றுதான் சொல்லுகிறேன்.

இராமானுஜர் சமயச் சண்டை போட்டார் என்று எவனோ கதை எழுதி வைத்தான். அதைப் பெரிதுபடுத்துகிறீர்களே தவிர, கோபுரத்தின்மீது ஏறிக் கொண்டு அவர் அஷ்டாக்ஷர மந்திரத்தைச் சொன்னாரே. 'நான் நரகத்திற்குப் போனால் போகிறேன். இத்தனை பேர் மோட்சத்திற்குப் போக வேண்டும்' என்று கூறினாரே, அந்தப் பண்பாட்டை ஏன் மறந்து விடுகிறீர்கள்?

நம்மவர்கள் வாழ்கின்ற வாழ்க்கையைப் பார்த்தால் திருத்த முடியாத அளவுக்கு நம்முடைய பண்பாடு அழுகிவிட்டது என்று நினைய வேண்டியுளது. பாரதி, 'மணி வெளுக்கச் சாணையுண்டு — துணி வெளுக்க மண் உண்டு — ஆனால், மனம் வெளுக்க வழி இல்லையே' என்று பாடினானே — அப்படிப்பட்ட நிலைக்கு வந்துவிட்டோம். விரல் அழுகினால் நீக்கிவிட்டு வாழலாம்; ஆனால், இருதயம் அழுகினால் அதோ கதிதான்! மறந்துவிடாதீர்கள். பண்பாடு மட்டும் வளர்ந்து மொழி வளராவிட்டாலும் கவலையில்லை; மொழி பெரிதாக வளர்ந்து எல்லாக் கலைகளையும் உரைக்கின்ற அந்தச் சக்தி உங்கள் மொழிக்கு வந்தபிறகும் உங்களுக்குப் பண்பாட்டு வளர்ச்சி இல்லையானால் பயனில்லை. வளர்ச்சி யின்மைக்குக் காரணம் நம்முடைய உள்ளத்திலே

இருக்கிறது. எல்லாத் துறையிலேயும் வளர்ந்தோம். அந்த வளர்ச்சி பெரிதென்று இறுமாந்திருந்தோம். ஆனால், உள்ளத்திலே வளர்ச்சி இல்லாமற் போய்விட்ட காரணத்தினால்தான் இன்று பிறர் நம்மைக் கண்டு எள்ளி நகையாடுகின்ற நிலையில் இருக்கின்றோம்.

**வினா:** *சங்க காலத்திலும் அதற்கு முற்பட்ட காலத்திலும் நிலவிய வாழ்க்கை முறைகளை இன்று மீண்டும் நடைமுறைக்குக் கொண்டு வருதல் நலமாகும் என்று கருதலாம் எனின், செயல் திட்டம் எது? கருத இயலாது எனின் காரணங்கள் யாவை?*

**விடை:** நீங்கள் எவ்வெவற்றையோ நாகரிகம் என்றும் சிறந்த வாழ்க்கை முறை என்றும் எண்ணு கிறீர்கள் இன்றைக்கு. வேட்டைக்காரன் மனைவி சொல்வதாக ஒரு பாட்டுப் பாடினான் சங்கப் புலவன் ஒருவன். வேட்டைக்குப் போன அவள் கணவன் மீண்டும் குடிசைக்கு வந்தானாம். அப்படியே முழங்கையை மடித்து வைத்துக்கொண்டு வாயிலில் உறங்கினானாம். காற்று 'ஜிலு ஜிலு' என்று வருகிறது. வேட்டை ஆடுவதற்காக ஒரு பார்வை மிருகம் — பெண் மான் ஒன்றை முற்றத்தில் கட்டி வைத்திருக்கிறது. அந்தப் பெண்மானிடத்தில் ஓர் ஆண்மான் வந்து விளையாடுகிறது. அந்தப் பெண்மான் இவன் பிடித்து வளர்க்கும் பெண்மான்; ஆண்மான் இயல்பாகத் திரிகின்ற ஒரு விலங்கு. இந்த நிலையில் இரவு உணவுக்கான தினையைக் கோழி வந்து தின்றது. அந்தத் தலைவி பார்த்தாளாம். அவளோ கொலைத்தொழில் மிக்க வேட்டைக்காரன் மனைவி. நீங்கள் சொல்லுகிறபடி பார்த்தால்

நாகரிகமே இல்லாதவள். 'ஐயோ! தினையைக் கோழித் தின்றுவிட்டுப் போய்விட்டால் இரவு உணவுக்கு என்ன செய்வது' என்று கோழியை விரட்டவில்லையாம். கோழி தின்றுவிட்டுப் போகட்டும் என விட்டுவிட்டாளாம். என்ன நினைத்து விட்டாள் தெரியுமா? "ஐயோ பாவம்! இந்தப் பெண்மான் நம் வீட்டில் கட்டிப்போட்டு 10 ஆண்டுகளாக வளருகிறது. இன்றைக்கு ஓர் ஆண்மான் அதனுடன் வந்து விளையாடுகிறது. இப்பொழுது அந்தக் கோழியைச் 'சூ' என்று விரட்டினால், வீட்டிலேயே வளர்ந்த அந்தப் பெண்மான் நம் கூச்சலுக்கு அஞ்சாது; ஆனால், ஆண்மான், சத்தம் கேட்டால் பயந்து ஓடியே போய்விடும். அப்படி ஓடினால், பிணையின் இன்பத்துக்கு இடையூறு நேரும்" என்று நினைத்தாள்.

'கலையே பிணைவயின் தீர்தலும் அஞ்சி' என்று கவிஞன் கூறுகிறான். ஒரு பெண்மானின் மகிழ்ச்சியைப் பற்றி ஒரு வேட்டைக்காரன் மனைவி நினைந்து பார்க்கிறாள். பெண்மான் தன் மகிழ்ச்சியை இழந்துவிடக்கூடாது என்பதற்காகத் தலைவனை இரவுச் சாப்பாட்டிற்குப் பட்டினி போட்ட வேட்டைக்காரி வாழ்ந்த தமிழ்நாடு அது. இத்தகைய வாழ்க்கை முறையை இன்று மேற்கொள்ள முடியுமா என்பதே வினா. முடியாது என்பதே விடை! அந்த மனோநிலை — அந்த சீதோஷ்ண நிலை — உணவு நிலை எல்லாம் இருந்தால்தான் அந்த மாதிரி வாழ்க்கை வாழ முடியும். இன்றைக்குத் தொட்டதெல்லாம் அவசரம் அவசரம். சாதாரண விமானம் போதாது என்று ஜெட் விமானத்திலே போகின்ற காலத்திலே, 799 அடிகளையுடைய 'மதுரைக் காஞ்சி'யைப் பாடினால், கேட்டுக் கொண்டா இருப்பீர்கள் நீங்கள்?

இவ்வளவு அவசரத்திலே நம் நாகரிகம் முன்னேறிக் கொண்டிருக்கிறது. இதில் ஏதாவது அந்தப் பழைய வாழ்க்கை முறை செல்லுபடியாகுமா? ஆகவே, அந்த வாழ்க்கையைத் திருப்பிக் கொண்டுவர வேண்டுமென்றால், அவை எல்லாம் நடவாத காரியம். அந்த வாழ்க்கை முறை தேவையுமில்லை. ஆனால், அந்த மனநிலையை விட்டுவிடாதீர்கள். குறிஞ்சி நிலத்துக்காரனாகட்டும், முல்லை நிலத்துக்காரனாகட்டும், நெய்தல் நிலத்துக்காரனாகட்டும் அவனுக்கு என்று வெவ்வேறு வாழ்க்கை முறை வகுத்திருந்தாலும் அடிப்படையான ஒரு பொதுப் பண்பாட்டைப் பெற்றிருந்தான். இப் பண்பாடு, தமிழ்ப் பண்பாடு, அனைவர்க்கும் பொதுவாகும். கருதலாமெனில், செயல் திட்டம் என்னவென்கிறீர்கள். கருதத்தான் இல்லையே; அப்புறம் செயல் திட்டம் எங்கு? அந்த வாழ்க்கை முறை தேவை இல்லை. அந்த மனோநிலை மட்டும் தேவை.

அந்த வாழ்க்கை முறை வேண்டா; ஆனால், அந்தப் பண்பாடு தேவை — அதனுடைய சாரமாக இருந்ததே உயர்ந்த குறிக்கோள்கள் — 'அமிழ்தம் இயைவதெனினும் இனிதெனத் தமியர் உண்டலும் இலர்', 'எலி போன்றவர்களுடைய நட்பே வேண்டா. புலி போன்றவர்களுடைய கேண்மை நாளும் உளவாகட்டும், (புறம் 190) என்று பாடினானே, அந்தக் குறிக்கோள் வேண்டுமே தவிர, அந்த வாழ்க்கை முறை தேவை இல்லை. முற்பட்ட காலத்தில் நிலவிய வாழ்க்கை முறைகள் தேவை இல்லை. வாழ்க்கை அனுபவங்கள் — வாழ்க்கையின் குறிக்கோள்கள் — வாழ்க்கையில் கண்ட உண்மைகள் ஆகியவை நமக்கு

ஆணிவேராக இருக்க வேண்டும். இருந்தால் இந்த வாழ்க்கை பயன்படும்.

**வினா:** நாடக இலக்கியத் துறையில் 'மனோன் மணீய'த்திற்குத் தனிச் சிறப்பு ஏதேனும் உண்டா?

**விடை:** உண்டு. தமிழ் நாட்டிலே நாடகங்கள் என்று சொல்லக்கூடியவை எதுவும் கிடையாது. முத்தமிழ் என்று பேரே தவிர, இயல் தவிர வேறு எதுவும் இன்று இல்லை. ஆனால், மனோன்மணீயம் படிப்பதற்காக எழுதப்பட்ட நாடகம். ஷேக்ஸ்பியரின் 'லியர் அரசன்' என்ற நாடகம்போல என்று வைத்துக் கொள்ளுங்கள். அதை நடிக்க இயலாது. ஏனென்றால், அதன் அமைப்பு முறையே அவ்வாறாகும்.

மனோன்மணீயத்தில் வரும் பல பாத்திரங்கள் அனைத்தும் மனித இயல்பில் காணப்பெறும் குணப் பண்பை வடித்து எடுத்த பாத்திரங்களாகும். ஆகையினால், அதைப் படித்து இரசித்து அனுபவிக்க லாமே தவிர, நடிப்பதற்கு மிகமிகத் தொல்லை தரும். அதன் தனிச்சிறப்பு எது என்றால் இதுதான். முதன் முதலில் மேல்நாட்டு முறையில் தமிழ் நாட்டில் நாடகம் அமைக்க முடியும் என்பதை நிறுவினார் சுந்தரனார். ஒரு தோற்றம்; ஒரு கரு; ஒரு வளர்ச்சி; ஒரு முடிபு என்ற முறையில் நாடகம் அமைக்க முடியும் என்றுதானே தனியாக நின்று எடுத்துக் காட்டினார்.

பழங்காலத்தில் எந்த நாடகத்திற்குப் போனா லும், "ஜயஜய கோகுல பால' என்று பாடிக்கொண்டு தான் முக்கியப் பாத்திரம் நுழைவார். மேலும், அரிச்சந்திர நாடகத்தில் இறந்து கிடக்கும் லோகிதாசன் மறுபடியும் எழுந்து பாடுகின்ற அந்தச்

சூழ்நிலைதான் இருக்கும். இம்மாதிரி நாட்டில் இப்படி அழகான நாடக இலக்கணம் முற்றிலும் அமையப் பெற்ற ஒன்றை ஆக்கித் தர முடியும் என்று ஆக்கித் தந்த பெருமை அந்தத் தத்துவப் பேராசிரியருக்குரியது. தமிழ்நாடும் தமிழும் உள்ளவரையில் அந்தப் பெருமையை யாரும் எதுவும் செய்ய முடியாது.

**வினா:** எதிர்கால நாடகங்கள் எவ்வாறு அமைதல் வேண்டும்?

**விடை:** எதிர்கால நாடகங்கள் எவ்வாறு அமைதல் வேண்டும் என்றால் நான் எதைச் சொல்ல முடியும்? பெர்னாட்ஷாவே 'எனக்குப் பிறகு 25 ஆண்டுகள்தாம் என் நாடகங்களுக்கு வாழ்வு' என்று சொல்லிச் சென்றார். ஏனென்றால், அன்றாடப் பிரச்சினைகளை நாடகப் பொருளாகக் கொண்டார். அந்தப் பிரச்சினை மாறிப்போனவுடன் நாடகமே உயிரிழக்கும். 'என்று தணியும் இந்த சுதந்திர தாகம்' என்ற பாட்டை என்போன்றவர்கள் ஒரு காலத்தில் பாடிப் பாடித் தொண்டையை இழந்தனர். அன்று மக்களைத் தட்டி எழுப்பிய அதே பாடலை இன்றைக்குப் பாடினால் யாரும் கேட்க மாட்டார்கள். ஏன்? அதனுடைய தேவை தீர்ந்து விட்டது. கவிச் சக்கரவர்த்தி பாரதி இந்தப் பாடல் ஒன்றால்தானா வாழ்கிறார்? பாஞ்சாலி சபதமும், குயில் பாட்டும், கண்ணன் பாட்டும் இருக்கிறவரையில் பாரதி வாழ்வாரே தவிர, இதுபோன்ற பாடல்களை மட்டும் பாடியிருந்தால் அவை குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் எவ்வளவு தேவைப்பட்டிருப்பினும் காலத்தை வென்று நிற்க முடியாது.

அன்றாடப் பிரச்சினைகளை வைத்து இன்று பல நாடகம் எழுதுகிறோம். அந்த நாடகங்கள் அந்தப் பிரச்சினை சூடாக இருக்கிறவரையில் ஓர் அளவுக்குத் திருப்தியை அளிக்கும். அதற்கப்புறம் எவ்வளவோ நாடகங்கள் பார்க்கிறோம். நந்தனார் நாடகத்திலேகூட அரசியலை விவாதிக்கிறார்கள். ஏனென்றால், அப்போதுதான் நாம் கை தட்டுகிறோம். அவர்கள் மேல் குறை சொல்லிப் பயன் இல்லை. போகிற நாம் அல்லவா கை தட்டுகிறோம். அவன் கை தட்டுக்காக ஆடுகிறான் என்று சொல்லிக் கொண்டிருப்போம். கொஞ்சம் ஆழ்ந்து சிந்திப்பீர்களேயானால், மக்கள் பண்பாட்டினுடைய அடிப்படையை எடுத்துச் சொல்ல வந்ததுதான் நாடகம் என்பதை அறியலாம்.

நாடகம் வாழ்க்கையைப் பிரதிபலிக்கின்றது. எனில், வாழ்க்கையின் எந்தப் பகுதியை? என்றும் உள்ளதாய் — மாறாததாய் இருக்கின்ற ஒரு பகுதியைப் பிரதிபலித்தால் அதை நாம் பார்க்கும்பொழுது அதனுடன் தொடர்பு கொள்கிறோம். அதனால்தான் காப்பியத்திலே வருகின்ற பெரிய பாத்திரங்களைப் பார்க்கும்பொழுது நம்மையே சொல்லுவதைப் போல் இருக்கின்றது. நம்மிடமும் கொஞ்சங் கொஞ்சம் அந்தப் பண்பாடுகள் இருக்கின்றன. அந்தப் பண்பாட்டை நாடகாசிரியன் தொடும்பொழுது பொது நரம்பை மீட்டிவிடுகின்றான்; அதனால் நம்முள் ஓர் எதிரொலி ஏற்படுகிறது. அதை விட்டுவிட்டு அன்றைய அன்றைய பிரச்சினையைப் பேசத் தொடங்கினால் திருநெல் வேலிப் பிரச்சினை சென்னைக்குக் கிடையாது; சென்னைப் பிரச்சினை கோயம்புத்தூருக்குக் கிடையாது.

ஆகவே, நாடகம் எப்படி அமையவேண்டும் என்றால், மனித இனத்திலே காணப்படுகின்ற குறைபாடுகளை எடுத்து விளக்குவதாக இருக்க வேண்டும். ஷேக்ஸ்பியர் எழுதிய எல்லா நாடகங்களும் வாழ்ந்து விடுவதில்லை. ஒரு சில நாடகங்கள், மனிதப் பண்பாட்டை வைத்து எழுதிய நாடகங்கள் வாழ்கின்றன. நாம் அமைக்கின்ற நாடகங்கள் வாழ்க்கையிலே என்றுமுள்ள பிரச்சினைக்கு வழிகோலுவதாக அமையவேண்டும். அப்படி அமைந்தால் அந்த நாடகம் இன்றல்ல, நாளையல்ல என்றும் வாழும்.

மனோன்மணீயத்தைப் பற்றிப் பேசும்பொழுது அது நம்மையும் மீறி என்றைக்கும் இருக்கும் என்று கூறினேன். ஏன் தெரியுமா? நம் ஒவ்வொருவருள்ளும் ஒரு சிறு குடிலன் வாழ்கிறான். உண்டா இல்லையா நினைத்துப் பாருங்கள். உள்ளே கைவைத்துப் பாருங்கள். ஆக மொத்தம் அவர் குடிலன் என்ற பெயரில் நம்மிடமுள்ள வஞ்சகத்தை எடுத்து விரிவாக்குகிறார்; அவ்வளவுதானே ஒழிய, வேறு இல்லை.

**வினா:** எதிர்காலத் தமிழர் வாழ்வும் இலக்கியமும் எவ்வாறு அமைதல் வேண்டும்?

**விடை:** இப்போது சொன்னவைதாம். அது உண்மையான இலக்கியமாக இருக்க வேண்டுமானால், அது இறவா வரம் பெற்றதாக இருக்க வேண்டுமானால், மனிதப் பண்பாட்டின் அடிப்படையில் தோன்றுவதாக இருக்க வேண்டும். அன்றாடப் பிரச்சினையையோ, அரசியலையோமட்டும் பேசினால் அது வாழ்ந்துவிட முடியாது. அரசியல் மாறும்

பொழுது அதுவும் மாறிவிடும். ஆனால், மனிதப் பண்பை அடிப்படையாகக் கொண்ட இலக்கியங்கள் என்றும் வாழ்ந்துகொண்டேதான் இருக்கும்.

**வினா:** *பாரதிதாசன் கவிதைகள் பற்றித் தாங்கள் என்ன கருதுகிறீர்கள்? தற்காலக் கவிஞர்களையும் அவர்களின் கவிதைகளையும்பற்றித் தங்கள் கருத்து என்ன?*

**விடை:** இவ் வினாவே தேவை இல்லை. நம் காலத்தில் மூன்றே கவிஞர்கள்தாம் உளர். ஒருவர் பாரதி. அடுத்தவர் பாரதிதாசன். மூன்றாமவர் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை. இவர்கள் தவிர, எத்தனையோ பேர் கவிதை எழுதுகிறார்கள். இல்லை என்று சொல்வதற்கில்லை. அவருள் இருவர் போய் விட்டனர் (பாரதியும் கவிமணியும்) என்பது உங்களுக்கே தெரியும்.

பாரதிதாசனுடைய கவிதைகளில் முதன் மூன்று தொகுதி, குடும்ப விளக்கு என்ற அந்தக் கவிதை களுக்கு இணையாக அவராலேயே பின்னர் எழுத முடியவில்லை. என் மனத்தில் பட்டதை, உள்ளபடியே நான் நம்புவதைச் சொல்லுகிறேன். அதில் கருத்து வேறுபாடு ஆயிரம் இருக்கலாம். அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. அந்த முதல் கவிதைத் தொகுதியைப் போலவோ, குடும்ப விளக்கைப் போலவோ ஏனைய நூல்கள் அமையவில்லை, இனி, காவியத் துணுக்கு (epic fragment) என்று சொல்லுகிறோமே அந்த முறையில் 'பாண்டியன் பரிசு' அற்புதமாக அமைந்திருக்கிறது. இவை என்றைக்கும் நின்று நிலவக்கூடிய தகுதியுடையவை. அதே மாதிரி கவிமணி அவர்கள் நூற்றுக்கணக்கான கீர்த்தனைகள்

எழுதினார்கள்; அவ்வளவுதான். ஆனால், மலரும் மாலையையும் ஆசிய ஜோதியையும்போல அவராலேயே பின்னால் எழுத முடியவில்லை. எந்தப் பெரிய கவிஞனுக்கும் அது வழக்கம்தான். கம்பன் 10,000 பாட்டுப் பாடினான் என்றால், 10,000மும் மணியாக இருக்கும் என்றா நினைக்கிறீர்கள். அதில் ஓர் ஐயாயிரம் தேறும். சிறந்த பாடல்கள் பாதி என்றால், மீதிப் பாதியை ஒதுக்கிவிட வேண்டும் என்று கருத்தில்லை. சிறந்த பாடங்களுக்கு அடுத்த படியாக மற்றவை இருக்கும். அதேபோல பாரதிதாசன் கவிதைகளிலும் தொகுப்பு — குடும்ப விளக்கு — பாண்டியன் பரிசு என்ற அளவோடு சொல்லலாம். அவை சாகா வரம் பெற்ற கவிதைகள் என்று சொல்லி விட்டால் போதாதா? அதைவிட வேறு என்ன வேண்டும்? பாரதிதாசன் என்ற மனிதரை நம்பி அவை எதுவும் வாழவில்லை. பாரதிதாசனுக்குப் பிறகு பல ஆயிரம் ஆண்டுகள் கழிந்தும் அவை வாழமுடியும். அதே மாதிரி கவிமணி அவர்கள் இறந்துவிட்டதால் அந்த நூல்கள் அழிந்துவிடா. 'ஆசியஜோதியும்' 'மலரும் மாலையும்' எத்தனை ஆண்டுகளானாலும், தமிழன் என்று ஒருவன் இருக்கும்வரையில், அவனுக்குத் தமிழன்பு என்ற ஒன்று இருக்கும் வரையில் வாழும்.

தற்காலக் கவிஞர்களைப் பற்றியும் அவர்களின் கவிதைகளைப்பற்றியும் எதை எடுத்தாலும் உன் கருத்தென்ன? உன் கருத்தென்ன என்று கேட்பதைப் பார்த்தால் அச்சமாகத்தான் இருக்கிறது. தற்காலத்தில் கவிஞர்கள் இல்லாமலில்லை. பத்திரிகையில் பார்த்தீர் களானால் கவிதைகள் நிறைய வருகின்றன. எனக்குப் பிடித்தவர்கள் சிலர் என்று கூறுகிறேன் அவ்வளவு தான். அதனால் மற்றவர்கள் எல்லாம் கவிஞர்கள்

அல்லர் என்று நான் சொல்வதாக நினைத்துவிட வேண்டா. மார்க்கஸ் அரேலியஸ் வாழ்க்கையை எடுத்தீர்களானால், அவருடைய உபதேசத்தைக் கற்க மனம் வராது. ஆனால், யாரும் அதைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. மார்க்கஸ் அரேலியஸின் உபதேசத்தைப் படிக்கிறார்களே தவிர, அரேலியஸின் சொந்த வாழ்க்கையைப்பற்றி அவர்கள் கவலைப் படுவதே இல்லை. அதனாலேயே அந்தச் சமுதாயம் வளர்கிறது என்பதை மறந்துவிடாதீர்கள்.

இளங்கோவடிகள் துறவியாக இருந்தால் என்ன? குடும்பஸ்தராக இருந்தால் என்ன? நாம் என்ன பெண்ணா கொடுக்கப்போகிறோம் அவருக்கு? எதற்காக் அதுபற்றிக் கவலைப்பட வேண்டுமென்று கேட்கிறேன். புலவருடைய வாழ்க்கைமுறை — திரு வள்ளுவர் வேட்டி நெய்தாரா — துணியைக் கிழித்தாரா — இரண்டை நான்காகக் கிழித்தபோது கோபம் வந்ததா? இதைப் பற்றி அறிய நமக்கென்ன தேவை? குறள் தேவை — குறள் என்ற நூலிலிருந்து குறளாசிரியரையும், சிலம்பிலிருந்து அதன் ஆசிரியரை யும், அவர் பாடல்களிலிருந்து பாரதிதாசனையும் காண்டல் வேண்டும். எதை வைத்து ஒரு மனிதனை முடிவு செய்வது? பண்பாடு என்பதற்கும் பழக்க வழக்கங்களுக்கும் என்ன சம்பந்தம்? ஒரு கவிஞன் எதையாவது தின்று தொலைத்துவிட்டுப் போகிறான். பறப்பன, ஊர்வன, திரிவன இவற்றைத் தின்பதால் ஒருவனை மட்டமாக மதித்தல் தவறு. ஒரு சில மேனாட்டார் எல்லாவற்றையும் தின்றுவிடுகிறார்கள். பாம்பு, கன்றுக்குட்டி ஒன்றும் பாக்கி விடுவதில்லை. ஆனாலும், அவர்களிடத்திலே பார்த்த பண்பாட்டை மறக்கவே முடியவில்லை. அத்தகைய நிகழ்ச்சிகள்

என்னுடைய கண்ணைத் திறந்து விட்டன என்று கூறலாம். உணவினாலும் உடையினாலும் ஒருவனை எடை போடுவது பெருந் தவறு.

**வினா:** கல்வியின் எல்லா நிலைகளிலும் தமிழையே பயிற்சி மொழியாகக் கொள்வது நல்லதா? தமிழிலேயே எல்லாப் பாடங்களையும் கற்பிக்கலாமா? தனித்தமிழ்க் கலைச்சொற்கள் வேண்டுமா? வட மொழிக் கலைச்சொற்களை ஏற்பது பொருந்துமா? கலைச்சொல்லாக்கத்தில் எழுத்துப் பெயர்ப்பு (transliteration) நலம் பயக்குமா?

**விடை:** எல்லாப்பாடங்களையும் கற்பிக்கலாமா தமிழிலேயே? கற்பிக்கலாமெனின், கலைச் சொற் களைப் பற்றித் தாங்கள் என்ன கருதுகிறீர்கள்? எனக்கொரு சின்ன கருத்து வேறுபாடு. இந்தக் கலைச் சொற்களை மொழி பெயர்க்காமல் அப்படியே வைத்துக் கொண்டால் நலம் என்று நினைக்கிறவன் நான். அதாவது அப்படி அப்படியே அது இலத்தீன் மொழியாக இருந்தாலும் சரி, கிரேக்க மொழியாக இருந்தாலும் சரி, எந்த மொழியாக இருந்தாலும் சரி அப்படியே வைத்துக் கொள்வதிலே தவறு ஒன்று மில்லை. அப்படியானால் ஒரு பெரிய பாரம் குறையும். 'Hydrogen' ஐ நீரகம் என்று படித்துவிட்டு அப்புறம் நீரகம் என்றால் 'Hydrogen' என்று தெரிந்து கொள்ளக் கூடிய அளவுக்குச் சூழ்நிலை தோன்றுவதைக் காட்டிலும் அதை அப்படியே வைத்துக் கொள்வத னால் தவறில்லையோ என்று நினைக்கின்றேன். அது பெரியவர்கள் ஆராய்ச்சி செய்யவேண்டிய விஷயம். என்னைப் போன்ற ஒருவனுக்கு அதில் ஒன்றும் வேலையில்லை. ஆனால், பெரியவர்கள் என்ன

அதைப்பற்றி சொல்லுகிறார்கள் என்று அறிய மிகச் சிரமப்பட்டேன்; இப்போது — மத்திய அரசின் ஆட்சி மொழிக் கழக அறிக்கையை மொழி பெயர்க்கத் துவங்கியுள்ளேன். இவர்களா பெரிய மனிதர்கள் என்ற சந்தேகம் வந்து விட்டது எனக்கு. ஏனென்றால், அவ்வளவு குழறுபடி செய்து வைத்திருந்தார்கள் அந்த நூலில். ஆளுக்கொரு கருத்து. 600 பக்கம் எழுதுவதற்குள் 600 கருத்து வேற்றுமை அதற்குள்ளே. கலைச்சொல் ஆக்கம் செய்ய வேண்டும் என்று நினைக்கையிலேயே என்ன ஆகிறது? தகராறுதான் முன்னர் நிற்கிறது.

இந்த மொழியில் அந்தச் சொல்லை எப்படிப் போடுவது என்பது போன்ற உபத்திரவத்திற்கு முற்றுப் புள்ளி வைத்ததைப்போல எதை வேண்டுமானாலும் எந்த மொழியில் வேண்டுமானாலும் சொல்லலாம். ஆனால், கலைச்சொற்களை அப்படியே சொல்லி விட வேண்டும். கார்பைடைக் கார்பைடு என்றே எழுதலாம். அந்த 'டு' எழுதுவதற்கு நம்மிடம் எழுத்து இல்லையானால் அடியில் கோடு, மேலே கோடு எதையாவது போட்டு வேண்டுமானாலும் எழுதி விடலாம்; அதில் ஒன்றும் தவறு இல்லை. அந்த அளவுக்கு அதைப் பயன்படுத்திக்கொள்வதினாலே தவறில்லை என்று நினைக்கிறேன். அது என்னுடைய சொந்தக் கருத்து; அவ்வளவுதான். எழுத்துப் பெயர்ப்பு நலம் பயக்கும் என்பதை அன்றாட அனுபவத்தில் பார்த்துக் கொண்டிருக்கிறவன் நான். எதையும் படிக்க முடியும். ஆகையினாலே, 'transliteration' செய்வதனாலே தவறு ஒன்றுமில்லை. அது மட்டுமன்று; கொஞ்சம் லாபம் கூட. அதில் பொழுதைப் போக்கிக் கொண்டிருக்க வேண்டியதில்லை; இனி நாம் இங்கே

படித்துவிட்டு மேல்நாடு அல்லது வடநாடு அல்லது தென்னாடு . என்று போகிறோமென்று வைத்துக் கொள்ளுங்கள். எல்லாருக்கும் ஒன்றாக இந்தக் கலைச் சொற்கள் இருக்குமேயானால், அதனால் நமக்கு நன்மை தானே தவிரத் தீமை ஒன்றும் இல்லை.

அப்படிச் செய்வதால் தமிழில் அச் சொற்களைக் கொண்டுவர வேண்டா என்று சொல்லவில்லை. ‘Major axis, minor axis’ ஆகியவற்றை நெட்டாயம் குட்டாயம் என்று மொழி பெயர்த்ததை நான் வரவேற்கிறேன். மிக மகிழ்ச்சி அடைகிறேன். எவ்வளவு அழகாக ‘Minor axis’ ஐக் குட்டாயம் என்றும், ‘major axisd’ ஐ நெட்டாயம் என்றும் செய்தார்கள் என்று மகிழ்ச்சி அடைந்தேன். ஆனால் குட்டாயம் என்றுதான் சொல்லவேண்டும் என்று வலியுறுத்துவதை நான் விரும்பவில்லை. அப்படிச் சிலர் — அந்த வன்மை உடையவர்கள் — இரண்டு மொழியிலும் `வன்மையுடையவர்கள் — விஞ்ஞானத் துறையிலும் துறைபோகியவர்கள் அழகாக இப்படிப்பட்ட சொற்களை ஆக்கித் தரட்டும்; வைத்துக் கொள்வோம். ஆனால், எல்லாரும் இதனைத் தான் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று கட்டாயப் படுத்தத் தேவையில்லை. அதனாலே தொல்லை யில்லாமற்போய்விடும். எளிதாகவும் கற்றுக் கொள் கிறோம். பிறகு — நல்ல அனுபவம் முற்றியபிறகு நம்முடைய மொழியிலேயே சொல்ல முடியுமா என்றால் முடியும் என்பதை எடுத்துக் காட்டுவதற்காக இதனைச் சொல்லிவிட்டேன். ஜப்பானிய நாடு, ரஷ்ய நாடு இரண்டும் தாம் இப்போது நமக்கு எடுத்துக் காட்டாக இந்தத் துறையில் அமைந்துள்ளன. ஜப்பானிலே நூற்றுக்கு 85 பேர் ஜப்பானிய

மொழியைத் தவிர வேறு ஒன்றும் தெரியாதவர்கள் என்பதை மறந்துவிட வேண்டா. மிகச்சிறந்த விஞ்ஞானிகளாக இருக்கின்ற அத்துணைபேரில் பலர் ஜப்பானிய மொழியைத் தவிர வேறு ஒரு மொழியும் தெரியாதவர்கள். அந்த ஜப்பானிய மொழியிலேயும் சின்டோ மொழி ஒன்றைத் தவிர வேறு ஒன்றும் தெரியாதவர்கள். என்றாலும் அவர்கள் அத்தனை பேரும் விஞ்ஞானிகளாக இருக்கின்றார்கள். அப்படி இருக்கின்ற அந்த ஜப்பானியர்கூடக் கலைச் சொற்களைப் பொறுத்தமட்டில் அப்படியேதான் வைத்திருக்கிறார்கள்.

**வினா:** தமிழ் நெடுங்கணக்கு இன்றைய வரி வடிவத்தையே முன்னரும் பெற்றிருந்ததா? இன்றைய நிலையில் மாற்றம் ஏதேனும் தேவையா?

**விடை:** தமிழ் நெடுங்கணக்கு இன்றைய வரி வடிவத்தையே முன்னரும் பெற்றிருந்ததா? இல்லை என்று நன்றாக உங்களுக்கெல்லாம் தெரியும், காலாந்தரத்தில் மாறி வந்தது., தொல்காப்பியர் காலத்திலிருந்த வரிவடிவம் எவ்வளவோ மாறி விட்டது. அவ்வளவு போவானேன்? கொஞ்ச காலத்திற்கு முன்னே வாழ்ந்த பெஸ்கி முதலானவர் காலத்தில் இருந்த எழுத்து முறைகூட இப்பொழுது கிடையாது. மாறி விட்டது, அதில் ஒன்றும் ஆச்சரிய மில்லை. இன்றைய நிலையில் மாற்றம் ஏதேனும் தேவையா? இப்பொழுது சொன்னேனே, சில கலைச் சொற்களைத் தெரிவிப்பதற்குரிய சில ஓசைகள் இல்லை என்று; அந்த ஓசைகளைத் தரக்கூடிய சில எழுத்துகளை ஆக்கிக் கொள்வதனால் மிக வசதியாக ஆகிவிடும்; அவ்வளவுதான்.

**வினா:** *'யாமறிந்த புலவரிலே* **கம்பனைப்***போல் வள்ளுவர்போல் இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை' என்ற வரிகளில் 'கம்பரைப்போல் எனப் பாரதியார் பாடியிருக்க மாட்டார்;* **காப்பியர்***போல் என்றுதான் பாடியிருப்பார்' — இவ்வாறு ஓர் அறிஞர் கூறுவதுபற்றித் தங்கள் கருத்து யாது?*

**விடை:** *'யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல், வள்ளுவர் போல், இளங்கோவைப்போல்' என்றதை ஒருவர், அதைக் 'கம்பனைப்போல் இல்லை, காப்பியர் போல்' என்று சொல்லுகிறாரே. நீ என்ன நினைக்கிறாய் என்று கேட்கிறீர்கள். ஏன்? சொல்லுகிறவர்களை யல்லவா கேட்கவேண்டும்? என்னைக் கேட்டு என்ன பயன்? நான்தான் பாடும்போதே கம்பனைப்போல் என்று பாடுகிறேனே. போதுமா உங்களுக்கு? சொல்லு வோர் ஏதோ அவர்கள் கருத்தில் பட்டதைச் சொல்லு கிறார்கள். அதைப்பற்றி எனக்கு என்ன கவலை? நான் என்ன நினைக்கிறேன் என்கிறீர்களா? அவர்கள் கூற்றை நான் நம்பவில்லை. காப்பியர்போல் என்றுதான் பாடியிருப்பார் என்று அவர் எப்படி உறுதியாக நம்புகிறாரோ? அதுபோல நான் உறுதியாகக் 'கம்பனைப்போல்' என்றுதான் பாடி யிருப்பார் என்று நம்புகிறேன். ஏனென்றால்,* **'கம்பன் என்றொரு மானிடன் வாழ்ந்ததும்'** *என்று பின்னரும் பாடுகிறான். அதுமட்டுமன்று; அந்தக் காப்பியத்திலே அவன் ஊறித் திளைத்திருக்கிறான். அதற்கு ஓர் எல்லையே இல்லை. அப்படி ஊறித் திளைத்திருப்ப தால்தான் 'பாஞ்சாலி சபதத்தை' ஆழ்ந்து படித்துப் பார்ப்பீர்களானால், எவ்வளவு தூரம் கம்பனில் பாரதி ஈடுபட்டிருக்கிறான் என்பது தெரியும். 'கம்பன்*

*என்றொரு மானிடன்' என்று பாடினானே அதையே அவனுடைய வியப்புக்கு ஓர் எல்லையாகக் கொண்டு வந்து விட்டான். 'இது மனித யத்தனத்தில் முடியுமா' என்று சொல்லுகிறோமே அதுபோல ஆச்சரியப் படுகின்றான். யார்?* **ஒரு கவிஞன்தான் இன்னொரு கவிஞனை அனுபவிக்க முடியும்.** *நாம் என்ன கண்டோம்!* **'சான்றோர் கவி***யெனக் கிடந்த* **கோதாவரி***யினை வீரர் கண்டார்' (கம்பன்) என்று பாடினானே, அதை யார் அனுபவிக்க முடியும்? 'பாட்டுத் திறத்தாலே வையத்தைப் பாலித்திடல் வேண்டும், 'பராசக்தி' என்று பாடினானே (பாரதி) அவன்தான் அனுபவிக்க முடியும். அவன்தான் அந்தச் சக்தியை உள்ளவாறு அறிய முடியும்.*

**வினா:** *பண்டைக் காலத்தில் சான்றோரைக் குறித்த* **ஐயர்** *என்ற சொல் இன்று குறிப்பிட்ட ஒரு சாதியாரை மட்டும் குறிப்பது ஏன்?*

**விடை:** மொழி நூல் படித்தவர்களுக்குச் சில உண்மைகள் தெரிந்திருக்கலாம். சில சொற்கள் இப்படிக் காலாந்தரத்தில் மாறி வேறு ஒன்றைக் குறிப்பதும் உண்டு. களி என்ற சொல்லைப் பாருங்கள். 'என்ன மிகவும் களிப்புடன் இருப்பதைப் போல் தெரிகிறதே?' என்று இப்போதுகூடச் சில மாவட்டங் களிலே சொல்லுவார்கள். 'களிப்புத் தாண்டவமாடு கிறது முகத்திலே' என்பார்கள். வள்ளுவன் காலத்தில் இச் சொல்லைச் சொன்னால் பொருளே வேறு. குடித் திருப்பவனையே இச்சொல் குறித்தது. 'களித்தானைக் காரணம் காட்டுதல்' என்று பாடுவார் வள்ளுவர். வள்ளுவர் காலத்தில் 'ஐயா மிகவும் களிப்புடன் இருக்கிறார்' என்றால், கள்ளுக்கடைக்குப் போய்

வந்தார் என்று பொருள்படும். அன்று இத்தகைய ஒரு மனோநிலையைக் 'களி' என்ற சொல் குறிப்பிட்டது. இன்றைக்கு அந்தச் சொல் உயர்ந்து விட்டது. மிக உயர்ந்த பொருளை, 'மகிழ்ச்சி' என்ற கருத்தை அச்சொல் தெரிவிக்கிறது. இதில் ஒன்றும் ஆச்சரியப் படுவதற்கில்லை.

'ஐ வியப்பாகும்' என்றுதான் சூத்திரம் செய்து விட்டுச் சென்றான் தொல்காப்பியன். 'அட, எவ்வளவு பெரிய மனிதன்' என்று நாம்கூட ஒரு சிலரைப் பார்த்து ஆச்சரியப்படுகின்றோம். அப்படி வியந்த வுடனே நம்மை அறியாது என்ன செய்கிறோம்? கொஞ்சம் மரியாதை தருகிறோம். இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது? 'என் ஐ முன் நில்லன்மின் தெவ்வீர்' என்ற குறட்பாவில் மதிப்புடைய ஓர் உயர்வுச் சொல்லாகத்தான் இருக்கிறது. பிறகு, நாளாவட்டத்தில் மதிப்புடைய பொருளையெல்லாம் அந்தச் சொல்லி னாலே குறிக்கின்ற சூழ்நிலை வந்தது. பெரிய புராணத்திலே சேக்கிழார் இந்த ஐயர் என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். யாருக்குத் தெரியுமா? அந்தணராகப் பிறந்த ஞானசம்பந்தருக்கன்று; நந்தனாருக்கு. பெரிய புராணம் முழுவதிலும் ஐந்து இடத்திலே ஐயர் என்ற வார்த்தை; 4,268 பாடல்களில் ஐந்து முறை 'ஐயர்' என்ற சொல் ஆளப்படுகிறது. **நந்தனார், திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்ற இரண்டு அரிசன அடியார்கட்கும் கண்ணப்பர் என்ற வேடருக்குமே ஐயர் என்ற பட்டம் வழங்கப்படுகிறது.**

இனி, நந்தனாரை யார் ஐயரென்று சொன்னார் கள் தெரியுமா? தில்லைவாழ் அந்தணர்கள்.

ஐயரே அம்பலவர் அருளால் இங்க ணைந்தோம்
வெய்ய அழல் அமைத்துமக்குத் தரவேண்டி

"ஐயரே" என்று கூப்பிடுகிறவர் யார்? இன்றைக்கு உங்களால் ஐயரென்று சொல்லப்படுகிறவர், கூப்பிடப் பட்டவர் யார்? மறந்தும் ஐயரென்று சொல்லப் படாதவர். பாடுகிறவர் யார்? அமைச்சர் பெருமான் சேக்கிழார். அடுத்த ஓர் ஐயர், திருஞானசம்பந்தர். அவர் ஐயர் என்று அழைக்கிறார். யாரைத் தெரியுமா? திருநீலகண்ட யாழ்ப்பாணரை. 'ஐயர், நீர் உளமகிழ இங்கணைந்த உறுதியுடையோம்' என்று பேசுகிறார். பெரிய புராணத்திலே வந்த முதல் ஐயர் கண்ணப்பர்; இரண்டாம் ஐயர் திருநாளைப்போவார். மூன்றாம் ஐயர் யாழ்ப்பாணர். ஆகையினால், இந்தச் சொல்லுக்கு இதுதான் பொருள் என்பதை அறிய முடியும். மதிப்பால் உயர்ந்தவர்களை, நம்மால் மதிக்கத் தகுந்தவர்களை ஐயர் என்கிறோம். அது பிறப்பால் வந்ததன்று. 'புலனழுக்கற்ற அந்தணாளன்' என்று பேசப்படுகிறானே கபிலன். அதைப்போல அந்த ணாளர்கள் இருந்திருக்கலாம். யார் இல்லை என்று சொல்ல முடியும்? நல்லவர்களாக இருந்தவர்களை யெல்லாம் செந்தண்மை பூண்டு ஒழுகிய காரணத் தினாலே 'ஐயர்' என்று அழைத்திருக்கலாம். இப்போது கூடப் பணக்காரன் மகன் பணக்காரன்தானே? அதை மட்டும் மறந்துவிடுகிறீர்களே! இந்த 'ஐயர்' என்ற வார்த்தைக்கு மட்டும் சண்டைக்கு வருகிறீர்களே! பணக்காரனாக இருந்து இன்று வறுமையுற்றிருப்பினும் இன்றுகூட அவனைக் கண்டவுடனே, 'என்ன முதலாளி' என்கிறார்கள். ஓர் அமைப்பை (Institution) ஏற்படுத்தி விட்டால் பின்னர் அதனை அழிக்க முடியாது. இது இந்த நாட்டில் மட்டுமன்று; எல்லா

நாட்டிலேயும் இதுதான் வழக்கம். ஓர் அமைப்பை ஏற்படுத்திவிட்டீர்களானால் அதில் நல்லவனும் வருவான் கெட்டவனும் வருவான். அமைப்பு என்று தொடங்கினால் வரும் தீங்கு இதுதான். பிற சமயத்தைப்பற்றி நான் இப்போது சொல்ல வரவில்லை. நம் சமயத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். ஒவ்வொரு சமயத்தாரும் மனத்தில் கைவைத்துப் பார்த்தால் நான் கூறுவது உண்மை என்பது தெரியும். ஞானசம்பந்தர் எங்காவது மடம் கட்டினாரா? திருநாவுக்கரசர் மடம் கட்டினாரா? இன்றைக்கு எத்தனை மடங்கள் இருக்கின்றன? எங்கேயாவது நல்லது இருக்கிறதா? நல்லது என்றால் நல்ல பாம்பு அன்று; நல்ல பண்பாடு என்று கேட்கிறேன். ஏன்? அவர்களுக்குத் தெரியும். அமைப்பு என்ற ஒன்றை உண்டாக்கினால் அது நாளாவட்டத்தில் குட்டிச் சுவராகப் போய்விடும். சமுதாயத்தில் மதிக்கத் தகுந்தவர்கட்கு வழங்கப்பெற்ற பட்டம் நாளா வட்டத்தில் சாதிப் பெயராயிற்று.

**வினா:** 'ஆதிசிவன் பெற்றுவிட்டான் என்னை' என்று தமிழின் தோற்றத்தைப் பாடுகிறார் பாரதியார். சிவனிடமே தமிழ் பிறந்ததா? அப்படித் தோன்றி யிருந்தால், அதுவரை மனிதரால் பேசப்படாத ஒரு மொழிக்கு அகத்தியன் என்னும் மனிதன் எப்படி இலக்கணம் செய்ய முடியும்?

**விடை:** 'ஆதிசிவன் பெற்றுவிட்டான்' — இது வேடிக்கையான கேள்வி. எல்லா மொழியையும் அப்படித்தான் சொல்லுவார்கள். அவரவர் மொழியை அவரவர் அப்படி உயர்ந்தது என்று சொல்வதில் தவறு ஒன்றுமில்லையே. 'ஆதிசிவன் பெற்றுவிட்டான்

என்னை' என்று சொன்னால் அதில் என்ன தவறு? ஆனால், அதேமாதிரி இன்னொன்று பாடினானே, 'தொன்று நிகழ்ந்ததனைத்து முணர்ந்திடு சூழ்கலை வாணர்களும், இவள் என்று பிறந்தவள் என்றுணராத இயல்பினளாம் எங்கள் தாய்' — என்று அது மறந்து விட்டதா இந்தக் கேள்வி கேட்கும்போது என்று கேட்கின்றேன். 'கல்லிவர்ஸ் டிராவல்ஸ்' என்ற நூலை ஒருவர் எழுதவில்லையா? இதைப் படித்தவுடன் கஜக்கோலை எடுத்துக்கொண்டு எங்கே ஐயா இருக்கிறான் அந்தப் 'பெட்டகோனியன்' — எங்கே இருக்கிறான் அந்த 'லில்லிபுட்டன்' என்று எந்தப் பிரகஸ்பதியாவது அளக்கப் போவானா? என்னே பைத்தியக்காரத்தனம் இது! அது ஒரு குறியீட்டுச் சொல். பெட்டகோனியனைச் சொல்லும்போது என்ன பண்பாட்டைச் சொல்லுகிறான் அவன்; பத்துத் தலை இராவணனைச் சொல்லும்போது என்ன பண்பாட்டைச் சொல்லுகிறான் அவன் என்றுதானே தெரிந்து கொள்ள வேண்டும்.

சின்னப் பாப்பாக்களுக்குக் கதை சொல்லும் போது, 5 மாம்பழம் வைத்திருக்கிறாய் — 2 மாம்பழத்தைத் தின்றுவிட்டால் — 3 மாம்பழம் மிச்சம் என்று சொல்லும்போது, மாம்பழத்தைக் காணோமே என்று குழந்தை கேட்கிறது. இவ்வளவு பெரிய பிள்ளையாக வளர்ந்த நீங்கள் படிக்கும்போது, அதேமாதிரி மாம்பழம் ஒன்று, இரண்டு என்று எண்ணுவது உண்டா? அந்த இளம் பருவத்தில் சைன் தீட்டா — காஸ் தீட்டா சொல்லிக் கொடுத்தால் பிள்ளைக்கு ஒன்றும் புரியாது. 5 மாம்பழம் — இது ஒன்று, இது ஒன்று என்றுதான் சொல்ல வேண்டும். வளர்ந்து அப்புறம் மறுபடியும் மாம்பழக் கணக்கே

போட்டுக் கொண்டிருக்கலாமா? அதுவும் தேவை; இதுவும் தேவை. அந்தமாதிரி சில இருக்கின்றன. கடவுள்தான் எல்லாவற்றையும் படைத்தான் — அனைத்தும் இறைவனுடைய படைப்பு என்று ஒத்துக் கொள்ளும்போது, மொழியிலே மட்டுமென்ன கோளாறு வந்துவிட்டது என்று கேட்கிறேன். அதை மறுக்க வேண்டிய அவ்சியம் என்ன இருக்கிறது? எல்லாம் படைக்கப்பட்டவை. மொழி மட்டும் தானாகக் குதித்ததோ? அதுவும் படைக்கப்பட்டது தான். கவிஞனுக்கு 'ஆதிசிவன் பெற்றுவிட்டான்' என்று கூறுவதற்கு விருப்பம் என அறிகிறோம். அது சிவனிடம் தோன்றியதோ, அன்றி யாரிடம் தோன்றி யதோ? ஏன் அவ்வளவு கோபம் என்று எனக்கு ஒன்றும் தெரியவில்லை.

சிவம் என்றால் என்ன? நிலைச்சக்தி (Potential energy) எனலாம். சக்தி என்று சொன்னால் இயங்கு சக்தி (Kineticenergy) எனலாம். எல்லாச் சடமும் (Matter) சக்தியாக (Energy) மாறலாம் என்று இன்றைய அறிவியல் கூறவில்லையா? $E = Mc^2$ என்பதை மறக்க வேண்டா. ஆனால், $E = Mc^2$ என்பதை ஐன்ஸ்டின் மட்டுமே கண்டு கூறினார் என்று நினைக்காதீர்கள். 'சிவம் — ஜடம், அது இயங்கவே இயங்காது'. ஆனால், தொழிற்படுமானால் 'காயில் உலகனைத்தும் கற்பொடிக் காண்' என்று பாடினார் மணிவாசகர். சக்தி வெளிப்படும்போது அதனை இயங்காற்றல் (Kinetic) என்றும், சும்மா இருக்கும்போது நிலையாற்றல் (Potential) என்றும் கூறுகிறோமன்றோ? சடம் (Matter) சடமாகவே இருக்கும்போது சிவம் என்று சொன்னார்கள். சக்தியாக (Energy) வெளிப்படும்

போது 'சக்தி' என்று சொன்னார்கள். இரண்டும் பிரிக்கமுடியாதபடி ஒன்றையொன்று பற்றியுள்ளன. இவளும் அவனைவிட்டுப் பிரிவதில்லை; அவனும் இவளைவிட்டுப் பிரிவதில்லை. என்றாவது சக்தி சிவத்திலிருந்து பிரியுமேயானால் உலகம் கற்பொடியாகிவிடும் என்று சொன்னான். ஆகவே, சிவனிடம் தமிழ் பிறந்தது என்று கூறுவதில் தவறில்லையே. 'அப்படித் தோன்றியிருந்தால், அதுவரை மனிதரால் பேசப்படாத ஒரு மொழிக்கு அகத்தியன் என்னும் மனிதர் எப்படி இலக்கணம் வகுத்தார்?' என்பது உங்கள் துணைவினா. யாரோ ஒருவன் ஒரு மொழியைப் பேசிக்கொண்டிருந்தான் வரம்பு கட்டாவிடில் மொழி என்ன ஆகும் என்பது தெரியுமல்லவா?

ஒரு சிறிய உதாரணத்தைக் காணலாம். சென்னையில் உள்ள ரிக்ஷா இழுப்பவர், 'பலான எடத்துக்குப் போவணும் ன்னு சொன்னால்தானையா தெரியும். 'நீ பாட்டுக்கு ஏறி உட்கார்ந்துட்டீயே; எங்கே போகிறது?' என்பார். 'பலவான இடத்திற்கு என்றால் என்ன பொருள்? ஒன்றுக்கு மேற்பட்டதுதானே பல என்று நாம் படித்திருக்கிறோம். ஆகவே, பலான இடத்திற்குப் போக வேண்டுமென்றால், குறிப்பிட்டது அல்லாத என்று பொருள் கொள்ள வேண்டும். ஆனால், அவன் என்ன கருத்தில் பேசுகிறான் தெரியுமா? 'குறிப்பிட்ட இடத்திற்குப் போக வேண்டும் என்று சொன்னால் தானே எனக்குத் தெரியும்' என்பதே அவன் கருத்து. குறிப்பிட்ட என்ற பொருளில் அதற்கு நேர்மாறான பொருள் தரும் 'பலவான' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறான். இந்தச் சொல்லுக்கு இதுவே பொருள் என யார் கூறினர்? ஏதோ நாமாக ஒரு பொருளை ஒரு சொல்லுக்குக் கொடுத்து விட்டோம்.

அந்தப் பொருளை அனைவரும் ஒத்துக் கொள்ளும் வரையில் அதற்குத் தடை ஒன்றுமில்லை. ஆகையினாலேதான், இலக்கணக்காரன் ஒரு வரம்பு கட்டினான். யார் எந்த நேரத்தில் பேசினாலும் ஒரு சொல்லுக்கு இதுவே பொருள் என்றும் சொற்கள் தொடர்ந்த வாக்கியத்திற்கு இதுவே பொருள் என்றும் இலக்கணம் பேசுகிறது. அகத்தியம் என்றாலென்ன? மேலே கூறிய முறையில் மொழியைக் காக்கச் செய்யப் பெற்ற ஓர் இலக்கணம்.

**வினா:** இலக்கியத்தைப் பயில்வோனுக்கு நூல் தோன்றிய காலம்பற்றிய தெளிவு தேவைதானா?

**விடை:** மிகத் தேவை. இல்லாமற்போனால், அதில் விளையும் தொல்லை கொஞ்சநஞ்சமன்று. ஒரு நூலை உள்ளவாறு அறியவேண்டுமானால், அது எந்தக் காலத்தில் தோன்றியது என்பதைத் தெரிந்தால் ஒழிய அந்த நூலை உள்ளவாறு அறிய முடியாது; ஒரு கவிஞன் அவன் தோன்றிய காலத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடி என்பர்.

'A poet is the product of his time'

ஆகையால், இன்ன காலத்திலே இந்த நூல் தோன்றிற்று என்பதை அறிந்தால் ஒழிய அந்த நூலை உள்ளவாறு அறியவே முடியாது. ஒரு காலத்தே தோன்றிய நூலைக் கொஞ்சம் பின்னர்த் தள்ளி வைத்தோ அல்லது முன்னர்த் தள்ளிவைத்தோ பார்ப்போமேயானால், நாட்டு நிலவரத்திற்கும் ஏட்டு நிலவரத்திற்கும் வேறுபாடு காணப்பெறும். ஆகையால், எந்த ஒரு நூலையும் — அது ஆங்கிலமாக இருந்தாலும் சரி, வடமொழியாக இருந்தாலும் சரி, தமிழாக இருந்தாலும் சரி, சீன நூலாக இருந்தாலும் சரி,

ஆராயுமுன் அந்த நூலாசிரியன் காலத்தை ஓரளவாவது அறியவேண்டும். பொதுவாக, குறைந்த பட்சம் எந்த நூற்றாண்டைச் சேர்ந்தது என்பதாவது தெரிந்திருந்தால்தான் அந்த நூலை உள்ளவாறு நாம் அறிய முடியும்; அதை அனுபவிக்கவும் முடியும். அப்போது அதில் குறை காணவும் முடியாது. இன்றைக்கு நம்மிடம் இருக்கும் கருத்து மாறுபாடு களைக் கொண்டு போய் அந்நூலில் ஏற்றிக் காண்பது தவறு.

**வினா:** 'ஜ, ஷ, ஸ, ஹ, க்ஷ' முதலிய வடமொழி எழுத்துகள் தமிழ் மொழியிலிருக்கின்றன. இவற்றை நீக்கிவிட்டுத் தமிழைத் தூய்மைப்படுத்த வேண்டாவா?

**விடை:** இவ் வினாவின் அமைப்பு முறையே சற்று வேடிக்கையாக இருக்கிறது. நீக்க வேண்டுமா, நீக்க வேண்டாவா என்று என்னைக் கேட்பதை விட்டு, நீக்கி விட்டுத் தூய்மைப்படுத்த வேண்டாவா என்று கேட்டுள்ளீர்கள். 'நீக்க வேண்டா' என்று நான் சொன்னால், தமிழைத் தூய்மைப்படுத்த வேண்டா என்று பொருள்படும். நீக்காவிடின் ஏற்படுவது தூய்மையா, தூய்மையின்மையா என்பதைப்பற்றி எனக்குத் தெரியாது. ஆனால், ஒன்று தேவை. நம்முடைய பண்பாட்டை இழக்காமல் பிறவற்றைச் சொல்லக்கூடிய சக்தி நமக்கு வேண்டுமென்று முதலில் கலைச்சொற்களைப் பற்றிப் பேசும்போது சொன்னே னல்லவா? அந்த முறையிலே இந்த எழுத்துகளை வைத்துக் கொள்ளலாம். அதனாலே தவறு ஒன்று இருக்கிறதாக நான் கருதவில்லை. எவ்வளவோ கருத்துகளைத் தெரிவிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்படப் போகின்றது. அந்தச் சூழ்நிலை வரும்

பொழுது மிக மிகத்தேவைப்படும் இந்த எழுத்துகள். ஆங்கிலத்திலேயே ஏதாவது சேர்க்கலாமா என்று நினைக்கிறார்கள். ஷா அதற்காக ஒரு பெரிய இயக்கமே துவக்கினார். நாம் இனி வளருகின்ற சமுதாயத்தினர். எவ்வளவோ கருத்துகளை வெளியிட வேண்டிய சூழ்நிலையில் நாம் இருக்கிறோம். மிக மிக இன்றியமையாத இத்தகைய இரண்டு மூன்று எழுத்துகள் இருப்பதால், குற்றம் என்ன? தொல் காப்பியன் முதற்கொண்டு பிறமொழி எழுத்துகளை ஏற்றுக் கொண்டுள்ளான்; ஆனால், இரு மொழிகளிலு முள்ள எழுத்துகளைக் குழப்பிக்கொள்ளாமல் எவ்வாறுபயன்படுத்த வேண்டுமென்று அவனே இலக்கணம் கூறுகிறான். 'வட சொற்கிளவி வட எழுத்து ஒரீஇ' வந்து பயன்படும் என்று கூறுகிறான். 'க' ஒன்றுதான் உண்டு. ஆனால், மெல்லினத்துப் பின்னர் வரும் 'க'வை 'க' என்று உச்சரிக்க முடியாது தமிழில். பங்கயம் என்று சொல்லுகிறோமா இல்லையா? பங்(க்)கயம் என்று யாரும் சொல்லுவது கிடையாது. அதே மாதிரி வட எழுத்துகள் தமிழிலே வந்து வழங்கும்பொழுது தமிழ் வடிவத்தைப் பெற்று விட்டன. பங்கயம் என்றுதானே சொன்னான்? குங்குமம் என்றுதானே சொன்னான்? குங்(க்)குமம் என்று சொல்லவில்லையே. எனவே, அந்த ஓசை இயல்பாக வந்து விட்டது. தெலுங்கும் மலையாளமும் இன்றைக்கு வடிவமே இல்லாமற் போய்விட்டன. 100-க்கு 99 வடமொழியாய்ப் போய்விட்டன. ஏன் தெரியுமா? ஒரு தப்புச் செய்தார்கள் அவர்கள். இந்த வடசொற்களையோ அல்லது வடவெழுத்துகளையோ அல்லது வட மொழியையோ எடுத்துப் பயன்படுத்தும் போது நமக்கு ஏற்றபடி அதை மாற்றியோ சிதைத்தோ

பயன்படுத்தியிருந்தால், தொல்லை இல்லாமற் போயிருக்கும். தமிழன் அப்படித்தான் செய்தான்.

அதுபோலப் பயன்படுத்தினால் எந்தவிதமான அச்சமும் வேண்டுவதில்லை; எச் சொற்கள் வந்தாலும் சரி, கவலையே பட வேண்டியதில்லை. ஆகவே, இவற்றை நீக்கிவிட்டுத் தமிழைத் தூய்மைப்படுத்துவ தென்றால், தூய்மை இரண்டு வகைப்படும். சுத்தமாக வீட்டில் இருக்கும் சாமான்களையெல்லாம் வெளியில் போட்டாலும் போடலாம்; மேசை இருக்க வேண்டிய இடத்தில் மேசை, நாற்காலி இருக்க வேண்டிய இடத்தில் நாற்காலி, ரேடியோ இருக்க வேண்டிய் இடத்தில் ரேடியோ என்று அவற்றை வைத்தும் சுத்தமாகத் துடைத்து வைத்திருக்கலாம். அதுவும் தூய்மைதான். எந்தத் தூய்மையை நீங்கள் விரும்பு கிறீர்கள் என்று தெரியவில்லை. நான் கொஞ்சம் பழைய ஆள். எனக்குத் தூய்மை எது என்றால், மேசை இருக்க வேண்டிய இடத்தில் மேசை இருக்க வேண்டும்; அதன்மேலே காலணியைக் கழற்றி வைக்கக்கூடாது. அதன்மேலே புத்தகம்தான் இருக்க வேண்டும். ரேடியோவின் இடத்திலே ரேடியோதான் இருக்க வேண்டும். அதே மாதிரி பெட்டி இருக்க வேண்டிய இடத்தில் பெட்டி இருக்க வேண்டும். இதன்மேலே வேறு எதாவதைத் தூக்கி வைக்கக் கூடாது. எனவே, தூய்மை என்ற சொல் அவரவர் கருத்துப் போலப் பொருள்தரும். ஆகையினால், தமிழைத் தூய்மைப் படுத்த இவற்றையெல்லாம் தூக்கிக் கொண்டுபோய் வெளியில் போட்டுவிட்டு வரவேண்டுமென்பதில்லை. வைக்க வேண்டிய இடத்தில் வைக்க வேண்டும்; அவ்வளவுதான்.

17

# சமயமும் தமிழும்

இப் பரந்த உலகிடைத் தோன்றிய மனிதன் தான் வாழும் சூழ்நிலைகட்கேற்பப் பல்வேறு மொழிகளைத் தோற்றுவித்தான். அவற்றுள் சில நன்கு வளர்ச்சி யடைந்துள்ளன. அச் சிலவற்றுள்ளும் உயர் தனிச் செம்மொழி என்று கூறத்தக்க வகையில் மிகமிகச் சிலவாய மொழிகள் சிறப்படைந்துள்ளன. தலையாய அவற்றுள் ஒன்று இத் தமிழ்மொழி. 'தொன்று நிகழ்ந்தது அனைத்தும் உணர்ந்திடு சூழ்கலை வாணர்களும் இவள் என்று பிறந்தவள் என்றுணராத இயல்பினளாம்' தமிழ்த்தாய். இவளை ஒத்த மேம்பாடுடைய பிற மொழிகளிற் காணப்பெறாத சிறப்பொன்றை இப் பெருமாட்டி பெற்றுள்ளாள். அம் மொழிகளில் உள்ள இலக்கியங்களுள் சில சமய இலக்கியங்களும் உண்டு; ஆனால், இவளிடைத் தோன்றிய அனைத்துமே சமய இலக்கியங்கள்தாம். சமய இலக்கியம் என்று கூறியவுடன், தேவார, திருவாசக, திவ்யப் பிரபந்தங்களை மட்டுமே இன்றை நாள் மக்கள் சிலர் நினைக்கின்றனர். அக் கருத்துச் சரியானதன்று.

சமயம் என்றால் என்ன? சமைக்கப்பட்டது சமயம். மனிதன் தன் வாழ்வு வளம் பெறவும், மாக்கள் தன்மையிலிருந்து விடுதலை பெற்று மக்கள் தன்மை

பெறவும் வழியாகச் செய்யப்பட்டது அல்லது சமைக்கப்பட்டதுதான் சமயமாகும். வேறு வகையாகக் கூறுமிடத்து, மனிதனைப் பண்பாடுடையவனாக ஆக்குவது சமயம். சமய வாழ்வு இன்றேல் மனிதன் ஆறறிவு படைத்தவன் என்று பெருமைப்படுவது வெற்றுரையாய் முடியும். பல்வேறு வகையான காட்சி நல்கும் இப் பரந்த உலகையும் அதில் உள்ளவற்றையும் காணும் ஒருவன், இவ் வேற்றுமையில் மயங்காமல், இவற்றிடையே ஓர் ஒற்றுமையைக் காண முயல்கிறான். இவ்வொற்றுமையைக் காண முற்பட்ட அவன் அனைத்திற்கும் ஆணிவேராய் அமைந்த ஒன்றை அறிகிறான். தன் நுண்மாண் நுழை புலத்தால் ஆய்ந்து செல்லும் அவன் அவ்வறிவுக்கு அப்பாற்பட்ட பொருள்கள் உண்டு என்பதையும் அவை அனைத்தும் ஒரு வரன்முறைக்குட்பட்டு இயங்குவதையும் காண்கிறான்.

விஞ்ஞானியும் இதே காட்சியைக் காண்கிறான் எனினும், அவ் வரன்முறை பற்றிய ஆய்விலேயே தன் முழுக்காலத்தையும் செலவிட்டு விடுகிறான். மெய்ஞ் ஞானி வரன்முறையின் தோற்றத்திற்கு ஒரு கருத்தா இருத்தல் வேண்டும் என்ற முடிபில் ஒன்றி விடுகிறான். இவ்வெண்ணமே சமய வாழ்வின் அடிப்படையாய் அமைந்துவிடுகிறது. சமயம் வெறும் குறிகளும் அடையாளமும் அன்று; சமயம் என்பது இவற்றைக் கடந்து நிற்பது. குறிகள், அடையாளங்கள் ஆகிய ஒன்றையும் போற்றாமலே சிறந்த சமயவாதியாக வாழ முடியும். இவை அனைத்தையும் மேற்கொண்டும் சமய விரோதியாய் வாழ முடியும். மனித இனத்தின் மாசை அகற்றி, பண்புடையவனாய், ஒழுக்கம் உடையவனாய், பிறர்க்குப் பயன்படுபவனாய் வாழ முற்படுவதே சமய

வாழ்க்கையாகும். இவற்றிற்கு அப்பால் அனைத்தையுங் கடந்து நிற்கின்ற ஒன்றை, கடவுள் என்ற ஒன்றை, மனத்தில் ஏற்றுக்கொள்பவனாய் வாழ்பவனே சமய வாதியாவான்.

எனவே, கடவுள், மனித வாழ்வு என்ற இவை இரண்டினிடையே உள்ள தொடர்பு, இவ் வாழ்விலிருந்து கடவுளை அடையும் நெறி என்பவை பற்றிப் புகட்டுவதே சமயம் எனப்படும். இதுவே சமயம் எனில் பல்வேறு சமயங்கள் தோன்றவேண்டிய இன்றியமையாமை யாது என்ற வினா எழலாம். மக்கள் அனைவரும் ஒருபடியினராக இல்லையன்றோ? அவர வர்கள் வாழும் இடம், அதன் தட்பவெப்ப நிலை, சுற்றுச் சூழ்நிலை என்பவற்றால் பாதிக்கப்படுவது ஒருபுறம். மேலும், இவை அனைத்தும் ஒன்றாக உள்ள நிலையில் வாழும் பல்வேறு மனிதரை எடுத்துக் கொண்டாலும் அவர்கள் வளர்ச்சியும் பல்வேறு படிகளில் இருக்கக் காணலாம். எனவே, இவர்கள் அனைவர்க்கும் ஒரே சமயம் பயன்படுமாறில்லை. ஆகவேதான், ஒவ்வொரு கருத்தை வலியுறுத்திக் கூறும் பல்வேறு சமயங்கள் அவ்வக் காலத்திற்கு ஏற்பவும் இடத்துக்கு ஏற்பவும் தோன்றலாயின.

இந்த அடிப்படையை மனத்துட்கொண்டு தமிழ் மொழியின் பரப்பைக் காண்டல் வேண்டும். பிற் காலத்தில் வேற்று நாடுகளில் தோன்றி இந் நாட்டில் குடிபுகுந்த கிறிஸ்தவம், இஸ்லாம் ஆகிய இரண்டு தவிர ஏனைய சைவம், வைணவம், சைனம், பௌத்தம் ஆகிய நான்கும் இம் மொழியில் மிகுதியான இடம் பெற்றுள்ளன. கிறிஸ்தவமும் இஸ்லாமும் பிற் காலத்தே

இந்நாட்டில் பரவினமையின், அதற்கேற்ற முறையில் குறைந்த அளவு இம் மொழியில் இடம்பெற்றுள்ளன.

தமிழ் இலக்கிய வரலாறு என்று எடுத்துக் கொண்டால், தொல்காப்பியம் முதல் பாரதிதாசன் கவிதைகள் வரை இலக்கியம் பரவிக் கிடக்கிறது. கிறிஸ்துநாதர் தோற்றத்தின் முற்பட்டது என்று பலராலும் ஒப்புக் கொள்ளப்பெற்ற தொல்காப்பியம் என்ற இலக்கணம் ஏனைய மொழி இலக்கணம் போன்றதன்று. ஓர் இன மக்கள் பேசும் மொழிக்கு மட்டும் இலக்கணம் வகுக்காமல் அம்மக்கள் வாழ்க்கைக்கும் இலக்கணம் வகுத்த பெருமை உலக மொழிகளுள் தமிழ்மொழி ஒன்றுக்கு மட்டுமே உண்டு. வாழ்வுக்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியம், வாழ்வு நடைபெறுவதற்கு நிலைக்களமாயுள்ள இவ் வுலகையே ஐந்து பிரிவுகளாகப் பிரித்து, ஒவ்வொன் றிற்கும் ஒவ்வொரு கடவுளைக் கூறிச் செல்கிறது. 'மாயோன் மேய காடுறை உலகம், சேயோன் மேய மைவரை உலகம்' (தொல். அகம்—5) என்ற முறையில் பேசுவதுடன், நிலத்தில் உள்ள கருப் பொருள்களைப் பேசும்போதும் 'தெய்வம், உணாவே, மா, மரம்' (தொல். அகம்—20) என்று பேசிச் செல்கிறது. மக்கள் வாழ்வு முழுமுதற் பொருளின் ஆணைக்குட்பட்டு நடை பெறுகிறது என்ற கருத்தையும் ஏற்றுக்கொண்டு, 'ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின் ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப' (தொல். களவு—1) என்றும் கூறிச் செல்கிறது.

குறிப்பிட்ட ஒரு சமயத்தின் சாயல் பெறாமல் கடவுட் கொள்கைபற்றிப் பேசுதலின், தமிழரின் ஆதிநூல் என்று பேசப்பெறும் தொல்காப்பியத்தில்

சமயம் இடம்பெறுகிறது எனக் காண்கிறோம். இதனை யடுத்துத் தோன்றிய திருக்குறளிலும் தனியொரு சமயத்தின் சாயல் இன்றிக் கடவுட் கொள்கையும் சமயமும் பேசப்பெறுதலை அனைவரும் அறிவோம். 'ஆதி பகவன் முதற்றே உலகு' (குறள்—1), 'எண்குணத்தான் தாளை வணங்காத் தலை' (குறள்—9), 'கற்றதனாலாய பயன் என்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅரெனின்' (குறள் —2) என்பன போன்ற குறள்கள், சமயம் இத் தமிழர் வாழ்வில் மிக ஆழமான ஓர் இடத்தைப் பெற்றுவிட்டமையையே அறிவிக் கின்றன.

இனி, இக் குறளுக்கு முன்னர் இருநூறு ஆண்டு களின் இடைப்பட்டுத் தோன்றிய சங்க இலக்கியங் களில் கடவுட் கொள்கையும் கடவுளர் பெயரும் விரிவாகப் பேசப்படுதலையும் அறியமுடியும். 'நீலமேனி வால் இழை பாகத்து ஒருவன் இருதாள் நிழற்கீழ் மூவகை உலகும் முகிழ்த்தன முறையே' (ஐங்குறு—1) என்ற பாடலிலிருந்து புறம், அகம் ஆகிய வற்றில் ஆங்காங்கே கடவுட் பெயர்கள் பேசப் படுதலைக் காண்கிறோம். இந்நிலையில் யாவற்றையும் கடந்து நிற்பதும், எங்கும் நிறைந்ததுமான முழுமுதற் பொருள் தனி மனிதனுடைய மன அளவில் காட்சி தரும் ஒன்றாகி வடிவும், உருவும், பெயரும் தாங்கி நிற்கின்ற நிலையையும் சங்கப் பாடலில் காண்கிறோம். எல்லாவற்றையும் கடந்து நிற்கும் முழுமுதற் பொருளாயினும் அப் பரம் பொருள் கருதுவான் அறிவின் எல்லைக்கேற்ப வடிவும் உருவுந்தாங்கி நிற்கும் தனிப்பட்டவன் வழிபடு கடவுளாகக் (Personalised God) காட்சி தருவதைச் சங்கப்பாடல் அறிவுறுத்துகிறது. ஆலமர் செல்வன், முருகன், திருமால், கொற்றவை

சமயம் இடம்பெறுகிறது எனக் காண்கிறோம். இதனை யடுத்துத் தோன்றிய திருக்குறளிலும் தனியொரு சமயத்தின் சாயல் இன்றிக் கடவுட் கொள்கையும் சமயமும் பேசப்பெறுதலை அனைவரும் அறிவோம். 'ஆதி பகவன் முதற்றே உலகு' (குறள்—1), 'எண்குணத்தான் தாளை வணங்காத் தலை' (குறள்—9), 'கற்றதனாலாய பயன் என்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅரெனின்' (குறள் —2) என்பன போன்ற குறள்கள், சமயம் இத் தமிழர் வாழ்வில் மிக ஆழமான ஓர் இடத்தைப் பெற்றுவிட்டமையையே அறிவிக் கின்றன.

இனி, இக் குறளுக்கு முன்னர் இருநூறு ஆண்டு களின் இடைப்பட்டுத் தோன்றிய சங்க இலக்கியங் களில் கடவுட் கொள்கையும் கடவுளர் பெயரும் விரிவாகப் பேசப்படுதலையும் அறியமுடியும். 'நீலமேனி வால் இழை பாகத்து ஒருவன் இருதாள் நிழற்கீழ் மூவகை உலகும் முகிழ்த்தன முறையே' (ஐங்குறு—1) என்ற பாடலிலிருந்து புறம், அகம் ஆகிய வற்றில் ஆங்காங்கே கடவுட் பெயர்கள் பேசப் படுதலைக் காண்கிறோம். இந்நிலையில் யாவற்றையும் கடந்து நிற்பதும், எங்கும் நிறைந்ததுமான முழுமுதற் பொருள் தனி மனிதனுடைய மன அளவில் காட்சி தரும் ஒன்றாகி வடிவும், உருவும், பெயரும் தாங்கி நிற்கின்ற நிலையையும் சங்கப் பாடலில் காண்கிறோம். எல்லாவற்றையும் கடந்து நிற்கும் முழுமுதற் பொருளாயினும் அப் பரம் பொருள் கருதுவான் அறிவின் எல்லைக்கேற்ப வடிவும் உருவுந்தாங்கி நிற்கும் தனிப்பட்டவன் வழிபடு கடவுளாகக் (Personalised God) காட்சி தருவதைச் சங்கப்பாடல் அறிவுறுத்துகிறது. ஆலமர் செல்வன், முருகன், திருமால், கொற்றவை

என்ற பல பெயர்களில் பரம்பொருள் பேசப் பெறுகிறது.

சங்கப் பாடல்களுள் ஒன்றாய பத்துப் பாட்டுள் திருமுருகாற்றுப்படை இடம் பெற்றிருப்பதும் எட்டுத் தொகையுள் பரிபாடல் இடம்பெற்றிருப்பதும் இத் தமிழ் மொழியில் சமயம் எந்த அளவிற்கு ஊடுருவி நின்றது என்பதை அறிவுறுத்தும். சமயம் என்பது தமிழரின் புறப்போர்வையாக அமையாமல் அகத்தே கலந்து வாழ்வில் இடம் பெற்றிருந்தது என்பதைப் பரிபாடல் போன்ற நூல்கள் காட்டுகின்றன. கடவுளைப் பற்றியே பேசும் மேற்கூறியவை தவிர, புறநானூறு போன்ற உதிரிப் பாடல்களிலும் தனிப் பட்ட கடவுளர் பெயர், இயல்பு போன்றவை பேசப் படுகின்றன.

நன்றாய்ந்த நீள்நிமிர்சடை
முது முதல்வன் (புறம் – 166)
கறைமிடற்று அண்ணல் (புறம் – 55)

என்பன போன்ற குறிப்புகள் இறைவனையும், புறம் 14, 16, 23, 120, 125 — ஆகிய பாடல்கள் முருகனையும் குறிப்பிடுகின்றன. மேலும், அவனுக்குக் கோயில் இருந்தமையைப் புறம் 299–ஆம் பாடலும் இன்றும் தமிழர்க்குச் சிறந்த இடமான திருச்செந்தூரில் அன்றே முருகனுக்குக் கோயில் இருந்தமையை,

வெண்தலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறை (புறம் – 55)

என்னும் அடிகளும் பேசிச் செல்கின்றன.

கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பை யும் இறைவனிடம் மனிதன் வேண்டுவது யாது

*என்பதையும் பரிபாடலின் ஒரு பாடல் மிகச் சிறந்த முறையில் அறிவித்துச் செல்கிறது.*

... ... யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருள்இணர்க் கடம்பின் ஒலிதா ரோயே
(பரிபாடல், 5: 78–81)

*அந்தப் பழங்காலத்திலேயே இத் தமிழர் பயன் கருதி இறைவனை வழிபடும் காமிய வழிபாட்டை மறுத்துப் பயன் கருதாத வழிபாட்டை வேண்டி நின்றனர் என்பது விளங்குகிறது. 'அருளும், அன்பும், அறனும் மூன்றும்' வேண்டும் என்று கடவுளிடம் வேண்டும் இத் தமிழர் சமய வாழ்க்கையின் உச்சிக்கே சென்று விட்டனர் என்று கூறினால் மிகையாகாது.*

*இறைவனுக்கு இவ்வாறு வடிவம், உருவம், நிறம் முதலியன தந்து பேசினாலும் சங்ககாலத் தமிழர் பரம் பொருள் குணங்குறி கடந்தது என்பதையும் அனைத்துமே அவனுடைய வடிவாகும் என்பதையும் நன்கு அறிந்திருந்தனர்.*

மாநிலம் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பௌவம் உடுக்கை ஆக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
இயன்ற எல்லாம் பயின்று அகத் தடக்கிய
வேத முதல்வன் என்ப (நற்றிணை – 1)

*என்று நற்றிணைப் பாடல் இவர்களது பரந்துபட்ட கடவுட் கொள்கையையும் அனைத்திலும் நிறைந்திருப்பவன் இறைவனே என்ற கருத்தையும் அறிவுறுத்துகிறது. இதே சங்கப் பாடல்களில் சுவர்க்கம், நரகம்*

என்பவைபற்றியும், இந்திர உலகம் போன்ற போக பூமிகள் பற்றியும் குறிப்புகள் வருகின்றன.

என்றாலும், இங்குக் காணப்பெறும் சமயக் கருத்துகள் இந்நாட்டிற்கே சொந்தமானவை என்பதை மறத்தலாகாது. இமயம் முதல் குமரிவரை அறிந்திருந்த இத் தமிழர் 'முத்தீ விளக்கில் துஞ்சும் பொற் கோட்டு இமயமும் பொதியமும் போன்றே' (புறம்-2) என்று பாடினாலும் இவர்களுடைய சமயக்கொள்கை பிற நாட்டிலிருந்தோ பிற பகுதிகளிலிருந்தோ கடன் வாங்கியது அன்று. மேலும், சங்க காலச் சமயம் இறையுணர்வை வலியுறுத்தியதுபோலச் சடங்குகள், குறிகள், அடையாளங்கள் என்பவற்றை வலியுறுத்த வில்லை என்பதும் சிந்திக்கத்தக்கது. சமயம் என்பது வாழ்வின் வேறானதாய், வேண்டுமானபொழுது மேற்கொள்வதாய் அமைந்த ஒன்று என்ற கருத்தை அற்றைத் தமிழர் ஏற்கவில்லை என்றே தோன்றுகிறது. தனி மனிதனுடைய மனத்தில் அமைவது சமயம் என்றால், அவனுடைய வாழ்வுக்கு வழிகாட்டுவது சமயம் என்றால் இதில் மாறுபாட்டுக்கும் கருத்து வேற்றுமைக்கும் இடம் ஏது?

இதனால்தான் போலும் இரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய சிலப்பதிகாரம் எல்லையற்ற சகிப்புத் தன்மையுடன் எல்லாச் சமயங்களைப் பற்றியும் அச் சமயக் கடவுளர் பற்றியும் பேசுகிறது. சிவபெருமான், திருமால், கண்ணன், பலராமன், கொற்றவை, முருகன், அருகதேவன் ஆகிய அனைவரையும் வேறுபாடற்ற நிலையில் பேசுவதுதான் சிலம்பின் தனிச் சிறப்பாகும். இத்தகைய சமய சகிப்புத் தன்மை இரண்டாம் நூற்றாண்டு முடியத் தமிழ்நாட்டில் நிலவி வந்தது

எனலாம். பிற நாட்டார் தமிழ்நாட்டில் படையெடுத்து வந்து காலூன்றிய பிறகே, சமயப் போராட்டமும் சகிப்பற்ற தன்மையும் இந் நாட்டில் கால்கொள்ளலாயின. மூன்றாம் நூற்றாண்டையொட்டிக் களப்பிரர் படையெடுப்பின் பின்னரே இத்தகைய ஒரு நிலை இவண் உண்டாயிற்று. களப்பிரர் வருவதற்கு முன்னரே கூட அருக, பௌத்த சமயங்கள் தமிழ்நாட்டில் நன்கு நிலைபெற்றுவிட்டன எனினும் போராட்டம் தோன்றவில்லை. களப்பிரரும் அருகரேயாயினும் அவர்கள் இந்நாட்டில் கால்கொண்ட பின்னர் சமய மாறுபாடுகள் முகிழ்த்தன.

இதனை எண்ணும்போது ஓர் உண்மை புலனாகும். சமணமும் பௌத்தமும் களப்பிரர் வரவுக்கு முன்னும் தமிழ்நாட்டில் இருந்தன எனினும், பகைமைக்கு இடமில்லை. ஆனால், களப்பிரர் வரவின் பின்னர் சமயத்தின் பேரால் பூசல் தோன்றிற்று என்றால் என்ன பொருள்? **அரசியல் போராட்டத்திற்குச் சமயத்தைப் போர்வையாகக் கொண்டனர்** என்பதே பொருள். உலக வரலாற்றை ஒரு கண்ணோட்டம் விடுபவர்க்கும் இது புரியாமற் போகாது. நூற்றுக்குத் தொண்ணூறு அரசியற் போராட்டங்கள் சமயத்தின் பெயராலேயே நிகழ்த்தப் பெற்றன. தமிழ்நாடும் இதற்கு விலக்கன்று. களப்பிரர் வருகைக்கு முன்னர்ப் பலவாய சமயங்கள் நாட்டில் நடமாடினாலும் தம்முள் எவ்விதக் காழ்ப்புமின்றித் தமிழை வளர்த்தன. அதைவிடச் சிறப்பொன்றும் உண்டு. வடநாட்டில் தோன்றிய சமணமும் பௌத்தமும் தமிழ்நாட்டில் புகுந்தவுடனே, இங்கு இயல்பாகவே தோன்றி வளர்ந்த சைவ வைணவங்களோடு மாறுபாடின்றிக் கொண்டு கொடுத்துக்

கொண்டன. ஒரு சமயத்தின் கொள்கை மற்றொரு சமயத்திற்குச் சென்று பரவலாயிற்று.

வேற்று நாட்டவர் வரவும் தங்கலும் இந்த நல்ல சூழ்நிலைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டன. சகிப்பற்ற தன்மையும், போராட்டமும், காழ்ப்பும் தமிழர்க ளிடையே கால் கொள்ளலாயிற்று. இந்த நிலையைத் தான் மணிமேகலையில் முதன் முதலில் காண்கிறோம். ஒரு குடிகாரன் சமணத் துறவியை எள்ளி நகையாடி தாக மணிமேகலை பாடிச் செல்கிறது. காழ்ப்பு காரணமாகப் பிற சமயத்தை எள்ளி நகையாடும் தீய பழக்கத்திற்கு வித்திட்ட பெருமை மணிமேகலை யையே சாரும். சிலம்பின் சகிப்புத்தன்மை எங்கே? மேகலையின் சகிப்பற்ற காழ்ப்பு எங்கே? இவை இரண்டும் சம காலத்தவை என்று கூறுவோர் இன்றும் உளர்! அடிப்படையில் ஏற்பட்ட இந்த மாறுபாடு நூலின் நடையையும் பாதித்துவிட்டது. சிலம்பின் நடைக்கும் மேகலையின் நடைக்கும் எத்துணை வேற்றுமை!

சிலம்பின் காலம்வரை சமயம் மக்கள் வாழ்வில் ஊறி இடம் பெற்றுவிட்ட ஒன்றாயிருந்தது. மக்களை மாக்கள் கூட்டத்திலிருந்து பிரிக்கும் கருவியாகச் சமயம் அமைந்திருந்தது. அவர்கள் உணர்வில் இடம் பெற்றிருந்த சமயம் அவ்வுணர்வின் வெளிப்பாடாகிய மொழியிலும் இலக்கியத்திலும் இடம் பெற்றிருந்தது. வாதத்திற்கும் போராட்டத்திற்கும் இங்கு இடமே இல்லை. உதாரணமாக ஒன்றைக் கூறலாம். மாங்காட்டு மறையோன் கவுந்தி அடிகளாகிய சமணத் துறவிக்கு மதுரை செல்லும் வழியை விவரித்துக் கூறுகிறான். இன்ன இன்ன குளங்களில் (புண்ணிய

சரவணம், பவகாரணி, இட்டசித்தி) மூழ்கினால், இன்ன இன்ன பயன் விளையும் எனப் பேசுகிறான். ஆனால், அதனை ஏற்றுக்கொள்ள விரும்பாத சமணத் துறவியார் மிகக் கண்ணியமாக அது தேவை இல்லை என மறுக்கிறார். சமயப் பூசலைக் காட்டாமல் கண்ணியத்துடன் ஒருவர் கருத்தை மறுக்கும் இந்த அளவுக்குப் பண் பட்டிருந்த சமயம் வாழ்வின் ஒரு பகுதியாக அமைந்திருந்தவரை இதே அளவு பண்பாட்டுடன் இலங்கிற்று. சமயம் என்பது அறிவின் துணைகொண்டு ஆயப்படுவதொன்று அன்று; உணர்வின் துணை கொண்டு அனுபவிக்கப்படுவது. இது கருதியே போலும் ஞானசம்பந்தர் 'ஏதுக்களானும் எடுத்த மொழியானும் மிக்குச் சோதிக்க வேண்டா, சுடர் விட்டுளன் எங்கள் சோதியான்' (3-54) என்று கூறிப்போனார். தாயுமானவரும் 'அருளால் எவையும் பாரென்றான், அத்தை அறியாதே சுட்டி என் அறிவாலே பார்த்தேன், இருளான பொருள் கண்டதல்லால் கண்ட என்னையும் கண்டிலன்' என்று கூறினார் (தாயு. ஆனந்தக் களிப்பு, 13). உணர்வின் அடிப்படையில் சமயம் இருக்கும்வரை மாறுபாட்டிற்கு இடம் இல்லை. ஆனால், உணர்வை விட்டுவிட்டு அறிவின் துணை கொண்டு சமயத்தை நிலைநாட்ட முற்பட்டால் விளைவது போராட்டமே. காரணம் அறிவின் கூர்மைக்கு ஏற்பக் கருத்துகளை ஏற்கவும் மறுக்கவும் இயலுமன்றோ?

மேலும், அறிவினால் ஒன்றை ஆயும்வரை, ஆயும் அறிவு, ஆயப்படும் பொருள், ஆய்தலாகிய தொழில் என மூன்று பொருள் இருந்தே தீரும். இந்நிலை உள்ளவரை சமய அனுபவம் கிட்டாது. உணர்வு வழிப்பட்ட சமய அனுபவத்தில் அனுபவிப்பவன்,

அனுபவப்பொருள், அனுபவம் என்ற மூன்றும் அற்று அனுபவம் ஒன்றே எஞ்சும்.

சங்க இலக்கியம் முழுதும் உணர்வின் அடிப் படையில் தோன்றிய கவிதைகள். அதனால், அங்குச் சமயப் போராட்டத்திற்கு இடமில்லை. திருக்குறள் அறிவின் அடிப்படையில் இயற்றப் பெற்றதாயினும், சமயத்தின் இந்தச் சிறப்பை உணர்ந்து, அதனை அறிவின் துணைகொண்டு ஆய முற்படாமல், உணர்வின் துணைகொண்டு ஏற்றுக்கொண்டு, அதனைக் கொண்டு செலுத்தும் வழிதுறைகளை மட்டும் கூறிச் சென்றது.

சங்கப்பாடல், சிலம்பு, குறள் என்பவற்றுடன் சமய உணர்வு மங்கி அந்த இடத்தில் சமய அறிவு வளரலாயிற்று. உணவிற்கு அதிக இடந்தராமல், அறிவுக்கு அதிக இடம் தந்து ஆயும் தொழிலில் சமயத்தைக் கொண்டுவிட்ட பெருமை புத்த சமயத்தையே சாரும். இதன் பிறகு ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் சமயத்தை நிறுவ அறிவின் உதவியையே நாடினர். இதன் உண்மையை அறிய அதிகத்தூரம் செல்ல வேண்டா. 'ஏதுக்களானும் எடுத்த மொழியானும் மிக்குச் சோதிக்க வேண்டா' என்று சமய குரவருள் ஒருவராகிய ஞான சம்பந்தரே கட்டளை இட்டிருப்பவும், சைவர்கள் சிவஞான போதம், சித்தியார் முதலிய அளவை நூல்களால் தம் சமயத்தின் பெருமையைப் பறைசாற்ற வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. உணர்வின் துணைகொண்டு 'பொருள் ஒன்று' என்று உணர்வது போக, 'அத்வைதம்' என்பதற்கு அறிவின் துணைகொண்டு பொருள் காண முனைந்தனர். 'இரண்டு அல்ல', 'இரண்டு இல்லை'

'இரண்டுதான்' என்பன போன்ற வாதங்கள் தோன்றலாயின.

பழைய மரபில் நன்கு ஊறிய காரணத்தால் போலும் இந்தச் சமயப் பூசல்கள் தமிழில் அதிகம் பரவவில்லை. வடமொழியில் தடை விடை நூல்கள் மலிந்திருப்பதுபோலத் தமிழில் இல்லை. தமிழ் மொழியைப் பொறுத்தமட்டில் அளவைகளின் உதவி கொண்டு சமயத்தை நிறுவுவதைக் காட்டிலும் அகத்தே நிகழும் உணர்வு கொண்டே சமயத்தைப் பரப்பும் நூல்களே மிகுதியாகும். அதனால்தான் போலும், சமய இலக்கியம் என்ற பெயரில் பக்தி இலக்கியங்களே தமிழில் மிகுதியும் தோன்றின. உலக மொழிகளில் பக்தி இலக்கியம் என்று எடுத்துக் கொண்டால், தமிழ் மொழியின் அருகில் வரக்கூட எந்த மொழிக்கும் உரிமை இல்லை. இரண்டாவது இடத்தை ஹீப்ரு மொழியும் மூன்றாவது இடத்தை சமஸ்கிருதமும் பெறும். சிவஞானபோதம், சித்தியார் போன்ற ஒருசில சாத்திரங்கள் தவிர, சைவத்திலாகட்டும் வைணவத்திலாகட்டும் சாத்திர நூல்கள் குறைவுதான். வட மொழியிலிருந்து தமிழாக்கம் செய்யப்பெற்ற நூல்களும் சில உண்டு. தோத்திர நூல்கள் இத்துணை மிகுதியாகப் பெற்றுள்ள தமிழ் மொழி சாத்திர நூல்களை மிகுதியும் பெறாத காரணம் ஒன்றுண்டு என்று நினைக்கத் தோன்றுகிறது. அன்பு வழியாலும் பக்தி நெறியாலும் மட்டுமே சமயத்தை வளர்க்க முடியும்; விவகார ஞானத்தாலும் வாதத்தாலும் சமயத்தை நிறுவ முயலலாமே தவிர, வளர்க்க முடியாது. சமயம் என்பது உணர்வுக்குரியதொன்றே தவிர அறிவுக்கு உரிய தொன்றன்று. அறிவுக்கு அப்பாற்பட்ட ஒன்றை, கடந்து நிற்கும் ஒன்றை அறிவின் துணைகொண்டு ஆயப்

புகுவதைத் தமிழர் விரும்பவில்லை என்றே தோன்றுகிறது. இது கருதியே போலும்,

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்

(திருமந். 3059)

என்று பழைய திருமந்திரமும்,

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில் புகும் அரசே

— (அருட்பா)

என்று புதிய அருட்பாவும் பறைசாற்றுகின்றன.

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்

— (திருக்குறுந். 90)

என்று திருநாவுக்கரசரும்,

ஆடி ஆடி அகங் கரைந்து, இசை
பாடிப்பாடிக் கண்ணீர் மல்கி எங்கும்
நாடிநாடி நரசிங்கா என்று

(நாலாயிரம், 2818)

என நம்மாழ்வாரும் அருளிப் போயினர்.

நம் காலத்து வாழ்ந்த வள்ளலாரும்,

நினைந்துநினைந்(து) உணர்ந்(து) உணர்ந்து
நெகிழ்ந்துநெகிழ்ந் தன்பே
நிறைந்துநிறைந்(து) ஊற்றெழுங்கண்
ணீரதனால் உடம்பு
நனைந்துநனைந்(து) அருளமுதே
நன்னிதியே ஞான

நடத்தரசே என்னுரிமை
நாயகனே என்று
வனைந்துவனைந்(து) ஏத்துதும்நாம்
வம்மினுல கியலீர்

என்று அன்பின் வழியினாலன்றிச் சமய வாழ்க்கை கைகூடாதென்றும் இறைவனை அடைய முடியாது என்றும் கூறினர்.

இந்த அடிப்படையை மனத்துட்கொண்டு, பார்த்தால், தமிழ் மொழியில் சாத்திரங்கள் அதிகம் தோன்றாமல் தோத்திரங்கள் அதிகம் தோன்றிய தற்கும் உரிய காரணத்தை ஒருவாறு அறிய முடியும். என்றாலும், தமிழில் தோன்றிய பேரிலக்கியங்கள் அனைத்தும் சமயத் தொடர்புடனேயே உள்ளன என்பதை மறத்தலாகாது. சிலப்பதிகாரம், மணி மேகலை, பெருங்கதை, வளையாபதி, சூளாமணி, நீலகேசி, குண்டலகேசி, தேவாரம், திருவாசகம், நாலாயிரப் பிரபந்தம், சிந்தாமணி, பெரியபுராணம், கம்பராமாயணம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம், வில்லி பாரதம், திருப்புகழ், பிரபுலிங்க லீலை, குமரகுருபரர் பிரபந்தங்கள் ஆகிய இவை என்றும் நிலைத்து நிற்கும் இலக்கியங்கள். இவற்றுள் ஒன்றேனும் சமயத் தொடர்பில்லாத இலக்கியமா என்பதைச் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும்.

பிற மொழிகளில் பல்வேறு துறைகளில் இலக்கியம் உண்டு; அவற்றுள் சில சமயம்பற்றியும் இருக்கும். ஆனால், இத் தமிழ் மொழியில் இலக்கியம் என்ற பெயரைப் பெறக்கூடியவை அனைத்துமே சமயத் தொடர்புடையனவாய் இருத்தல் அறிதற் குரியது. சமயத் தொடர்பற்ற நூல்கள் தமிழிலும்

தோன்றியிருக்கலாம். ஆனால், அவற்றிற்குக் காலத்தை வென்று நிலைபெறும் வன்மை இல்லைபோலும்; எனவே, அவை இன்றுவரை நின்று நிலவவில்லை. இப் பேரிலக்கியங்கள் ஒருபுறம் இருக்கச் சிற்றிலக்கியங்க ளாகிய பிள்ளைத்தமிழ், குறவஞ்சி, பள்ளு, உலா ஆகியவையுங்கூடச் சமயத் தொடர்புடையனவாகவே அமைந்துள்ளன. ஆதலால்தான், 'சமயமின்றித் தமிழில்லை' என்று கூறுவது பொருள் பொதிந்த மொழியாக அமையக் காண்கிறோம்.

# 18

# எண்ணத்தின் ஆற்றல்

*மனிதன் விலங்கினின்றும் வளர்ந்தவன் என்று இன்றைய விஞ்ஞானம் கூறுகிறது. இவ்வாறு வளர்வதைக் 'கூர்தல் அறம்' (Evolution) என்று அவர்கள் குறிக்கின்றனர். 19-ஆம் நூற்றாண்டில் தோன்றிய மேலை நாட்டு விஞ்ஞானி 'டார்வி'ன் கருதுகோளில் பிறந்தது இக்கொள்கை. ஆனால் டார்வின் இம்மண்ணிடைத் தோன்றுவதற்கு ஆயிரம் ஆண்டுகளின் முன்னரே இந்நாட்டில் தோன்றிய சமயப் பெரியாராகிய மணிவாசகப் பெருமான் இக் கருத்தை விரிவாகவே கூறிச் சென்றுள்ளார்.*

புல் ஆகி, பூண்டாய், புழுவாய், மரம் ஆகி
பல் விருகம் ஆகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய், மனிதராய், பேயாய், கணங்களாய்
வல்அசுரர் ஆகி, முனிவராய், தேவராய்,
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்

(சிவபுராணம் 26–31)

**கூர்தல் அற முறை**

*கவிதை வடிவு கெடாமல் இருப்பதற்குப் பெரியார், கூர்தல் அறத்தில் முறை மாற்றம் செய்து*

கூறி உள்ளார் எனினும் இதில் கூறப் பெற்றுள்ள கூர்தல் அறத்தைக் கவனியாமல் இருத்தல் இயலாது. ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய சமயப் பெரியார் கூறும் கூர்தல் அறம் டார்வினின் அறத்தைவிட நுண்மையானது. டார்வினின் கூர்தல் அறம் மனித னுடன் நின்று விடுகிறது. நம் மணிவாசக அடிகளாரின் அறம் அதனைக் கடந்து பல படிகள் மேலே செல்கிறது. மனிதனுக்குப் பிறகு, பேய், வல்அசுரர், முனிவர், தேவர் என்ற பல நிலைகளையும் பற்றி பேசுகிறது. மேனாட்டார் இன்று இதனை ஏற்றுக் கொண்டாலும், கொள்ளா விட்டாலும் இக்கருத்தை ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒரு காலம் வரத்தான் போகிறது.

## பூத உடல், நுண் உடல்

மனிதன், பேய், அசுரர், முனிவர், தேவர் என்ற பல்வேறு நிலைகளில் உள்ள உயிர் வருக்கத்திற்கு ஒரு பொதுவான தொடர்ச்சி இருத்தல் வேண்டும். அதுவே மனமும் அதில் தோன்றுகின்ற எண்ணம் என்பவையு மாகும். ஐந்து பூதங்களினால் ஆகிய இந்த உடலுடன் கூடிய மனிதன், நுண் உடலுடன் கூடிய பேய், தேவர், அசுரர் என்ற எல்லா இனத்துக்கும் பொதுவாக உள்ளது மனம் என்ற ஒன்றுதான். மனிதன் மனிதனாக இருப்பதற்குக் காரணமே மனம் என்ற ஒன்று அவனிடம் அமைந்திருப்பதுதான். மனிதனிடம் பொறிகள் (மெய், வாய், கண், மூக்கு, செவி) உள்ளன. இப்பொறிகளின் மூலமாக அவன் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற புல அனுபவங்களைப் பெற முடிகிறது. என்றாலும் என்ன? பொறிகள் மட்டும் இருந்து மனம் இல்லையானால் புல அனுபவம் ஏற்பட வாய்ப்பில்லை. விலங்குகட்கு ஐம்பொறிகள் உண்டு.

அவை ஓசை முதலியவற்றைக் கேட்கும், பார்க்கும், சுவைக்கும். ஆனாலும் மனம் இல்லாத காரணத்தால் புல அனுபவம் அவற்றுக்கு இல்லை. அனுபவத்தைப் பெற உதவுவது மனம் என்ற ஒன்றுதான்.

## மனத்தின் தொழில்

இந்த மனத்தின் தலையாய தொழில் எண்ணுவது தான். எண்ணத்தின் மூலமாகவே மனத்தின் இருப்பை நாம் அறிய முடிகிறது. மனம் என்ற அந்த ஒப்பற்ற கருவி இரு வகைகளில் பணி புரிகின்றது. அறிவை தொழிற்படச் செய்வதும் இம் மனந்தான். அறிவு எவ்வாறு தொழிற்படுகிறது? அதுவும் எண்ணத்தின் மூலமாகத்தான். மனத்தில் தோன்றும் எண்ணமே அறிவைத் தூண்டித் தொழிற்படச் செய்கிறது. தொழிற் படுவது அறிவேயானாலும் எண்ணம் அல்லது சிந்தனையின் மூலமாகவே அறிவும் தொழிற்படுகிறது என்பதை அறிவோம். எண்ணம் என்பது சொற்கள், மொழி என்பவற்றின் உதவியாலேயே அறிவை வளர்க்கிறது. மாபெரும் விஞ்ஞானியான ஐன்ஸ் டினைப் பார்த்து வியப்படைகிறோம். உலகம் கண்டு வியக்கும் 'ரிலட்டிவிட்டி கொள்கை'யை அவர் காண்பதற்கு உதவியாக இருந்தது எது? எந்த ஒரு விஞ்ஞானக் கருவியும் உதவவில்லை. அவருடைய எண்ணம் ஒன்றுதான் தொழிற்பட்டது. இதுவரை உலகில் உள்ள விஞ்ஞானிகள் அனைவரும் கனவிலும் கருதாத ஒரு மாபெரும் தத்துவத்தை அவர் எடுத்துக் கூற உதவியது அவருடைய எண்ணம் மட்டுமே என்பதை அறியும்பொழுது எண்ணத்தின் ஆற்றல் எத்தகையது என்பதை அறிய முடிகிறது.

## திண்ணிய எண்ணம்

'எண்ணிய எண்ணியாங்கு எய்துப, எண்ணி யார் திண்ணியார் ஆகப்பெறின்' என்பது வள்ளுவம். எண்ணியர் என்றால் எண்ணுபவர் என்பது பொருளாகும். திண்ணியர் என்றால் வலுவுடையவர் என்பதே பொருள். வலுவுடையவர் என்று கவிஞன் கூறும்பொழுது எண்ணுபவருடைய உடல் வலிமை முதலியவற்றையா குறிக்கிறான்? உறுதியாக இல்லை என்று கூறிவிடலாம். அப்படியானால் திண்ணியர் என்பதன் பொருள் யாது? வலிமையான எண்ணம் உடையவர் என்பதே இதன் பொருளாகும். எண்ணும் எண்ணத்தில் கூட வலியின்மை, வலிமை என்ற வேறுபாடு உண்டா என்று வினவலாம். ஆம்! எண்ணங்களில் வலிமையான எண்ணங்கள் உண்டு. 45 கிலோ எடையுள்ள ஒரு மனிதன் சூரியன் அத்த மிக்காத ஒரு சாம்ராஜ்யத்தை எவ்வித ஆயுத பலமும் இல்லாமல் எதிர்த்தார் என்றால் அது எவ்வாறு முடிந்தது? அவருடைய எண்ணத்தின் வலுவி னாலேயே இது இயன்றது! அதைவிடப் புதுமை என்ன என்றால் அந்த எண்ணத்தின் எதிரே அந்த சாம்ராஜ்யமும் தலை தாழ்ந்து தோல்வியுற்றது! அம் மட்டோ? ஊக்கம் இழந்து, எவ்விதக் குறிக்கோளும் இல்லாமல் கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று தளர்ந்து கிடந்த கோடிக்கணக்கான இந்தியர்களை வீறுகொண்டு எழச் செய்ததுவும் அத் தனி மனிதனுடைய எண்ணத்தின் ஆற்றலேயாம்.

## இருவகை மனிதர்கள்

இதன் எதிராக மனக்கோட்டை கட்டிக்கொண்டு எவ்வித முயற்சியும் செய்யாமல் வாழ்ந்து மடிகின்ற

கோடிக்கணக்கான மக்களும் உண்டு. அப்படியானால் இந்த நாட்டின் விடுதலைபற்றி மகாத்மா வருகின்ற வரை யாருமே எண்ணவில்லையா என்ற வினா எழும்? உறுதியாகப் பலரும் இருந்திருப்பர் என்பதே அதற்கு விடை. அவ்வாறானால் விடுதலைபற்றி எண்ணிய அந்தப் பலருக்கும் மகாத்மாவிற்கும் என்ன வேறுபாடு? இருவரும் மனிதர்கள்தாம். இருவரும் எண்ண ஓட்டம் உடையவர்களே! என்றாலும் என்ன? அச் சாதாரண மனிதர்களின் எண்ணங்கள் வலுவற்றுப் போயினமையின் அவர்களால் எதையும் சாதிக்க முடியவில்லை. அவர்கள் மனத்தில் தோன்றிய எண்ணங்களும் 'பொய்யாய்க் கனவாய் மெல்லப் போய்விட்டன!' ஆனால் மகாத்மாவின் எண்ணங்கள் மிக மிக வலுப்பெற்றவை ஆதலின் அந்த எண்ணங் களின் ஆற்றல் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தையே சரித்து விட்டது. இந்த ஓர் உதாரணமே எண்ணங்களின் ஆற்றலை அறிவிக்கப் போதுமானது.

**புத்தரும், வள்ளுவரும்**

பகவான் புத்தர் இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகளின் முன்னரே எண்ணத்தின் ஆற்றலை நன்கு அறிந்திருந்தார். எனவேதான் அவருடைய பொன்மொழிகள் எடுத்துக் கூறும் 'தம்ம பதம்' இக் கருத்தை வலியுறுத்திக் கூறுகிறது. மனிதனின் எண்ணங்கள் அழிவில்லாதவை; வலுவானவை. ஒன்றை ஆக்குவதும் அழிப்பதும் எண்ணங்களே. எனவே மனிதன் தன் எண்ணங்களைத் தூய்மை உடையனவாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று அந்த நூல் கூறுகிறது.

புத்தருக்கு அடுத்தபடியாக எண்ணத்தின் ஆற்றலை நன்கு விளங்கிக் கொண்டவர் திருவள்ளுவ ராவர். அவர் 'மனத்துக்கண் மாசு இலனாதல் அனைத்து அறன்' என்று கூறுவதன் உட்கருத்து இதுவேயாம். இன்னும் விளக்கமாகக் கூற வேண்டிய நிலை வந்தவுடன் எண்ணியர் திண்ணியராய் இருப்பின் எண்ணியவற்றை எண்ணியபடியே அடைவர் என்றும் கூறினார். மனிதனுடைய சிந்தனை, செயல் ஆகிய அனைத்திற்கும் மூலமாக விளங்குவது அவனுடைய எண்ணங்களேயாகும். இந்த நினைவு அல்லது எண்ணம் தோன்றுகிற இடம் யாது என்பதில் விஞ்ஞானிகளிடம் கருத்து வேறுபாடு உண்டு. இன்னுங் கூற வேண்டுமாயின் எண்ணங்கட்கு இத்துணை ஆற்றல் உண்டு என்பதைக்கூட விஞ்ஞானம் இப்பொழுதுதான் உணரத் தொடங்கி யுள்ளது.

## விஞ்ஞானம் கூறும் கருத்து

எண்ணங்கள் தோன்றுவது மூளையின் ஒரு பகுதியிலாகும் என்று கருதுகிற விஞ்ஞானம் சில திடுக்கிடும் கருத்துகளையும் வெளியிடுகிறது. மிகச் சாதாரண மனிதனுக்குக் கூட மாபெரும் செயல்களை நிகழ்த்தக்கூடிய எண்ண ஆற்றல் உண்டு என்றும், சாதாரண மனிதர்கள் தம் மூளையின் இந்த ஆற்றலில் ஒரு சதவிகிதத்திற்கும் குறைவான சிறிய பகுதியைத் தான் பயன்படுத்துகின்றனர் என்றும் கூறுகிறது. மேலும் ஐன்ஸ்டீன் போன்ற ஒப்பற்ற மேதைகள் கூடத் தம் மூளையின் ஆற்றலில் 15 சதவிகிதமே பயன்படுத்து கின்றனர் என்றும் விஞ்ஞானம் கூறுகிறது. 15 சதவிகிதத்தைப் பயன்படுத்திக்கூட ரிலட்டிவிட்டிக்

கொள்கையை ஒருவர் கண்டுபிடித்தார் என்றால் மூளையின் முழு ஆற்றலைப் பயன்படுத்துகிறோர் செய்ய முடியாத செயலே இல்லை என்றுகூடக் கூறலாம் அல்லவா?

எண்ணத்தின் ஆற்றல் இத்துணை அளவுடையது என்பதை நம் முன்னோர் நன்கு அறிந்திருந்தனர். கருவிகளைக் கொண்டு அளந்தறியும் விஞ்ஞானமும் அடிப்படையில் இந்த எண்ணத்தின் ஆற்றலையே பயன்படுத்துகிறது. பல சமயங்களில் ஏதோ ஒன்றைப் பற்றி ஆய்ந்து கொண்டிருக்கும் நாம் கோவையாகத் தருக்க ரீதியில் எண்ணத் தொடங்குகிறோம். ஒவ்வொரு படியாக நம் எண்ணம் வளர்கிறது. ஒவ்வொரு படியிலும் உண்மை ஓரளவு வெளிப் படுகிறது. அறிவின் துணைகொண்டு செய்யப்பெறும் இந்த எண்ண ஓட்டம் படிப்படியாக வளரும்பொழுது ஒவ்வொரு கட்டத்திலும் காணப்படும் உண்மைக்கு முதற் கட்டத்தில் கண்டது அஸ்திவாரமாக அமையக் காண்கின்றோம்.

## விஞ்ஞானியும், மெய்ஞ்ஞானியும்

இவ்வாறு ஒவ்வொரு படியிலும் கண்டவற்றைப் பற்றியே மேலும், மேலும் சிந்திக்கும்பொழுது மேலும் பல உண்மைகள் விளங்கக் காண்கின்றோம். மேலே செல்ல முடியாதபொழுது சாதாரண மனிதர்கள் இதற்கு மேல் "நம்மால் ஆகாது" எனத் தம் முயற்சியை விட்டு விடுகின்றனர். எண்ண ஆற்றல் உடையவர்கள் அவ்வாறு விடுவதில்லை. ஐன்ஸ்டீன் போன்ற விஞ்ஞானிகளும், புத்தர், ஆதிசங்கரர் போன்ற மெய்ஞ் ஞானிகளும் தத்தம் எண்ணங்களின் ஆற்றலை நன்கு அறிந்தவர்களாகலின் விடாப்பிடியாகத் தம் மனத்தில்

எண்ணங்களை வளர்த்துக்கொண்டே செல்கின்றனர். ஐன்ஸ்டீன் பல ஆண்டுகளாகத் தன் ஆராய்ச்சியில் ஈடுபட்டுத் தன் எண்ணத்தின் ஆற்றலை வளர்த்துக் கொண்டார். அதன் பயனாக விஞ்ஞான உலகம் வியக்கும் ஒரு சித்தாந்தத்தை நிறுவினார். ஆதிசங்கரர், புத்தர் போன்ற மெய்ஞ்ஞானிகளும் பல ஆண்டுகள் தம் எண்ணத்தை வளர்த்ததின் பயனாகவே நாம் மெய்யறிவைப் பெற முடிந்தது. இதன் பயனாகவே ஆதிசங்கரர் அத்வைதக் கொள்கையையும் புத்தர் தம் புதிய சமயத்தையும் உலகுக்கு ஈந்தனர்.

## தனிச் சிறப்பு ஏன் ?

இறந்தவன் உடலையும் வயது முதிர்ந்தவன் மூப்பால் முறிந்த உடலையும் நாளும் கண்டு கொண்டு தான் இருக்கிறோம். ஆனால் இவற்றைக் கண்ட சித்தார்த்தன் எண்ணம் வேலை செய்யத் தொடங் கிற்று. ஆப்பிள் பழம் மரத்திலிருந்து கீழே விழுவதைப் பலரும் கண்டதுண்டு. ஆனால் ஒரு நியூட்டனுடைய எண்ணம் வேலை செய்யத் தொடங்கிற்று. இவ் இருவருக்கும் வலுவான முறையில் எண்ணம் பணி புரியத் தொடங்கிற்று. அதன் பயனாக ஒருவர் உலகம் வியக்கும் மெய்ஞ்ஞானத்தைப் பெற்றார். மற்றவர் உலகம் வியக்கும் விஞ்ஞானக் கொள்கை ஒன்றைக் (புவியின் ஈர்ப்புச் சக்தி) கண்டார். இறந்தவனைக் கண்ட பலரும் ஏன் மனிதன் சாக வேண்டும், ஏன் மனிதன் துயரில் அழுந்த வேண்டும் என்றுகூட எண்ணியிருக்கலாம்! பழம் கீழே ஏன் விழ வேண்டும் என்றுகூடப் பலர் எண்ணி இருக்கலாம். அப்படி யானால் பலரும் இவ்வாறு எண்ணியிருக்கக் கூடும் எனில் புத்தனுக்கும், நியூட்டனுக்கும் மட்டும் ஏன்

தனிச் சிறப்பை அளிக்க வேண்டும்? இந்த வினா நியாயமானதே! ஏனையோர் இதுபற்றி எண்ணினாலும் அவர்கள் அதனைத் தொடரவில்லை. காரணம் அவர்கள் திண்ணியர் அல்லர். ஆனால் புத்தனும், நியூட்டனும் திண்ணியர் ஆக இருந்தமையின் அவர்கள் மேலும் மேலும் அந்த முதல் எண்ணத்தைப் பின்பற்றித் தொடர்ந்து சிந்தித்தனர். அதன் பயனாகப் பௌத்தச் சித்தாந்தமும், புவி ஈர்ப்புச் சித்தாந்தமும் பிறந்தன. எண்ணம் ஆற்றல் உடையது என்பதை நிரூபிக்கவே இந்த உதாரணங்கள். நாம் திண்ணியராக இருந்தால்தான் நம்முடைய எண்ணம் ஆற்றல் உடையதாக இருக்கும்.

இனி இந்த எண்ண வளர்ச்சி இருவகையில் பணி புரிவதை மனவியலார் கண்டுள்ளனர். புத்தன், ஐன்ஸ்டீன் நியூட்டன், ஆதிசங்கரர் என்பவர்கட்கு இந்த எண்ண வளர்ச்சி தகுந்த முறையில் (Logical Thinking) முன்னேறிற்று. ஆற்றலுடையவர்கள் எண்ண வளர்ச்சி விஞ்ஞான உண்மையையும், மெய்ஞ்ஞான உண்மையையும் காட்ட முடியும் என்பதை அறிவுறுத்தவே இந்த நால்வரையும் உதாரணமாகக் காட்டினோம்.

## உள்ளுணர்வு என்பது யாது?

இனி இதன் மறுதலையாகத் தருக்க முறையில் வளராமல் உள்ளுணர்வினால் (Intution) விஞ்ஞான, மெய்ஞ்ஞான உண்மைகளைக் காண்பதும் உண்டு. இதுவும் ஆற்றலுடைய எண்ண வளர்ச்சியின் ஒரு கூறேயாகும். இன்றைய வரையில் மனவியலார்க்கு உள்ளுணர்வு என்பது புதிராகவே இருந்து வருகிறது.

இறைவனை அறியப் பயன்படுவதே உள்ளுணர்வு என்று கூறும் சைபைனோசா (Spinoza) முதல் இது அக மனத்தில் நடைபெறும் எண்ண வளர்ச்சி என்று கூறுகின்ற மனவியலார் வரை பல பிரிவினர் உள்ளனர். உள்ளுணர்வு எவ்வாறு தோன்றி எவ்வாறு தொழிற்படுகின்றது என்பதை இன்னும் மனவியலார் அறிய முடியவில்லையாதலின் இதுபற்றிய குழப்பம் இருந்து வருவது நியாயந்தான்.

புறமனத்தில் எண்ண ஓட்டம் நிகழ்வதை நாமும் ஒருவாறு அறிய முடிகிறது. அறிவின் துணைகொண்டு நடைபெறும் இதனை நாம் அறிய முடிகிறது. மேலும் இந்த எண்ண ஓட்டத்தை நெறிப்படுத்தவும் திசை திருப்பவும், மேலும் உந்தவும் நம்மால் முடியும். நம் புற மனத்தைக் கட்டுப்படுத்தி இதனைச் செய்ய இயலும் என்பதை அவரவர் அனுபவத்திலேயே காண்டல் கூடும். மனத்தைக் கட்டுப்படுத்தி எண்ண ஓட்டத்தைத் தம் விருப்பம் போல் திசை திருப்பும் பயிற்சி உடையவர்கள் நல்ல எண்ண ஆற்றல் உடையவர்களாய் இருப்பர். எண்ணத்தைத் திசை திருப்பிச் செலுத்தும் ஆற்றல் உடையவர்கள் விஞ்ஞானிகளாகவும் இருக்கலாம்; மெய்ஞ்ஞானிகளாகவும் இருக்கலாம். இத்தகையவர்கட்கு ஓரோவழி நிகழ்கின்றதே உள்ளுணர்வு.

## உள்ளுணர்வு பற்றிய இரு வேறு கருத்துகள்

இந்த உள்ளுணர்வு எங்கே தோன்றி எவ்வாறு நிகழ்கின்றது என்பது பற்றிய கருத்து வேறுபாடுகள் நிரம்ப உண்டு. இந்த நாட்டினரைப் பொறுத்தமட்டில் மிகப் பழங்காலந்தொட்டே உள்ளுணர்வு பற்றி அறிந்திருந்தனர் என்று கூறல் பொருந்தும். தக்கவர்கள்

அகமனத்தில் இறையருளால் பொள்ளெனத் தோன்றுவதே உள்ளுணர்வு என்ற கருத்து இங்கு நிலவி வந்துள்ளது.

மேலை நாட்டாரைப் பொறுத்தவரை இக் கருத்து வேறுவிதமாகப் பேசப்படுகிறது. நீண்ட காலம் ஒன்றைப்பற்றி ஒருவர் சிந்திப்பதாக வைத்துக் கொள்வோம். இந்தச் சிந்தனை அவருடைய புற மனத்தில் பருமையாக நிகழ்வதாகும். ஆனால் மிக நீண்ட காலம் அவருடைய எண்ண ஓட்டம் ஒரு கருத்தைப்பற்றிச் சுற்றி வந்தமையின் அந்தப் பருமையான எண்ண ஓட்டம் மெள்ள மெள்ள நுண்மை எய்தி அவருடைய அக மனத்தில் பாய்கின்றது. எந்த ஒன்றிற்கு விடை காண வேண்டும் என்று அவர் புற மன எண்ண ஓட்டத்தில் ஈடுபட்டாரோ அந்த விடை புற மன எண்ண ஓட்டத்தில் புலப்படாமல் அகமனத்தில் எதிர்பாரா நேரங்களில், ஏன்? உறக்கத்திலுங்கூடத் தோன்றுவது உண்டு. காரண காரிய அடிப்படையில் இது தோன்றுவதில்லை. எனவேதான் இதனை உள் ளுணர்வு என நாம் கூறுகிறோம். இதனை ஏற்றுக் கொள்ளாத மேனாட்டு மனவியலார் சிலர் புற மன எண்ண ஓட்டம் ஓரளவைத் தாண்டிச் செல்லும் பொழுது அக மனத்திலும் சென்று படிந்து விடுகிறது என்பர்.

அகமனத்தில் படிந்ததை நாம் கட்டுப்படுத்தவோ அறியவோ முடியாது. ஆனாலும் அகமனத்துப் பதிந்த இந்த எண்ண ஓட்டம் அதனுள்ளேயே விரிந்து ஒரு வகையாக விடை கண்டு விடுகிறது. அந்த விடையின் வெளிப்பாடே உள்ளுணர்வு என்று கூறப்பெறுகிறது

என்று அவர்கள் கூறுகிறார்கள். நம் புற மனக் கட்டுப் பாட்டுக்கும் உந்தலுக்கும், ஏவுதலுக்கும் அப்பாற் பட்டது இது என்பதை அவர்களும் ஏற்றுக் கொள்ளுகின்றனர். புற மனத்தில் நிகழும் எண்ண ஓட்டத்துக்கு உள்ள வலிமை நம் முயற்சியால் தரப் பெறுவது. ஆனால் உள்ளுணர்வுக்கு ஏற்படும் வலிமை தம் முயற்சிக்கு அப்பாற்பட்டது. என்றாலும் புற மனத்தில் நிகழும் எண்ண ஓட்டம் மேலோங்கி வழிவதனாலேயே அக மன எண்ண ஓட்டம் ஏற்படு கிறதாகலின் புற மன ஓட்டம் அதிக வலுவுடைய தாயின் அக மன எண்ண ஓட்டமும் வலுப்பெற்று விளங்கும்.

**சுயக் கற்பனை**

எண்ணத்தின் ஆற்றல் மற்றொரு வகையிலும் தொழிற்படுகிறது. வலுவான எண்ண ஓட்டம் பொருள்களை ஏன்? தன்னைப் படைக்கும் மனித னையே கூட மாற்ற வல்லதாகும். எவ்வித நோயும் இல்லாமல் நல்லுடம்புடன் இருக்கும் ஒருவன் தனக்கு நோய் இருப்பதாக நம்பி ஓயாமல் அது பற்றியே நினைப்பதன் மூலம் அந்த நோயை உண்மையிலேயே பெற்று விடமுடியும். இதனை மேனாட்டார் சுயக் கற்பனை (Auto suggestion) என்பர். தொழு நோயாளிகளுக்கு மருத்துவம் செய்யச் சென்ற பல இளைஞர்கள் இந்தச் சுயக் கற்பனை மூலம் அந் நோயைப் பெற்று, அதன் விளைவுகளையும் உடலில் பெற்றதாகவும், அந்த இடத்தை விட்டு வெளியேறிய சில நாட்களில் நோய் முற்றும் நீங்கப் பெற்றதாகவும் மனவியலார் கூறுகின்றனர். 'யாது ஒன்று நினைக்கத் தான் அதுவாதல்' என்று சைவ சமயவாதிகள்

இதனைக் குறிக்கின்றனர். சுயக் கற்பனையாகிய எண்ண ஓட்டத்தின் வலு இத்தகையது என்பதை இன்றைய விஞ்ஞான - மனவியலார் காண்பதற்கு ஆயிரம் ஆண்டுகளின் முன்னரே நம் முன்னோர் அதனை அறிந்து 'தான் அதுவாதல்' நிலையும் அதற்கு உண்டு எனக் கூறிச் சென்றனர். சுயக் கற்பனையாகிய ஆட்டோசஜஷன் என்பது, இல்லாத ஒரு நோயை உண்டாக்கி அந்நோய் உடலில் செய்கின்ற மாற்றங் களையும் செய்ய முடியும் என மனவியலார் கூறுவதை அறியும் பொழுது நம் முன்னோரின் தீர்க்கதரிசனத்தை அறிந்து வியக்காமல் இருக்க முடியவில்லை.

**செயற்கருஞ் செயலா இவை ?**

இல்லாத நோயை உண்டாக்கி உடற்கூறிலும் மாற்றத்தைத் தரும் ஆற்றல் சுய்க் கற்பனைக்கு உண்டு என்றால் இதனைத் தலை கீழாகவும் செய்ய முடியு மன்றோ ? நோயால் வாடும் ஒருவன் தனக்கு அத்தகைய நோயே இல்லை என்று வலுவாக நினைப்பதன் மூலம் உண்மையிலேயே அவனிடம் உள்ள நோயையும் குணப்படுத்திக்கொள்ள முடியும் அல்லவா ? இதனையே நம் முன்னோர், தியான வழியாலும், பக்தி வழியாலும் தமக்குற்ற இடரைப் போக்கிக் கொண்டனர் என்று கூறினர். ஆழ்ந்த தியானத்தின் மூலம் இத்தகைய ஒரு காரியத்தை ஒருவன் செய்து கொள்ள முடியும் என்பதை அறிந்த பிறகு இதற்கு அடுத்த நிலையை எளிதில் புரிந்து கொள்ளலாம். இத்தகைய தியானத்தின் மூலம் பிறருடைய நோயைப் போக்கவும் கூடும். எண்ணத் தின் ஆற்றலுக்கு இதுவும் எடுத்துக்காட்டாகும். நாயன் மார்கள், இயேசு போன்றவர்கள் நோயுற்றவர்களைத் தடவிக்கொடுத்து அவர்கள் நோயைப் போக்கினர்

என்பதை அறிகிறோம், இது எவ்வாறு முடிந்தது? தங்கள் எண்ணத்தின் ஆற்றலால்தான் இதனைச் செய்தனர். எனினும் தாம் செய்ததாகக் கூறாமல் இறைவன் தம்மைக் கருவியாகக் கொண்டு இதனை முடித்தான் என்றே கூறினர். இவற்றை இன்று செயற்கருஞ் செயல்கள் என்று கூறுகிறோம். அவ்வாறு கூறுவது சரியா எனச் சிந்திக்க வேண்டும்.

**தியானம் ஏன் ?**

தியானத்தின் பெருமையை நம் முன்னோர் வலியுறுத்தியதன் நோக்கம் என்ன என்பதை இன்று ஒருவாறு அறிய முடிகிறது. எண்ணத்தின் ஆற்றலை நன்கு அறிந்த ஒரு மனிதன் நற்பண்புகளால் உயர வேண்டுமாயின் அவனுடைய எண்ணங்களை வலுவுடையதாக்கி வளர்க்க வேண்டும். அலைந்து திரிகின்ற மனம் வலுவான ஆற்றல் பொருந்திய எண்ணத்தைப் பெறவோ, வளர்க்கவோ முடியாது. வலுவுடைய எண்ணங்களை வளர்க்க ஒரு முகப்பட்ட மனம் வேண்டும்; அந்த ஒரு முகப்பட்ட மனம் தியானத்தின் வழியில்தான் கிடைக்கும். மோட்சம் போக விரும்புபவர்கள் மட்டுமே தியானம் மேற் கொள்ள வேண்டும் என்ற தவறான எண்ணம் சிலரிடையே இருக்கக் காண்கிறோம். எண்ணத்தின் ஆற்றலை நன்கு அறிந்து, அதன் பயனை அடைய விரும்புபவர்கள் மனத்தை ஒரு முகப்படுத்தத் தேவையான தியான வழியை மேற்கொள்ள வேண்டும். மனம் ஒரு முகப்பட்டவுடன் தூய எண்ணங்களை அதில் நிரப்பி வலுவுடையதாகச் செய்து அவற்றை வளர்க்க வேண்டும். அதன் பயனாக ஒரு மனிதன் எதனையும் ஆக்கவும் அழிக்கவும் வல்லமை பெற முடியும். எண்ணத்தின் ஆற்றல் அளவிடற்கரியது.

